ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாயண தனிச்லோகம்.



ஸ்ரீவத்ஸ சக்ரவர்த்தி, அபிநவ பட்டபாணர்,

ரா. வே. கிருஷ்ணமாசாரியாரால்

நாலாயிர திவ்ய ப்ரபந்த வ்யாக்யானங்களிலிருந்து

எடுத்துத் தொகுக்கப்பட்டு



சி. ர. ஸ்ரீநிவாஸபாட்டராசாரியாரால்




கும்பகோணம்

ஸ்ரீகோபாலவிலாஸ அச்சுக்கூடத்தில்

பதிப்பித்து

வெளியிடப்பட்டது

---

1920

[2-ரூபாய் விலை]

# விஜ்ஞாபநம்.



அடியேன் கொஞ்சகாலமாக நாலாயிரதிவ்யப்ரபந்தத்தை வ்யாக்யாநத்துடன் ஸேவித்து வரும்போது, ஆங்காங்கு வ்யாக்யாதாக்கள் அந்தந்தவிடங்களுக்குத்தக்கபடி ஸ்ரீராமாயண சுலோகங்களை எடுத்தெழுதி மிகவுமழகாய் வ்யாக்யாநஞ் செய்வதைப் பார்த்தவளவில் இவற்றைத்தனியாகப் பதிப்பித்து வெளியிடவேண்டுமென்று அடியேனுக்கு ஒரெண்ணம்உண்டாயிற்று. இதைக்கருதி அந்த சுலோகங்களை காண்ட ஸர்க்க க்ரமத்தில் வரிசைப்படுத்தி எழுதிவைத்தேன். ஆனால், பலவிதத்திலும் சிரமமுண்டாகுமென்று நினைத்து அவ்வெண்ணத்தை நிறைவேற்றுமலிருந்து விட்டேன். இவ்வாறிருக்கையில் நண்பாகிய ஸி. ர. ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸபாட்டாசார் ஸ்வாமி தானே ஸகல சிரமத்தையும் ஏற்றுக்கொள்வதாகச் சொல்லி, அடியேனை உத்ஸாஹப்படுத்தியதுகொண்டு, அடியேன் மீண்டும் இதிலிறங்கினேன்.

பகவத்க்ருபையால் இந்த நல்லகாரியம் ஒருவாறு நிறைவேறிற்று. இதை வெளியிட்டதில் அடியேனுடைய முக்கியமான உத்தேசம் இந்த வ்யாக்யாநங்களின் அழகைக் கண்டு ரஸிகர்கள் ஆநந்திக்க வேண்டுமென்பது தான்.

கூடியவரையில் அடியேன் ஜாக்ரதையாகவே தொகுத்திருக்கின்றேனென்றாலும், தவறுகளை மஹான்கள் தெரியப் படுத்தினால் அவர்களிடம் நன்றியுள்ளவனுயிருப்பேன்.

ஸ்ரீமுனித்ரயமந்திரம்.
கும்பகோணம்.
31—12—20.

ரா. வெ. கிருஷ்ணமாசாரியன்.

ஸ்ரீ ராமாய நம: ॥

# ஸ்ரீ ராமாயண

## தனிச்லோகம்.



**मुने वक्ष्याम्यहं बुद्ध्वा ।**

முநே வக்ஷ்யாம்யஹம் புத்வா ।

ஸம்க்ஷேபம். 7-வது சுலோகம்.

### பதவுரை.

முநே = ஏ வால்மீகிமுனிவரே, அஹம் = நான், புத்வா = அறிந்து, வக்ஷ்யாமி = சொல்லுவேன்.

### ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்யானம்.

( சிறியதிருமடல். 21 )

"ஜ்ஞாதுமேவம்விதம் நரம்" என்று ப்ரஸ்நம்(ஶ்நம்)பண்ணின ஸ்ரீவால்மீகிபகவானுக்கு ஸ்ரீநாரதபகவான் ஆனவாறே சொல்லுகிறேனென்றான். அதுக்குக் கருத்தென்னென்னில்— அநந்யபரனாய் ப்ரக்ருதிஸ்த்தனானவாறே சொல்லுகிறேனென்றானிறே. பதார்த்தங்களை உள்ளபடி அறிந்திருக்கிறவன் இனி ப்ரக்ருதிஸ்த்தனானவாறே சொல்லுகிறேனென்றது--ப்ரஸ்நரூபத்தாலே ராமகுணங்களை ஸ்மரித்து நெஞ்சை உடையப் பண்ணினானாயிற்று, தெளிந்து நான் ப்ரக்ருதிஸ்த்தனானவாறே சொல்லுகிறேனென்றானுமித்தனையிறே. "நினைதோறும் சொல்லுந்தோறும் நெஞ்சிடிந்துகும்" என்னுமாப்போலே.

அரும்பதம்— ஸர்வ்ஜ்ஞரான நாரதர் இப்போது விசாரித்துச்சொல்லவேண்டுவதில்லையே. ஆயிருக்கச்செய்தேயும் வால்மீகி பகவான் பகவத்குணங்களை ஸ்மரிப்பிக்க அதனாலே வித்த (விஶ) ராய்க் கலங்கி விசாரித்துச் சொல்லுகிறேனென்கிறாரென்றபடி. (கண்ணிநுண்சிறுத்தாம்பு)

## २. वाग्मी श्रीमान् ।

உ. வாம்ீ ஸ்ரீ மாநு ।

ஸம்க்ஷேபம். 9-வது சுலோகம்.

### பதவுரை.

(ஸ்ரீராமன்) வாம்ீ = நன்ருகப்பேசுந்திறமையுள்ளவன், ஸ்ரீமாநு = சோபையுள்ளவன்.

பெரி-வ்யா. (திருப்பாவை. 16) பூ அலர்ந்தாப்போலே வார்த்தை சொல்லுகிறபோதை ஒஷ்ட்டஸ்ப்புரணமென்னவுமாம். "வாம்ீ ஸ்ரீமாநு"

அரும்பதம்— பூவித்யாதி. ஸ்ப்புரணம்—ப்ரகாசம். வார்த்தை சொல்லும்போதைத் திருவதாரத்தில் சிவப்பை 'ஶ்ரீமான்' என்றதென்று திருவுள்ளம்பற்றி ப்ரமாணம் காட்டுகிருர்—வாக்மீத்யாதி.

## ३. सर्वदाभिगतः सद्भिः समुद्र इव सिन्धुभिः ।

ந. ஸவ்தாபிமதஃ ஸத்ிஃ ஸமுத்ர இவ ஸிந்துபிஃ ॥

ஸம்க்ஷேபம். 15-வது சுலோகம்.

### பதவுரை.

(ஸ்ரீராமன்) ஸமுத்ரஃ = கடல், ஸிந்துபிஃ இவ = நதிகளால் (அடையப்படுவது)போல், ஸத்ிஃ = ஸாதுக்களால், ஸவ்தா = எப்பொழுதும், அபிமதஃ = தாமாகவந்து அடையப்பட்டவன்.

பெ-வ்யா- (திருவிருத்தம். 100) ஸவ்தாபிமதஸத்ிஃ— பெருமாள் ஶ்ரமஞ்செய்துவிட்டு ஒரு நிழலிலே இருந்தவளவிலே பரஸம்ருத்த்யேகப்ரயோஜநரானவர்கள் அதுக்கு உறுப்பானவை கற்கைக்காக வந்து படுகாடுகிடப்பர்கள். ஸமுத்ர இவ ஸிந்துபிஃ— இப்படிக்கிடக்கிறது இவர்குறை நிரம்புகைக்கோவென்னில்—பண்டே நிரம்பி நிற்கிற கடலை நிரப்புகைக்கன்றிறே ஆறுகள் வந்து புகுருகிறது. நடுவு த (ய) ரிப்பில்லாமைபித்தனையிறே.

அரும்ப— அதுக்கு-பரஸம்ருத்திக்கு.

## ४. गुहेन सहितो रामो लक्ष्मणेन च सीतया ।

௪. 𑌗𑍁𑌹𑍇𑌨 𑌸𑌹𑌿𑌤𑍋 𑌰𑌾𑌮𑍋 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑍇𑌨 𑌚 𑌸𑍀𑌤𑌯𑌾 ।

ஸம்க்ஷேபம். 28-வது சுலோகம்.

### பதவுரை

𑌰𑌾𑌮𑌃 = ராமன், 𑌗𑍁𑌹𑍇𑌨 = குஹனோடும், 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑍇𑌨 = லக்ஷ்மணனோடும், 𑌸𑍀𑌤𑌯𑌾 𑌚 = ஸீதையோடும், 𑌸𑌹𑌿𑌤𑌃 = கூடினான்.

ஈடு-(திருவாய்மொழி.2.4. ப்ரவேசம்) கூடப்போன இளைய பெருமாளோடும் பிராட்டியோடும் கூடிற்றாய்த் தோற்றிற்று ஸ்ரீ குஹப்பெருமாளோடு கூடினபின்பிறே. இப்படியிறே அவன்றனக்கும் அந்வயவ்யதிரேகங்களிருக்கும்படி.

அரும்ப— அந்வயத்தில் கூடினதாயிருக்குமென்னுமதுக்கு உதாஹரணம்— குஹேநேத்யாதி. அவன்றனக்கும்- 'ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:' என்னுமவனுக்கும்.

## ५. रम्यमावसथं कृत्वा रममाणा वने त्रयः ।

௫. 𑌰𑌮𑍍𑌯𑌮𑌾𑌵𑌸𑌥𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌰𑌮𑌮𑌾𑌣𑌾 𑌵𑌨𑍇 𑌤𑍍𑌰𑌯𑌃 ।

ஸம்க்ஷேபம். 30-வது சுலோகம்.

ப—ரை. 𑌤𑍍𑌰𑌯𑌃 = (ராமன், லக்ஷ்மணன், ஸீதை, ஆகிய) மூன்றுபேரும், 𑌰𑌮𑍍𑌯𑌂 = அழகிய, 𑌆𑌵𑌸𑌥𑌂 = க்ருஹத்தை (பர்ணசாலையை) 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 = செய்து (கட்டி) 𑌵𑌨𑍇 = காட்டில், 𑌰𑌮𑌮𑌾𑌣𑌾𑌃 = களிக்கின்றவராய் (இருந்தனர்)

ஈடு— (திருவாய்- 2-8-1) 𑌰𑌮𑍍𑌯𑌮𑌾𑌵𑌸𑌥𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾— அறுபதினாயிரம் ஆண்டு மலடுநின்ற சக்ரவர்த்தி தன்னாதரத்துக்குப்போருப்படி சமைத்த மாளிகைகளிலும், திருவுள்ளத்துக்குப் பொருந்தி அழகியதாயிருந்தது காட்டிலே இளையபெருமாள் சமைத்த ஆச்ரமமாயிற்று. 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌰𑌮𑌮𑌾𑌣𑌾𑌃— நாயகரான பெருமாள் ரஸமல்லவே பிராட்டியது, பிராட்டிக்குப் பிறக்கும் ரஸமன்றே பெருமாளது, அப்படியே அச்சேர்த்தி கண்டு உகக்குமவனிறே இளையபெ

ருமாள். வநே—'படைவீடர் காட்டிலே ரமித்தார்கள்' என்று தோற்றுமே, காடர் காட்டிலே வர்த்தித்தாப்போலே பொருந்தியிருந்தபடி.

அரும்ப— சமைத்த-ஆக்கின, கட்டின என்றபடி. நாயகநாயிகைகள் பரஸ்பர ஸம்ஸ்லேஷத்தாலே ரமிக்கிறார்கள். இளையபெருமாள் ரமிக்கும்படியென்னென்ன —— நாயகரானவித்யாதி- விஷயபேத (ஹேது) ப்ரயுக்த: ரஸபேத: ஸர்வத்ர ஸமாந இதி பா(ஸா)வ:. சித்ரகூடத்தில் இருப்பைச்சொன்னபோதே 'வநே' என்றது ஸித்தமாயிருக்க, புந: 'வநே' என்று விசேஷித்ததுக்கு பாவம் (ஸாவம்) —படைவீடரித்யாதி (படைவீடு= நகரம்).

பெரி-வ்யா (நாச்சியார் திருமொழி. 14-1) பெருமாளும் பிராட்டியுமாய்ப் பள்ளிகொண்டருளும்போது இளையபெருமாள் கையும் வில்லுமாய் உணர்ந்துநின்று நோக்கி, 'ரமமாணௌ' என்கிறபடியே இருவருமான கலவியில் பிறக்கும் ஹர்ஷத்தில் மூவராகச் சொல்லலாம்படி அந்வயித்து அவர்களுடைய ஸம்ஸ்லேஷத்துக்கு வர்த்த (வ்ருத்த) கராயிருக்கும்.

## ६. नन्दिग्रामेऽकरोद्राज्यं रामागमनकाङ्क्षया ।

ஸூ. நந்திக்ராமேऽகரோத்ராஜ்யம் ராமாகமநகாங்க்ஷயா ।

ஸம்க்ஷேபம். 37-வது சுலோகம்.

ப—ரை (பாதன்) ராமாகமநகாங்க்ஷயா = ராமனது வரவில் விருப்பத்தால், நந்திக்ராமே = நந்திக்ராமம் என்னுமிடத்தில், ராஜ்யம் = ராஜ்யத்தை, அகரோத் = செய்தான் (நடத்தினான்).

ஈடு—(தி—வாய். 2-4-1) ராமாகமநகாங்க்ஷயா—இன்னமொருகால் அவர்முகத்திலே விழிக்கிலாமாகில் அருமந்த ப்ராணனைப் பாழே போக்குகிறதென் என்று ராஜ்யத்தையும் தொட்டுக்கொண்டு கிடந்தானிறே.

அரும்ப—அருமந்த= ஶ்லாக்யமான. பாழே= வ்யர்த்தமே.

## ७. पम्पातीरे हनुमता संगतो वानरेण ह ।

எ. பம்பாதீரே ஹநுமதா ஸங்கதோ வாநரேண ஹ ।

ஸம்க்ஷேபம். 56-வது சுலோகம்.

ப—ரை. (ராமன்) பம்பாதீரே = பம்பையென்னும் தாமரைப்பொய்கையின் கரையில், ஹநூமதா = ஹநுமான் என்கிற, வாநரேண = குரங்கோடு, ஸங்கத: = கூடினுன். ஹ = ஸந்தோஷம்.

ஈடு- (தி—வாய். 6–1–1) வழிப்பறியுண்டவிடத்தே தாய்முகங் காட்டினுப்போலே காணும் பிராட்டியைப் பிரிந்து நோவுபடுகிற ஸமயத்திலே திருவடி வந்து முகங்காட்டினபடி. ஹநூமதா— தளர்ந்து 'ஆவாரார் துணை' என்று தடுமாறுகிற ஸமயத்திலே, வெற்றித்தழும்புசுமந்த ஆண்பிள்ளையோடே கூடப்பெற்றதென்கிறது. வாநரேண— ஸந்யாஸிவேஷங்கொண்டு வந்து பிரிவை விளைத்து நலிவுபண்ணுமவனைப் போலன்றிக்கே, செவ்வியனொருவனோடே சேரப்பெறுவதே. ஹ—ரிஷி கொண்டாடுகிறுன். போக (ஸௌஹ)த்துக்குச் சேர்த்துக்கொள்ளுகிறோம், ஸத்தைநோக்குவாரைப் பெற்றோமிறே என்று ஹ்ருஷ்டனுகிறுன்.

அரும்பதம்— 'பம்பாதீரே ஸங்கத:' என்றதுக்கு பாவம்— வழிப்பறியித்யாதி. 'வெற்றித்தழும்புசுமந்த' என்றது 'ஹநுமதா' என்றத்தைப்பற்ற. கொண்டாடுகிறதுக்கு ஹேது ஏதென்ன— போகத்துக்கித்யாதி.

८. ततो वानरराजेन ।

அ. ததோ வாநரராஜேந ।

ஸம்க்ஷேபம். 59-வது சுலோகம்.

ப—ரை. தத: = (ஸ்நேஹமான) பிறகு, வாநரராஜேந = குரங்குகளுக்கு அரசனுல் (ஸுக்ரீவனுல்) (வாலிக்கும் தனக்கும் ஏற்பட்ட விரோதம் முதலியன ராமனிடத்தில் தெரிவிக்கப்பட்டன)

பெ—வ்யா. (நாச்சி-7-7) பெருமாள் மஹாராஜரை முடிசூட்டுவதற்குமுன்னே 'வாநரராஜேந' என்றுனிறே ரிஷி.

९. तेन नादेन महता निर्जगाम हरीश्वरः ।
अनुमान्य तदा तारां सुग्रीवेण समागतः ॥

கூ. தேந நாதேந மஹதா நிர்ஜகாம ஹரீஸ்வர: ।
அநுமாந்ய ததா தாராம் ஸுக்ரீவேண ஸமாகத: ॥

ஸம்க்ஷேபம். 66½-வது சுலோகம்.

ப—ரை. மஹதா = பெரிய, தேந = அந்த, நாதேந = சப்தம் நிமித்தமாக, ஹரீஶ்வர: = வானரராஜனான வாலி, நிஜகாம = அந்தப்புரத்திலிருந்து வெளிக்கிளம்பினான். ததா = அப்போது, தாராம் = தாரை என்னும் தனது பத்னியை, அநுமாந்ய = (நல்லவார்த்தைசொல்லி) ஸம்மதிக்கச்செய்து, ஸுக்ரீவேண = ஸுக்ரீவனோடு, ஸமாகத: = (யுத்தஞ்செய்வதற்காக) வந்து சேர்ந்தான். ததா தாராம் அநுமாந்ய நிஜகாம என்றும் அந்வயிக்கலாம்.

பெ-வ்யா. (நாச்சி. 10–1) மஹாராஜருடைய மிடற்றோசையின் தசைப்பைக்கேட்டு, 'முன்புபோலே கோழைத்தனமாயிருந்ததில்லை. ஓரடி இவனுக்கு உண்டாகவேணும். நமக்கு இரைபோருமாகில் பார்ப்போம்' என்று புறப்பட்டானிறே.

பெ-வ்யா. (பெரியதிரு. 9-5-8) முன்பு பலகாலும் நம்வாசலிலே வந்து அறைகூவக் கண்டறிவோம். இப்போது அங்ஙனன்றிக்கே இவன்மிடற்றோசையில் தசை பிறந்தபடியால் இதுக்கு ஓரடி உண்டாகவேணும். ப்ரப(வ)லனாயிருப்பானொருவனைப்பற்றி வந்தானாகவேணும். நிஜகாம— முன்போலே புறப்பட்டுத் தனையிலே கைமோதிப்போகாதே இவனும் இவனடியாக வந்தவனும் இலக்குப்போருமாகில் புறப்பட்டுப் போரப் பார்ப்போமென்று புறப்பட்டான். அடியுண்டென்றறிந்தானாகில் பின்னைப் புறப்படுவானென்னென்னில்— ஹரீஶ்வர:—எதிரிகள் ஜீவித்திருக்க உஜ்ஜீவித்திருந்தவனல்லாமையாலே.

அரும்பதம்— 'ஜகாம' என்னாதே 'நிர்ஜகாம' என்றத்தாலே ப(ல)விதம்— முன்பித்யாதி. 'தரையிலே கைமோதி' என்றது எதிரி லக்ஷ்யம்போராமையாலே யுத்தகண்டூதிதீர மோதி என்கை. (கண்டூதி—தினவு)

பெரி-வ்யா. (திருவிருத்தப்–51) மஹதா — மஹாராஜர் மிடற்றில் தசைப்புக்கு உரமுண்டென்று தோற்றும்படியிருக்கை நிஜகாம—புறப்பட்டான். ஹரீஶ்வர:—பண்டு சிலர் அறைகூவ இருந்தறியாதவன். அநுமாந்ய—ஆண்களோடே கலக்கவேண்டாவோ என்றான். ததா —ஸர்வஸ்வஹரணம் பண்ணினாலும் புறப்

படவொண்ணாத அவஸ்த்தை. 'பர்த்தாரம் பரிஷஸ்வஜே' வுக்கு ஆசைப்பட்டிருக்குமே அவள்.

அரும்பதம்—'ஆண்களோடே கலக்கவேண்டாவோ என்றான்' என்றது- நானவனோடே ஜயித்து வந்தாலன்றோ நீ ஒருபுருஷனோடே கலந்ததாவதென்று ஸம்மதிக்கப்பண்ணினானென்றபடி. அவள் அப்படி புருஷத்வத்தைக்கண்டு ஸம்ஶ்லேஷிக்குமோ வென்ன அருளிச்செய்கிறார்— பர்த்தாரம் என்று. (அறைகூவ = ஜயத்வ (ஸ்வ) நி பண்ண).

ஈடு. (தி-வாய். 10-6-5) மஹாராஜர் வந்து அறைகூவ, 'பூர்வக்ஷணத்திலே பரிப(ஹ)வப்பட்டுப்போனவன் இப்போது வந்து அறைகூவும்போது வெறுமனல்ல, போதில்லாப்போதிலே நீ புறப்படக்கடவையல்லை' என்று தாரை காற்கட்டச்செய்தேயும் க்ஷத்ரியனாகையாலே பரிப(ஹ)வம் பொறுக்கமாட்டாமை புறப்பட்டு, 'மிடற்றோசை இருந்தபடி என்? பழைய கோழைத்தனம் அற்றுத் தெளிந்து முழங்கியிருந்தது. இதுக்கு ஓரடி உண்டாக வேணும். உண்டாய்த்தாகில் நமக்கிரை போருகிறது' என்றானிறே. ஹ்ரீஸ்வரஃ— இதுக்குமுன்பு பிறர் அறைகூவ ஜீவித்தவனல்லன்.

१०. अभिषिच्य च लङ्कायां राक्षसेन्द्रं विभीषणम् ।
कृतकृत्यस्तदा रामो विज्वरः प्रमुमोद ह ॥

௧௦. அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் ।
க்ருதக்ருத்யஸ்ததா ராமோ விஜ்வரஃ ப்ரமுமோத ஹ ॥

ஸம்க்ஷேபம். 83-வது சுலோகம்.

ப—ரை. லங்காயாம் = இலங்கையில், விபீஷணம் = விபீஷணனை, ராக்ஷஸேந்த்ரம் = ராக்ஷஸரின் அரசனாக, அபிஷிச்ய = பட்டாபிஷேகஞ்செய்து, ததா = அப்பொழுது, க்ருதக்ருத்யஃ = செய்யவேண்டியதைச்செய்து முடித்த, (க்ருதார்த்தனான) ராமஃ = ராமன், விஜ்வரஃ = தாபம் நீங்கினவனாய், ப்ரமுமோத = ஸந்தோஷித்தான்.

ஈடு. (தி-வாய். 6-2-10) அபிஷிச்ய-க்ருதக்ருத்யஃ = ஸ்ரீபரதாழ்வானைப்போலே 'நான்முடிசூடேன், நீர் முடிசூடும்' என்று முடிக்கிருய்க்கில் செய்வதென் என்று உடம்பு வெளுத்துக் காணு

யிவர் இருந்தது. ‘ஒருபடி அத்தலைச் சுமையைக் கழித்துப் போந்தோம். இதுவும் தலைச்சுமையாகில் செய்வது என்’ என்று. இக்ஷ்வாகுவம்ஶ்யர்க்குப் பணியிறே முடிக்கிறாய்க்கை. அடிக்கிறாயாதிருக்கையும் முடிக்கிறாய்க்கையுமிறே ஸ்வரூபம்.

அநும்— ‘அபிஷிச்ய க்ருதக்ருத்ய:’ என்கிறதென் ? அபிஷேகம் பண்ணுவது அருந்தலோ என்ன— ஸ்ரீபரதாழ்வானை யித்யாதி. ஸ்ரீபாதாழ்வான் முடிக்கிறாய்த்தால் இவர்க்கு முடிக்கிறாய்க்கவேணுமோ என்ன— இக்ஷ்வாகுவித்யாதி. ஸ்ரீவிபீஷணாழ்வானை இக்ஷ்வாகுவம்ஶஜரென்றது—ஆக்யா (ஜ்ஞா) ஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம் (ஸுக்ஷமம்) என்றத்தைப்பற்ற. அவர்கள் தாம் முடிக்கிறாய்க்கைக்கு அடி ஏதென்ன, ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்த உரப்பு என்கிறார்— அடிக்கிறாயாதித்யாதி.

११. रामः सीतामनुप्राप्य राज्यं पुनरवाप्तवान्।
प्रहृष्टमुदितो लोकः.....................॥

௧௧. ராம: ஸீதாமநுப்ராப்ய ராஜ்யம் புநரவாப்தவாந் ।
ப்ரஹ்ருஷ்டமுதிதோ லோக: ... ... ... ॥

ஸம்க்ஷேபம். 87-வது சுலோகம்.

ப—ரை. ராம: = ராமன், ஸீதாம் = ஸீதையை, அநுப்ராப்ய = அடைந்து, (ஸீதையோடுசேர்ந்து ஸிம்மாஸனத்திலிருந்து) புந: = மறுபடியும், ராஜ்யம் = ராஜ்யத்தை, அவாப்தவாந் = அடைந்தான். லோக: = உலகம் (ஜனங்கள்) ப்ரஹ்ருஷ்டமுதித: = தேஹத்தில் மயிர்க்கூச்சலும் மனஸ்ஸில் ஸந்தோஷமுமுள்ளதாக (ஆயிற்று)

ஈடு. (தி—வாய். 7-10-1) மாதாபிதாக்களிருவரும் சேரவிருந்து பரியப்புக்கால் ப்ரஜைகளுக்கு ஒருகுறையும் பிறவாதிறே. ஆக, இருவருமான சேர்த்தியாலே தங்களுக்கு ஆநந்தமுண்டாக, அச்சேர்த்தியைக் காண்கையாலே லோகத்துக்கு ஆனந்தமுண்டாக, அதுதன்னைக் கண்டு, ப்ரஜை பால்குடிக்கக்கண்டு உகக்கும் தாயைப்போலே, இவர்களுக்குண்டான ப்ரீதியைக்கண்டு அத்தாலே தாங்கள் இனியராயிருப்பர்களாயிற்று.

१२. नचाग्निजं भयं किंचित् नाप्सु मज्जन्ति जन्तवः ।

௧௨. 𑌨𑌚𑌾𑌗𑍍𑌨𑌿𑌜𑌂 𑌭𑌯𑌂 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 𑌨𑌾𑌪𑍍𑌸𑍁 𑌮𑌜𑍍𑌜𑌨𑍍𑌤𑌿 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃 ।

ஸம்க்ஷேபம். 90-வது சுலோகம்.

ப—ரை. (ராமன் ராஜ்யமாளும்பொழுது) 𑌅𑌗𑍍𑌨𑌿𑌜𑌂= நெருப்பினால் ஏற்படும், 𑌭𑌯𑌂= பீதி, 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍= கொஞ்சங்கூட, 𑌨= இல்லை. 𑌜𑌨𑍍𑌤𑌵𑌃= பிராணிகள், 𑌅𑌪𑍍𑌸𑍁= ஜலத்தில், 𑌨 𑌮𑌜𑍍𑌜𑌨𑍍𑌤𑌿= முழுகிப்போகிறதில்லை.

ஈடு—(தி-வாய். 7-3-1) அக்னியும் சோறு வேவிக்கவேண்டும் ஔஷ்ண்யத்துக்கு மேற்பட உடைத்தாவதில்லை. கொண்டாழக்கடவ ஜலந்தானே கொண்டுமிதக்கப் புக்கது ராமஶரத்துக்கு அஞ்சி. பண்டே கைகண்டிருப்பதொன்றே ஜலந்தான். ‚வேலைவேவ வில்வளைத்தவ’ னிறே.

१३. स चापि रामः परिषद्गतः शनैर्बुभूषया सक्तमना बभूव ह ।

௧௩. 𑌸 𑌚𑌾𑌪𑌿 𑌰𑌾𑌮𑌃 𑌪𑌰𑌿𑌷𑌦𑍍𑌗𑌤𑌃 𑌶𑌨𑍈𑌶𑍍𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌯𑌾 𑌸𑌕𑍍𑌤𑌮𑌨𑌾 𑌬𑌭𑍂𑌵 𑌹 ।

பாலகாண்டம். 4-வது ஸர்க்கம். 36-வது சுலோகம்.

ப—ரை. 𑌸𑌃= அந்த, 𑌰𑌾𑌮𑌃 𑌚𑌾𑌪𑌿= ராமனும், 𑌶𑌨𑍈𑌃= மெதுவாக, 𑌪𑌰𑌿𑌷𑌦𑍍𑌗𑌤𑌃= ஸபையை அடைந்தவனாய், 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑌯𑌾= (கூடவிருந்து) அனுபவிக்கவேண்டும் என்னும் விருப்பத்தால், அல்லது, தான் உயிரோடிருக்கவேண்டும் என்னும் விருப்பத்தால், 𑌸𑌕𑍍𑌤𑌮𑌨𑌾𑌃= (குசலவர்களின் கா(ஶா)னத்தைக் கேட்பதில்) மனப்பற்றுள்ளவனாய், 𑌬𑌭𑍂𑌵= இருந்தான்.

ஈடு. (திரு·வாய். 6-2-6) பெருமதிப்பராய்ப் பாட்டறிந்து கொண்டாடுகைக்குப் போரும்படி பேரறிவாளரான வித்வஜ்ஜநங்களும் தாமுமாகப் பேரோலக்கமிருந்து பிள்ளைகளைப் பாடவிட்டுத் தாம் ஸிம்மாஸநஸ்த்தராயிருந்தார். இவர்கள் தாழவிருக்கத் தாமுயரவிருந்த இடம் தமக்கு அஸஹ்ய(ஹ்ய)மதமாகையாலே ஸிம்மாஸநத்தினின்றும் மெள்ள இழிந்து, தெரியாதபடி

இவர்கள் நடுவே புகுந்திருந்தார். அதுவென்னென்னில்—ராஜா எழுந்திருந்தால் ஓலக்கம் கிளம்புமிறே. தாமெழுந்திருந்தவாறே ஓலக்கம் கிளம்புகிறதாகக் கருதி, மெள்ளப் புகுந்திருந்தாரென்கிறது. இங்ஙன் வேண்டுவானென்னென்னில் — அநுபுபூஷயா என்னுதல், பவிதும் இச்சயா என்னுதல்— இவர்களோடே கூடியிருந்து அநுபவிக்கைக்காக என்னுதல், தாமுளராகைக்காக என்னுதல்.

१४. द्रष्टुं शक्यमयोध्यायां नाविद्वान्न च नास्तिकः ।
सर्वे नराश्च नार्यश्च धर्मशीलाः सुसंयताः ॥

கச. 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌶𑌕𑍍𑌯𑌮𑌯𑍋𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌨𑌾𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍𑌨 𑌚 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑍇 𑌨𑌰𑌾𑌶𑍍𑌚 𑌨𑌾𑌰𑍍𑌯𑌶𑍍𑌚 𑌧𑌰𑍍𑌮𑌶𑍀𑌲𑌾𑌃 𑌸𑍁𑌸𑌂𑌯𑌤𑌾𑌃 ॥

பாலகாண்டம். 6 - 8½.

ப—ரை. 𑌅𑌯𑍋𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌂= அயோத்தியில், 𑌅𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍= படிப்பில்லாதவன், 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂= காணப்பட, ந 𑌶𑌕𑍍𑌯𑌂= முடியாது. 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑌃 𑌚= நாஸ்திகனும், ந= (காணப்பட) முடியாது. 𑌸𑌰𑍍𑌵𑍇= எல்லா, 𑌨𑌰𑌾𑌃 𑌚= புருஷர்களும், 𑌨𑌾𑌰𑍍𑌯𑌃 𑌚 = ஸ்த்ரீகளும், 𑌧𑌰𑍍𑌮𑌶𑍀𑌲𑌾𑌃 = தர்மஸ்வபாவமுடையவர்கள், 𑌸𑍁𑌸𑌂𑌯𑌤𑌾𑌃= இந்த்ரியஜயமுடையவர்கள்.

பெ—வ்யா. (பெரியதிரு. 8-1-1) அறுபதினாயிரம் ஆண்டு வன்னியமறுத்து நன்மைகளை உண்டாக்கிப் போந்த சக்ரவர்த்திக்கும் இரண்டு பொருள் உண்டாக்கப் போச்சுதில்லை. ஓர் அவித்வானையாதல், வைதிகமான அர்த்தங்களை இல்லையென்பானொரு நாஸ்திகனையாதல் உண்டாக்கப் போச்சுதில்லை. அப்படைவீட்டிலுள்ளார் 'ராஜபுத்ரர்களாரேனுமொருவர் முடிசூடவமையாதோ' என்றிருக்குமவர்களல்லர்; பெருமாளை முடிசூடாவிடில் '𑌇𑌹𑍈𑌵 𑌨𑌿𑌧𑌨𑌂 𑌯𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑍋 𑌮𑌹𑌾𑌪𑍍𑌰𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍇𑌵 𑌵𑌾 । 𑌰𑌾𑌮𑍇𑌣 𑌰𑌹𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 𑌜𑍀𑌵𑌿𑌤𑌂 𑌹𑌿 𑌨𑌃' என்று பெருமாள் அபிஷேகம் பண்ணுத படைவீட்டிலிருப்பதில்லை, விழுந்தவிடமே சுடுகாடாகப் போகவமையும் என்றிருப்பர் புருஷர்கள்

ஸ்த்ரீகளும் 'ராமேவோநுவ்ரஜ்யதாம் கிம் ஸாதி ப்ரஜா' என்று பெருமாள் வழிமாறிப்போனுரென்று திறக்க அழைத்த பர்த்தாக்கள்முகம்பிளக்கத் தள்ளிக் கதவடைத்துக்கொள்ளுவர்கள். யதிஶீலா: — ராமானுவ்ருத்தியே பரமதர்மமென்றிருக்குமவர்களிறே. ஸுஸம்யதா:— ஸ்வப்ரயோஜநத்தில் நெஞ்சு செல்லாதவர்களாயிற்று.

## १५. लक्ष्मणो लक्ष्मिसंपन्नः ।

கரு. லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந: ।

பாலகாண்டம். 18 - 31.

ப—ரை. லக்ஷ்மிஸம்பந்ந:= ஸம்பத்தோடு கூடிய, லக்ஷ்மண:= லக்ஷ்மணன் (ராமனுக்கு வெளியில் தோன்றும் மற்றொரு உயிரைப்போல் இருந்தான்.)

திருவாய்மொழிப்பிள்ளையின் வ்யாக்யானம். (பெரியாழ்வார் திருமொழி. 4-4-8) பெருமாள் ராஜ்யத்தை இழந்தார். இவர் கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப் பெற்றுர். ஸம்பந்ந:—"சுற்றமெல்லாம் பின்தொடர" எல்லா அடிமையும் பெற்றுர். 'ஸம்பந்ந:' என்கையாலே பாக(ஸாம) வத கைங்கர்யபர்யந்தமாகையிறே பூர்த்தி. பகவத்கைங்கர்யம் செய்தது தம்முடைய ஸத்தை பெறுகைக்காக. அந்த ஸத்தையை அழிய மாறியிறே பாகவத கைங்கர்யம் பண்ணிற்று.

அரும்— 'லக்ஷ்மிஸம்பந்ந:' என்கிறவிடத்தில் 'ஸம்' என்கிற உபஸர்க்கத்தால் லக்ஷ்மீ ஶப்தார்த்தமான பகவத்கைங்கர்யத்துக்கு பாகவதகைங்கர்யமாகிற பூர்த்தி சொல்லுகிறதென்றருளிச் செய்யக்கடவராய்,காட்டில் பெருமாள் விஷயத்தில் கைங்கர்யமே பண்ணுமவர்க்கு பாகவதகைங்கர்யம் அப்ரஸக்தமென்னுமைக்காக, சுற்றத்தாரெல்லாரும் தாங்களே ஸர்வவிதகைங்கர்யம் பண்ணுவதாகப் பின்தொடர, அவர்களை விட்டுப்போந்த பெருமாள் விஷயத்தில் கைங்கர்யமே பின்தொடர்ந்தவர்க்கும் உகப்பாகையாலே பாகவத கைங்கர்யமும் இவர்க்கு ஸித்தித்ததென்று தாத்பர்யமருளுகிறுர்–சுற்றமித்யாதி. 'செய்தது' என்றது கங்காவதரணுத் பூர்வம் செய்ததென்றபடி. கங்காவதரணுந்தரம் தமக்கு அபிமதமான கௌஸல்யாரக்ஷணுர்த்தமாக அ

யோத்யையேறப் போகச்சொல்லி நியமித்திருக்கவும், அத்தைவிட்டு அக் கௌஸல்யைக்கும் மற்றும் பின்தொடர்ந்தவர்களுக்கும் இஷ்டதமம் பெருமாள் பின்போகையே என்று இவர் ராமாநுவர்த்தநம்பண்ணுகையாலே பாகவதமுகோல்லாஸமே உத்தேச்யமாய், தம்ஸத்தையை அழித்தானென்று கருத்து. ஸ்ரீசத்ருக்நாழ்வான் பாகவதகைங்கர்யநிஷ்டரென்றும், இளைய பெருமாள் பகவத்கைங்கர்யநிஷ்டரென்றும் நம்மாசார்யர்கள் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது—ராமாநுவர்த்தநத்தால் பகவந்முகோல்லாஸத்வா(ரா) ராவரும் பாகவதமுகோல்லாஸம் இவர்க்கு உத்தேச்யம், ஸ்ரீசத்ருக்நாழ்வானுக்கு ஸாக்ஷாத் பாகவதமுகோல்லாஸமே உத்தேச்யமென்னும் பேதத்தைத் திருவுள்ளம்பற்றி என்று கண்டுகொள்வது.

१६. इयं सीता मम सुता सहधर्मचरी तव ।
प्रतीच्छ चैनां भद्रं ते पाणिं गृह्णीष्व पाणिना ॥

௧௬. இயம் ஸீதா மம ஸுதா ஸஹத⁴ர்மசரீ தவ ।
ப்ரதீச்ச² சைநாம் ப⁴த்³ரம் தே பாணிம் க்³ருஹ்ணீஷ்வ பாணிநா ॥

பாலகாண்டம். 73. 33.

ப—ரை. இயம் = இவள், ஸீதா = ஸீதை. மம = என்னுடைய, ஸுதா = பெண். தவ = உனக்கு, ஸஹத⁴ர்மசரீ = கூடவிருந்து தர்மாநுஷ்டானஞ்செய்பவள். ஏநாம் = இவளை, ப்ரதீச்ச² = பெற்றுக்கொள். தே = உனக்கு, ப⁴த்³ரம் = மங்களம் (உண்டாவதாக) பாணிம் = (இவளுடைய) கையை, பாணிநா = (உன்னுடைய) கையினால், க்³ருஹ்ணீஷ்வ = பிடித்துக்கொள்.

பெரி-வ்யா. (நாச்சியார் 6–7) இயம் ஸீதா—பிறந்த உமக்குப் பிறவாமையால் வந்த ஏற்றமுடையார் தேட்டமே. மம ஸுதா—நீர் ஆர்த்த(ரு க்ஷ)ரக்ஷணத்திலே தீ(க்ஷி)க்ஷித்தால் உமக்கு முன்னேபோய்க் கைச்சிறையிருக்கவல்லவள். ப்ரதீச்ச² சைநாம் = கருப்பு தின்னக்கூலியன்றே. இவளைக் கைக்கொள்ளுமென்றன்றே உம்மை நான் கால்பிடிக்கிறது. ப⁴த்³ரம் தே—வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு' என்கிறபடியே. 'ஐபரும் ஊரிலுள்ளாரும் வாராதிருக்க, நான் கைக்கொள்ளுகையாவது என்' என்று தம்முடைய வைதக்த்யம்(வைத³க்³த்⁴யம்)

தோற்ற இருக்கின்றார். அது வேண்டா காணும். உம்முடைய கைபாலே இவள்கையைப் பிடியீர். 'பாணிம் க்ருஹ்ணீஷ்வ' என்னச்செய்தே 'பாணிம் க்ருஹ்ணீஷ்வ' என்றானிறே.

१७. रामस्तु सीतया सार्धं विजहार बहूनृतून् ।
मनस्वी तद्गतस्तस्या नित्यं हृदि समर्पितः ॥

கஎ. ராமஸ்து ஸீதயா ஸார்தம் விஜஹார பஹூந்ருதூந்।
மநஸ்வீ தத்கதஸ்தஸ்யா நித்யம் ஹ்ருதி ஸமர்ப்பித: ॥

பாலகாண்டம். 77. 32.

ப—ரை. ராம: து = ராமனோ, ஸீதயா ஸார்த்தம் = ஸீதையோடு கூடி, பஹூந் ருதூந் = அனேக ருதுக்கள்வரையில், விஜஹார = விளையாடினான் (ராமன்) மநஸ்வீ = நல்லமனமுடையவன். தத்கத: = அவளை (ஸீதையை) அடைந்தவன். (ஸீதையினிடத்தில் எப்பொழுதும் அநுராகமுள்ளவன்) தஸ்யா: = அவளுடைய (ஸீதையினுடைய) ஹ்ருதி = மனத்தில், நித்யம் = எப்பொழுதும், ஸமர்ப்பித: = வைக்கப்பட்டவன். (ஸீதையால் எப்போதும் அநுராகத்துடன் நினைக்கப்பட்டவன்)

ஈடு—(தி-வாய். 6—1—9) ருதூந் = காலம் கூறிட்டு அவ்வோகாலத்துக்கடைத்த உபகரணங்களைக்கொண்டு காணுமவன் அநுபவிக்கிறது; இல்லையாகில் 'ருதூந்' என்னவேண்டாவிறே. 'வத்ஸராந்' என்ன அமையுமிறே.

ஈடு—(தி-வாய். 2—3. ப்ரவேசம்) ராமஸ்து—பெருமாளும் பிராட்டியும் 'ஏகதத்வம்' என்னலாம்படி கலந்த கலவியைச்சொல்லுகிறது. 'பித்ருஶுஶ்ரூஷணபரரானார், தர்மங்களை ப்ரவர்த்திப்பித்தார், தேவதார்ஸமாராத (ய) நம் பண்ணினார்' என்றாயிற்று சொல்லிக்கொண்டுபோந்தது; இப்படிப் போந்த இவர் இப்போது 'வாத்ஸ்யாயநம் கற்றுக் காமதந்த்ரமேயோ நடத்திப்போந்தது' என்னும்படி வேறுபட்டார். ஸீதயா ஸார்த்தம்—பரமபதத்தில் செவ்வியோடே வந்தவளும் பிற்பாடையாம்படி போக (ஸாம)

ஸ்ரோதஸ்ஸிலே முற்பாடரானர். விஜஹார—இப்படி பரிமாறச் செய்தேயும் போகோபோத்காத (ஹொஹொவொஷ்ாத) த்துக்கு அவ்வருகுபட்டிலர். பஹூந்ருதூ—பஹூந் ஸம்வத்ஸராந் என்றதெயொழிந்தது—அவ்வொ காலவிஶேஷங்களுக்கடுத்த போகோ (ஹொஹொ) பகரணங்களைக்கொண்டு புஜித்தார் என்னுமிடந் தோற்றுகைக்காக· ம்நஸீ= ஸம்ஶ்லேஷத்தில் பிராட்டி கோலின வளவுக்கு அவ்வருகுபட்டுப் பரிமாறினர். தஜ்தஃ= தஸ்யாம் மதஃ —ஜாதி குணங்கள் த்ரவ்யத்துக்கு ப்ரகாரமாய்ப் பிரிக்கவொண்ணு தபடியாயிருக்குமாபோலே, பிரிக்கவொண்ணுதபடி ஒரு நீராகக் கலந்தபடி. தஸ்யா நித்யம் ஹ்ருதி ஸமேபிதஃ—இவருயர்த்தியை அறிந்திருப்பாளொருத்தியாகையாலே 'அப்பெரியவன் இப்படித்தாழவிடுவதே' என்று அச்செயலிலே தன்னெஞ்சு துவக்குப்பட்டு 'அது அது' என்றுகிடக்குமாயிற்று.

ஈடு—(தி-வாய். 7-10-1) ராமஃ= ஸ்ரீபரசுராமாழ்வானைச் செருக்குவாட்டிப் படைவீட்டிலே வந்து புகுந்து சக்ரவர்த்தியையும், மஹர்ஷிகளையும் அநுவர்த்தித்து தர்மோத்தரமாக நடத்திப் போந்தவர். தா—பித்ரு ஶுஶ்ரூஷணதிகளைப் பண்ணின பின்பு பிராட்டியோட்டை ரஸதா(யா)ரையிலே இழிந்தபின்பு 'இதுக்கு முன்பெல்லாம் வாத்ஸ்யாயநம் கற்றுக் காமதந்த்ரமே நடத்திப் போந்தாரித்தனையோ' என்னும்படி வேறுபட்டார். முன்பு போருகிற நாளில் "இவர் இதுக்குமுன்பு காமரஸம் புதியதுண்டறியாரோ" என்னும்படி போந்த இவர் இப்போது "இதுக்கு முன்பு தர்மதத்வம் புதியதுண்டறியாரோ" என்னும்படி வேறுபட்டார். ஸீதயா ஸார்த்தம் = அயோநிஜையாய்ப் பரமபதத்தில் தானுமவனுமாயிருந்து கலந்தபோதைச் செவ்வியிலொன்றுங் குறையாமலிருந்தவளிறே பிராட்டி; இப்படியிருக்கச் செய்தேயும், தம்மை அழியமாறி இதரஸஜாதீயராய் வந்தவதரித்தாரேயாகிலும், போக (ஹொம)த்தில் வந்தால் அவளுக்கூட அப்ரதா (யா) னையாம்படி அதில் தலைநின்றர். அதுக்கடி என்னென்னில்— ராஜபுத்ரரான ரஸிகத்வத்தால் வந்த ஏற்றத்தாலே.

விஜஹார—பாரிப்பே ஒழிய போகத்திலிழியப்பெற்றிலர். உப க்ரமத்துக்கே பணிபோந்ததித்தனை. உபோத்காதத்துக்குக் காலம் போந்ததித்தனை. ஷஹ-ஞு ஐக-ஞு—, ஸுசீ ஆடிஶ த தாஷூ—' என்கிறபடியே பன்னிரண்டாண்டு ஒருபடிப்பட அநுபவிக்கச்செய்தேயும், ருதுஶப்தத்தாலே சொல்லுகிறுயிற்று—அவ்வவ காலங்களுக்கடைத்த புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு காலாவயவங்கள்தோறும் அநுபவித்துப் போந்தமை தோற்ற. சீதகாலத்துக்கடைத்தவைகொண்டு பரிமாறியும், உஷ்ணகாலத்துக்கடைத்தவைகொண்டு பரிமாறியும், அநுபவித்தமை தோற்றச் சொல்லுகிறது. ஊஷீ—ப்ரணயதா (யா) ரையில் வந்தால், அவள் பாரித்த பாரிப்புக்கெல்லாம் ஆனைக்குக் குதிரைவைக்கைக் கிடான நெஞ்சில் அகலமுடையவராயிற்று. தடிகஃ—த்ரவ்யம் த்ரவ்யத்தோடு சேர்ந்தாப்போலன்றிக்கே, ஜாதிகுணங்கள் த்ரவ்யத்தோடு சேருமாப்போலே சேர்ந்தார். ‹ ஊநந்யா ராவவேணா ஷூ' என்றும் ‹ ஊநந்யா ஹி யோ ஸீதா ' என்றுமிறே இருவர் வார்த்தையும். தஸ்யா நித்யம் ஹ்ருதி ஸமேபிதஃ—இதிலிழிவதற்கு முன்பு இவரை அறிந்திருக்குமவளாகையாலே, ‹ அப்படி பெரியவர் இப்போது என்பக்கலிலே தாழ நிற்பதே யிப்படி! இதொரு நீர்மையே!' என்று எப்போதும் இவ்வநுஸந்தா (நா) நமே யாத்ரையாகையாலே வேறொன்றும் நெஞ்சிற்படாதே அவள்தன்னைத் தம்பக்கலிலே போகடும்படியானர். ‹ தடிகஃ' என்கையாலே, இவர் தம்மை அவள்பக்கலிலே ஒக்கினபடி சொல்லுகிறது. ‹ நித்யம் ஹ்ருதி ஸமேபிதஃ' என்கையாலே, அவள் தன்னை இவர்பக்கலிலே ஒக்கிவைத்தபடி சொல்லுகிறது.

அரும்ப— (7-10-1) 'ராம:' என்றதுக்கு அர்த்தம்——பரசுராமெத்யாதி. செருக்குவாட்டி=கர்வத்தைப்போக்கி. வாத்ஸ்யாயனம்=காமசாஸ்த்ரம். விவரணம்—முன்பித்யாதி. 'ஸீதா லாங்கலபத்ததி:'. ஆகையாலே—அயோநிஜையித்யாதி. 'அநுபூவ' என்னுதே 'விஜஹார' என்றதுக்கு பா(ஹா)வம்—பாரிப்பேயித்யாதி. 'விஹரணம் விளையாட்டாய், அத்தால் உபக்ரமத்தைச் சொல்லுகிறது. (உபோத்காதம் = உத்யோகமாத்ரம்) (அடைத்தவை = உசிதமானவை) ஆனைக்குக் குதிரைவைக்கையாவது—பிடி,கொடுக்குமாபோலேயிருந்து பிடிகொடாதொழிகை. 'தத்கத:' என்றதும், ' தஸ்யா நித்யம்

ஹ்ருதி ஸமர்ப்பித:' என்றதும் 'அஸ்யா தேவ்யா மநஸ்தஸ்மிந் தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்ட்டிதம்' என்றாப்போலே யிருக்கிறது என்றருளிச் செய்வர். ஒக்கினபடி = ஆக்கினபடி. பரதந்த்ராக்கினபடியித்யர்த்த:.

பாலகாண்டம் முற்றிற்று

---

ஸ்ரீ ஜய நம: ॥

# அயோத்யாகாண்டம்.



१. गच्छता मातुलकुलं भरतेन तदानघः ।
शत्रुघ्नो नित्यशत्रुघ्नो नीतः प्रीतिपुरस्कृतः ॥ 1. 1.

க. 𑌗𑌚𑍍𑌛𑌤𑌾 𑌮𑌾𑌤𑍁𑌲𑌕𑍁𑌲𑌂 𑌭𑌰𑌤𑍇𑌨 𑌤𑌦𑌾𑌨𑌘𑌃 ।
𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑍋 𑌨𑍀𑌤𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌪𑍁𑌰𑌸𑍍𑌕𑍃𑌤𑌃 ॥

ப—ரை. 𑌮𑌾𑌤𑍁𑌲𑌕𑍁𑌲𑌂 = மாமாவின் க்ருஹத்தைக் குறித்து, 𑌗𑌚𑍍𑌛𑌤𑌾 = செல்கின்ற, 𑌭𑌰𑌤𑍇𑌨 = பரதனால், 𑌤𑌦𑌾 = அப்பொழுது, 𑌅𑌨𑌘𑌃 = பாபமில்லாதவனும், 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑌃 = எப்போதும் சத்ருக்களான ஐம்புலன்களையும் அடக்கியிருப்பவனுமான, 𑌶𑌤𑍍𑌰𑍁𑌘𑍍𑌨𑌃 = சத்ருக்நன், 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌪𑍁𑌰𑌸𑍍𑌕𑍃𑌤𑌃 = ப்ரீதியினால் தூண்டப்பட்டவனாயிருக்க, 𑌨𑍀𑌤𑌃 = அழைத்துக்கொண்டுபோகப்பட்டான்.

பெரி—வ்யா. (கண்ணிநுண் சிறுத்தாம்பு_அவதாரிகை.) 𑌗𑌚𑍍𑌛𑌤𑌾—'கச்சதா' என்கிற வர்த்தமாந நிர்தேச (𑌨𑌿𑌰𑍍𑌦𑍇𑌶) த்தாலே—போகிறவிடத்தில் தனக்கொரு ப்ரயோஜந முண்டாயாதல், இங்கே மாதா பிதாக்களைக் கேள்வி கொள்ளுதல், பூர்வஜரான பெருமாளைக்கேள்விகொள்ளுமிவ்வளவுமின்றிக்கே, அவனை ஒழிய ஜீவிக்கமாட்டாதபடியாலே போனானென்கை. 𑌮𑌾𑌤𑍁𑌲𑌕𑍁𑌲𑌂—யுதா (யா) ஜித்து அழைத்தது அவனையாகையாலே, போக்கில் உத்தேஶ்யதை (𑌉𑌦𑍍𑌦𑍇𑌶𑍍𑌯) யும் அவனுக்கு; இவனுக்கு அவன் உத்தேஶ்யனாய் போனானென்கை. 𑌭𑌰𑌤𑍇𑌨—சக்ரவர்த்தியும்

துஞ்சி, பெருமாளும் ராஜ்யத்தைப் பொகட்டுப்போய், இளைய பெருமாளும் தொடர்ந்தடிமை செய்யவேணுமென்று போய், சத்ருக்நாழ்வானும் நின்னை யல்லதறியேன் என்றிருக்கும் த(ஶ)ையிலும் ராஜ்யத்தை ப(ஹ)ரிக்கக்கடவனென்றாயிற்று ஸ்ரீவஸிஷ்ட்டபகவான் திருநாமஞ் சாற்றிற்று. 'ஹாத இதி ராஜ்யஸ்ய ஹரணாத்' என்றானிறே ஸ்ரீஶதாநீகன். ததா = இருவர்களும் ராஜபுத்ரர்களாய் நக்ஷத்ரபேத முண்டானால் பிரித்து முஹூர்த்தமிட்டுப் போக ப்ராப்தமாயிருக்க, அவன்போனதுவே முஹூர்த்தமாகப் போனானென்கை. 'ஸஹ ததா' என்றதில் அர்த்தஸித்தமன்றோ; 'ததா' என்றதென்னென்னில்—அங்கு மமதாநிவ்ருத்தியைச் சொல்லிற்று, இங்கு அதுக்கு ஆஶ்ரயமான அஹங்காரநிவ்ருத்தி சொல்லுகிறது. ஆகையாலே புநருக்திதோஷமில்லை. ஶேஷித்வவிரோதியிறே இரண்டும். அநக: = அக(ம)மில்லாதது இவனுக்கேயிறே. அகமாவது— உத்தேஶ்யவிரோதியிறே. இவ்விடத்தில் அகமாவது ராமபக்தி. இத்தைப் பாபமென்னப்போமோவென்னில்— பாபத்தில் புண்யம் நன்றாயிருக்க, மோக்ஷவிரோதியாகையாலே புண்யமும் 'ஸுஷ்வ ஏவ ரோரோணி வியஹ்ய வாவழ' என்று பாபஶப்தவாச்யமாயிற்றிறே. ஆகையாலே பரதாநுவ்ருத்தியாகிற உத்தேஶ்யத்துக்கு விரோதியாகில் ராமஸௌந்தர்யத்தில் கால்தாழுமதுவும் பாபமாமித்தனையிறே. 'ராமெ ஸவ ரோஹம் ரோகாஷீ:' என்று ராமாநுவ்ருத்திக்கும் இடைச்சுவராகச் சொல்லிற்றிறே ராமஸௌந்தர்யத்தை. பரதாநுவ்ருத்திக்கு இடைச்சுவரென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. ஶத்ருக்ந:— பிள்ளைகளுடைய ஸந்நிவேஶங்களைப் பார்த்துத் திருநாமஞ் சாற்றுகிற ஸ்ரீவஸிஷ்ட்டபகவான், பெருமாள் கண்டாரை அழகாலே துவக்கவல்லராகத் தோற்றுகையாலே 'ராமன்' என்றும், இளையபெருமாளுக்குக் கைங்கர்யமே நிரூபகமாகத் தோற்றுகையாலே 'லக்ஷ்மணன்' என்றும் திருநாமஞ்சாற்றினப்போலே இவருடைய ஸந்நிவேஶத்தைக்காணவே ஶத்ருக்கள் மண்ணுண்ணும் படியிருக்கையாலே 'ஶத்ருக்நன்' என்று திருநாமம் சாற்றினர்.

நித்யஶத்ருக்நஃ— பாஹ்ய (பாஹ்ய) ஶத்ருக்களையன்றிக்கே ஆந்தரஶத்ருக்களான இந்த்ரியங்களையும் ஜயித்திருக்குமென்கை. அவ்விந்த்ரியஜயத்தின் எல்லை எவ்வளவென்னில்— 'பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்' என்கிற ராமஸௌந்தர்யத்திலும் துவக்கொண்ணாதொழிகை. அதாகிறது— பெருமாளைப் பற்றும்போதும், தன்னுகப்பாலேயாதல் அவருடைய வைலக்ஷண்யத்தாலேயாதலன்றிக்கே, 'தனக்கு உத்தேஶ்யனான இவனுகந்த விஷயம்' என்று பற்றுகை. நீதஃ— ராஜாக்கள் போம்போது உடைவாள் மற்றொன்று கொண்டுபோமோபாதி அவன் கொடுபோகப் போனான். த்ரவ்யத்துக்கு த்ரவ்யாந்தரங்களோட்டை ஸம்யோகம் உப (ஹ) யநிஷ்டமாயிருக்குமிறே. அதுபோலன்றிக்கே ஜாதிகுணங்களோபாதி போனான். ப்ரீதிபுரஸ்க்ருதஃ— ஜ்யேஷ்டாநுவ்ருத்தி கர்த்தவ்யம்' என்று போனானல்லன். 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்று போன இளையபெருமாளைப்போலே, 'போனவிடத்திலே ஸர்வஶேஷவ்ருத்தியும் பண்ணலாம்' என்று பாரித்துக்கொண்டு ப்ரீதி ப்ரேரிக்கப் போனான். படைவீட்டிலிருந்தால் பலருமுண்டாகையாலே விழுக்காட்டோபாதியிறே ஸித்திப்பது. 'நீதஃ' என்கையாலே ஶேஷத்வத்தில் அசித்கல்பனாயிருக்கக் கடவன். 'ப்ரீதிபுரஸ்க்ருதஃ' என்கையாலே ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே சைதந்யப்ரயுக்தமான தர்ம (யஜு) ங்களுண்டாயிருக்கை. 'படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே' என்றிறே அபி(ஹி)யுக்தர்வார்த்தை. 'அநகஃ' 'நித்யஶத்ருக்நஃ' என்று பாவநத்வத்தாலும் போக்ய (ஹோம்ய) தையாலும் அவனையே பற்றினானென்னவுமாம். 'அநகஃ' 'நித்யஶத்ருக்நஃ' என்றதுக்கு ப்ரயோஜநமென்னென்னில்— 'ஸ்ரீஶத்ருக்நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி, அவனையல்லதறியாத ஸ்ரீபரதாழ்வானையல்லது வேறொன்றறியாதபடியானான்' என்று எம்பெருமானார் அருளிச்செய்தார். இதுவே 'ப்ரயோஜநமானால் சொன்னமிகையெல்லாம் பொறுக்குமிறே.

ஈடு— (தி-வாய். 3. 7. ப்ரவேஶம்) ஹ்ஹ தா. இதுக்கு எம்பெருமானர் 'பயிலுஞ் சொடரொளியிலும் நெடுமாற்கடிமையிலும் சொல்லுகிற அர்த்தத்தை ஸ்ரீஶத்ருக்நாழ்வான் அநுஷ்ட்டித்துக்காட்டினன்' என்று அருளிச்செய்வர். இவ்வர்த்தத்துக்கடி திருமந்த்ரமாயிற்றிறே. அதுமூலமாக அநுஷ்ட்டிக்கவே இதிற் சொன்னத்தைச் செய்ததாமிறே. ஆசாரப்ரதா(யா)நமான அவதாரமாய் அதில் பெருமாள் 'பிதாசொல்லிற்று புத்ரன் செய்யக்கடவன்' என்கிற மர்யாதை குலையாதே அத்தை நிலைநிறுத்துகைக்காக பித்ருவசநபரிபாலநாதி (ஷி) ரூபமான ஸாமாந்யதர்மத்தை அநுஷ்ட்டித்தார். 'இதுதான் ப்ராப்தவிஷயத்திலே செய்யக்கடவது' என்னுமிடத்தை அநுஷ்ட்டித்துக் காட்டினர் இளையபெருமாள். 'அது செய்யுமிடத்தில் அவனுகந்த அடிமை செய்யக்கடவது' என்னுமிடத்தை ஸ்ரீபரதாழ்வான் அநுஷ்ட்டித்துக் காட்டினன். 'அதுதான் பாக (ஹாம) வதஶேஷத்வபர்யந்தமாயிருக்கும்' என்னுமிடத்தை ஸ்ரீ ஶத்ருக்நாழ்வான் அநுஷ்ட்டித்துக் காட்டினன். பெருமாள் பிதாசொல்லிற்றுச் செய்யக்கடவது என்னுமிடத்தை அநுஷ்ட்டித்தார். அதுதன்னிலும் நேரே பிதாவை அநுவர்த்திக்கக் கடவது என்னுமிடத்தை இளையபெருமாள் அநுஷ்ட்டித்தார். அதுதன்னிலும் 'கூ௱ர௱ஷு' என்று நிர்ப்பந்தி (நிப௩ூஸி)க்கக் கடவரல்லர்; 'ராஜ்யத்திலே இரும்' என்னில், அது இன்னதாகிலும் அதிலிருந்து அடிமை செய்யக்கடவது என்னுமிடத்தை அநுஷ்ட்டித்தான் ஸ்ரீ பரதாழ்வான். அதின் எல்லையை அநுஷ்ட்டித்தான் ஸ்ரீ ஶத்ருக்நாழ்வான். அவன்படி சொல்லுகிறது இஶ்லோகம். ோக௱யகூ௱யம் ஹ்ஹ தா ஹாரெதந நீதஃ—மாதுலகுலம் உத்தேஶ்யமாய்ப்போனன் அவன். அவன்தான் உத்தேஶ்யமாய்ப்போனனிவன். யுதாஜித்து அழைத்தது ஸ்ரீபரதாழ்வானையிறே. ஹ்ஹ தா— இவ்வர்த்தமாநநிர்த்தேஶ (நிஜெ௩ூஶ) த்தால், பூர்வக்ஷணத்திலும் தன்னெஞ்சிலுமில்லை; பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்தமையுமில்லை; சக்ரவர்த்தியைக் கேள்விகொண்டமையுமில்லையென்கை. ஹாரெதந— பெருமாளும் பொகட்டுப்

போய், இளையபெருமாளும் அவரை அநுவர்த்தித்துப்போய், சக்ரவர்த்தியும் துஞ்சி, ஸ்ரீஶத்ருக்நாழ்வானும் தன்னையல்லதறியாதேயிருக்க, பெருமாளதான ராஜ்யத்தை பரி (ஹரி) த்துக்கொண்டிருக்கையாலே 'பரதன்' என்கிறது. 'பரத இதி ராஜ்யஸ்ய பரணாத்.' தஸ்ய— தானும் ராஜபுத்ரனும் நாளும் வேறுபட்டிருந்தால், பிரித்துத் தனக்குப் பொருந்தும் முஹூர்த்தத்திலே போக ப்ராப்தமிறே; அது செய்யாதே, அவன் புறப்பட்டதே தனக்கு முஹூர்த்தமாகப்போனான். சுபவ:= அபாப:— அப்படைவீட்டில் அல்லாதாரதெல்லாம் பாபமிஶ்ரஜீவனம் போலே காணும். அதாவது— ராமபக்தி கலந்திருக்குமே. அத்தைப் பாபமென்னலாமோ வென்னில்— பாபத்திற்காட்டில் புண்யம் உத்தேஶ்யமாயிருக்கச்செய்தேயும் இரண்டும் த்யாஜ்யமாகாநின்றதிறே, மோக்ஷவிரோதித்வாத். இங்கும் உத்தேஶ்யவிரோதியாகையாலே சொல்லலாமிறே. இது பின்னை உத்தேஶ்யவிரோதியோவென்னில்—ப்ரதமாவதியில் (ஸ யுவராஜ) நிலை விரோதியிறே சரமாவதியைப்பற்ற. (ப்ராப்யத்தில் ப்ரதமாவதி—பகவச்சேஷத்வத்தளவிலே நிற்கை; சரமாவதி— பாகவதசேஷத்வத்தளவிலேவருகை) ஶத்ருக்ந:— பிறந்தபோதே 'எதிரிகள் மண்ணுண்ணும்படி வளரும்' என்று தோற்றியிருக்கையாலே இப்படித் திருநாமஞ் சாற்றினான் வஸிஷ்டன். நித்யஶத்ருக்ந:— பாஹ்ய (பாஹ்ய)ஶத்ருக்களை வெல்லுகையன்றிக்கே, ஆந்தரஶத்ருக்களான இந்த்ரியங்களை வென்றிருக்கும். அதாவது— 'ஸர்வஸாம் த்ருஷ்டிவித்தாபஹாரிணம்' என்கிற விஷயத்தில் கண்வையாமை. அங்கும் 'இவனுக்கு இனிது' என்று இவ்வழியாலே புகுமித்தனை. 'சுபவ:' என்கிறவிதுக்கும் 'நித்யஶத்ருக்ந:' என்கிறவிதுக்கும் வாசி என்னென்னில்—பாவநத்வத்தில் ஸ்ரீபரதாழ்வானை ஒவ்வார் பெருமாள் என்கிறது — 'அநக:' என்கிறவித்தால்; 'நித்யஶத்ருக்ந:' என்கிறவித்தால்— போக்ய (ஹோக்ய) தைக்கு ஸ்ரீபரதாழ்வானை ஒவ்வார் பெருமாள் என்கிறது. நீத:— ஒரு குற்றுடைவாள் சா (ஸா)யை யுள்ளிட்டவையோபாதியாய்ப் போனான். த்ரவ்யத்துக்கு த்ரவ்

யாந்தரஸம்யோகம் உபயநிஷ்ட்டமாயிறேயிருப்பது. த்ரவ்யமாயிருக்கச்செய்தேயும் ஜாதிகுணங்களோபாதி பரதந்த்ரனாய்ப் போனான். ஸ்ரீ ஜிவ-ரஷூத்ருகைஃ— 'தமயன் பின்னே தம்பி போகக்கடவன்' என்னும் முறையாலே தேவையோலேயிருக்குமோவென்னில்—அங்ஙனன்று. 'படைவீட்டிலே யிருந்தால் ஒருவன் சோற்றைப் பகுத்துண்ணுமாப்போலே படைவீடு ஆகப் பெருமாளுக்கு அடிமை செய்வர்கள். ஏகாந்தஸ்தலத்திலே நமக்கு எல்லா அடிமையும் செய்யலாம்' என்று 'ஸஹம் ஸவ்வம் கரிஷ்யாமி'என்று இளையபெருமாள் காடேறப் போனாற்போலே, இவனும் 'நமக்கு எல்லாவடிமையுஞ் செய்யலாம்' என்கிற ப்ரீதி பிடரி தள்ளத் தள்ளப் போனான். எம்பெருமானார் இஸ்ஸ்லோகத்துக்கு வாக்யார்த்தமாக 'ஸ்ரீஸத்ருக்நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி—பெருமாளை காற்கடைக்கொண்டு பெருமாளுக்கு நல்லனான ஸ்ரீபரதாழ்வானையல்லதறியாதபடியானான்' என்றருளிச்செய்தார். இது ப்ரயோஜகமானபின்பு சொன்னமிகையெல்லாம் பொறுக்குமிறே. அல்லது, ஒரு சேதநனுக்கு ஒருசேதநன் உத்தேஸ்யனாகையாவது ஓட்டையோடத்தோடு ஒழுகலோடமிறே. 'அநங்யாஃ' என்கிறநிலை இவர்களுக்குண்டானால் இவர்களை அநுவர்த்திக்குமது அவனை அநுவர்த்தித்ததாமிறே.

(கண்ணிநுண்சிறுத்தாம்புக்கு நம்பிள்ளை அருளிச்செய்த ஈட்டிலும், தம்பிரான் படியிலும், இப்படியே ஸ்வாபதேசவிஷயங்கள் காணப்படுகின்றன)

அநும்ப—பரதன் பின்னே ஸத்ருக்நன் போனானென்னுமித்தனை யொழிய, பாகவதசேஷத்வத்தை அநுஷ்டித்தானென்றாகவேணுமோ வென்ன—ஆசாரப்ரதாநமானவித்யாதி. ப்ராப்தவிஷயத்திலேயிதி 'பித்ருத்வம் நோபலக்ஷயே' 'பிதா ச மம ராகவ:' என்று இவரே ப்ராப்தரான பிதாவென்றாரிறே. 'மாதுலகுலம்' என்றதுக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார்-யுதாஜித்தித்யாதி.நாள்—நக்ஷத்ரம். 'நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி தமேவார்யம் விசிந்தயந்' என்றில்லையோவென்ன—அங்குமித்யாதி. பாவநத்வத்திலித்யாதி.முந்தின வர்த்தத்தில் போக்யதை சொல்லுகிறது. இரண்டாமர்த்தத்தில் பாவநத்வ

போக்யத்வங்களிரண்டும் சொல்லுகிறது. 'நீத:' என்கிறதுக்கு தாத்பர்யம்—ஒரு குற்றுடைவாளித்யாதி. உடைவாள்=அரைப்புடவையிலேசொருகுகிற ஆயுதம். உபயநிஷ்டம்=உபயாதீநம், உபயப்ரதாநம். அதாவது—அவனுக்குச் செய்ததுமாய் தனக்கும் ப்ரியமாயிருக்கை. பகுந்து=விபஜித்து. ப்ரீதி பிடரி தள்ள=ப்ரீத்யா புரஸ்க்ருத:. இப்படி ஸ்ரீபரதாழ்வானையே பற்றினால் 'ஶத்ருக்நேந ச வீரேண' என்னும்படி ஶத்ருக்நாழ்வான் ப்ரீதிவிஷயமானபடியென்னென்ன—எப்பெருமானுரித்யாதி. ஆனால் 'அநக:' 'நித்யஶத்ருக்ந:' என்கிற பதங்களுக்கு அத்யுக்தியாக அர்த்தம் சொல்லுவானென்னென்ன—இது ப்ரயோஜகமித்யாதி. இது=பகவதீயத்வம். மிகை=ஏற்றம். இத்தால், ஈஶ்வரவிஷயத்தில் கண்ணழிவற்றருசியுடைய ராபிமாநத்திலெயொதுங்கி அவர்கள் திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமென்று அத்யவஸித்திருந்தபேர் 'திரிதந்தாகிலும்' என்கிறபடியே ஈஶ்வரனுக்கு மிகவும் ப்ரீதிவிஷயராவரென்றதாயிற்று. ஓட்டையோடம் = அதிச்சித்ர(𑌅𑌤𑌿𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌰)மான ஓடம். ஒழுகலோடம் = அல்பச்சித்ர(𑌈𑌷𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌰)மான ஓடம். ஒழுகலோடம்—பெருக்கிலே இழுப்புண்டு போருகிற ஓடம். ஒழுகல்= நீரொழுக்கிலேஒழுகிப்போகை என்னவுமாம். ஆனால் பின்னை அவனையே அநுவர்த்திக்கவொண்ணாதோவென்ன—அநந்யா இத்யாதி.

२. स हि देवैरुदीर्णस्य रावणस्य वधार्थिभिः ।
अर्थितो मानुषे लोके जज्ञे विष्णुः सनातनः ॥ 1–7.

உ. 𑌸 𑌹𑌿 𑌦𑍇𑌵𑍈𑌰𑍁𑌦𑍀𑌰𑍍𑌣𑌸𑍍𑌯 𑌰𑌾𑌵𑌣𑌸𑍍𑌯 𑌵𑌧𑌾𑌰𑍍𑌥𑌿𑌭𑌿𑌃।
𑌅𑌰𑍍𑌥𑌿𑌤𑍋 𑌮𑌾𑌨𑍁𑌷𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌜𑌜𑍍𑌞𑍇 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃॥

ப—ரை. 𑌉𑌦𑍀𑌰𑍍𑌣𑌸𑍍𑌯 = திமிர்த்துத்திரிகின்ற, 𑌰𑌾𑌵𑌣𑌸𑍍𑌯 = ராவணனுடைய, 𑌵𑌧𑌾𑌰𑍍𑌥𑌿𑌭𑌿𑌃 = வதத்தை விரும்புகின்ற, 𑌦𑍇𑌵𑍈𑌃 = தேவர்களால், 𑌅𑌰𑍍𑌥𑌿𑌤𑌃 = ப்ரார்த்திக்கப்பட்ட, 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 = நித்யனான, 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌹𑌿 = விஷ்ணுவன்றோ, 𑌸𑌃 = அவனாக (ராமனாக) 𑌜𑌜𑍍𑌞𑍇 = பிறந்தான்.

பெரி-வ்யா. (திருநெடுந்தாண்டகம்-9) 𑌸𑌃—தச்சப்தம் ப்ரக்ருதபராமர்ஶியிறே. '𑌬𑌹𑍁𑌗𑍁𑌣𑌵𑌤𑍍𑌤𑌰𑌃' என்றிறே கீழ்ச் சொல்லிற்று. அப்படிப்பட்ட குணாதிகனாகையாலே பிறந்தான் என்கிறார். அநந்யப்ரயோஜநர்க்காகப் பிறக்கை குணமன்றிறே. 𑌹𑌿— ஹிஶப்தம் ஹேதுவிலே. 𑌦𑍇𑌵𑍈𑌃— வந்துபிறந்தது—

திருவடி திருவநந்தாழ்வான் அர்த்திக்கவோ? ப்ரயோஜநாந்தரபர ராய் ‹ஸர்வஸ்வரஸ்ய' என்றிருக்கிற தர்மாதி (தேவாதி) கள் அர்த்தித்த கார்யஞ்செய்யக்கிடீர். கார்யங்கொண்ட ஸமநந்தரம் எதிரம்பு நோக்குமவர்களிறே. உதீர்ணஸ்ய ராவணஸ்ய வயாய்தி ஷி:— தன்னுடைய செருக்காலே லோகத்தையடைய அழித்துக் கொண்டு திரியும் ராவணநிரஸநார்த்தமாக. ஸம்பந்தம் ஸர்வஸாதா ரணமாயிருக்க, அர்த்திக்கிறவர்கள் ப்ரயோஜநாந்தரபரராயிருக்க, அவர்களை அழியச்செய்கைக்காகக் கிடீர் வந்து பிறந்தது. சுயிதஃ:— இது கிடீர் அவர்கள் பண்ணின தபஸ்ஸு. லோகேஷு— தேவதைகளுமகப்படக் கீழ் நோக்கி முகம் காட்டாத தேசத்திலே கிடீர் வந்து பிறக்கிறது. ஜஜ்ஞே—நாட்டார் பத்து மாஸம் கர்ப்ப (ஏஷு) வாஸம் பண்ணுவாராகில் பன்னிரண்டு மா ஸம் கர்ப்பவாஸம் பண்ணிக் கிடீர் பிறந்தது. விஷ்ணு:— வ்யாபக வஸ்து கிடீர் வ்யாப்யைகதேசத்துக்கு சேஷமாய்ப்பிறந்தது. ஸ நாதந:— நித்யவஸ்து கிடீர் பிறந்தானென்னும்படி ஒருத்தனு க்குப் புத்ரனாய் வந்து பிறந்தது.

ஈடு—(தி-வாய்-7-5-2) ஸ: ஜஜ்ஞே ஹி— ‹ கர்மநிபந்தந (நிபாதந) மான ஜன்மமில்லை ' என்று ப்ரமாணப்ரஸித்தனானவ ன் கிடீர் கர்மவஸ்யர்க்கும் இவ்வருகாய் வந்து பிறந்தானென்றப டி. இப்படி பிறக்கைக்கு அடி என்னென்னில்— ‹ சுயிதஃ ' எ ன்கிறது. அவர்கள் இரப்புக்காகவென்றபடி. இரப்புத்தான் இச் சையையும் பிறப்பிக்குமாகாதே! இச்சாக்ருஹீதனிறே. தே வை:— தங்கள் கார்யத்துக்காக இரந்து பிறக்கப்பண்ணிக் கார் யம் தலைக்கட்டினவாறே எதிரிட்டு ‹ஸர்வஸ்வரஸ்ய' என்றிருப் பார்க்காகக் கிடீர். ‹ நீணகர் நீளெரி வைத்தருளாய் ' என்பர் கள்— லங்கையைச் சுட்டுத்தரவேணுமென்பர்கள். உதீர்ணஸ்ய ராவணஸ்ய— ப(ஹ)யாவஹனான பையல், தானே, வரபல(பல) த்தாலே அழியச்சேய்ய வேண்டும்படி விஞ்சினபடி. வயாய்தி ஷி:— தாங்கள் பட்டநலிவாலே திருவுள்ளத்துக்குப் பொருந்தா தவற்றையும் விண்ணப்பஞ்செய்தார்கள். ‹‹ ஒருவனை அழியச்செ

ய்ய ஒருநாடு ஆகப் பிழைக்குமாகிலாகாதோ" என்றருளிச்செய்தானத்தனை. ஸ்வயம்பூ:— தன்னுடைச்சோதிக்கெழுந்தருளுந்தனையும் திருவுள்ளத்திற்பட்டுக்கிடந்ததிதுவே. ஸ்வயம்பூ:—உபாஸித்தவர்களல்ல. நாகஸ்ய லோகே — ஆக்கரான தேவர்கள், மநுஷ்யகந்த (மாநு) த்துக்குச் சர்தி(வமி) பண்ணி பூமியிலிழிய அருவருத்து ஒன்றரை யோஜனைக்கு அவ்வருகே நின்று ஹவிஸ்ஸைக்கொள்வர்கள்; அவர்கள் மநுஷ்யஸ்த்தானத்திலே யாம்படியான தத்வம் கிடீர் இங்கே வந்து பிறந்ததென்றபடி. மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்குந் தேவனிறே. ஜஜ்ஞே—ஆவிர்பூத (ஸம்பூத) மான மாத்ரமன்று; நாட்டார் பத்துமாஸம் கர்ப்பவாஸமநுபவிக்கில் பன்னிரண்டு மாஸமிறே இவனநுபவித்தது; 'ததஶ்ச த்வாத3ஶே மாஸே' என்றும், 'ஜாதோऽஹம் யத்ர தேவாநாம்' என்றும்.

அரும்ப—'ஆத்மமாயயா ஸம்பவாமி' என்னாநிற்க, 'இரப்பாலே பிறந்தான்' என்கிறதென்னென்ன—இரப்புத்தாணித்யாதி. ராவணசப்தார்த்தம்—பயாவஹனனென்று. தன் திருவுள்ளத்துக்குப் பொருந்தாததைச் செய்வானென்னென்ன—ஒருவனையித்யாதி. 'அர்த்தித:' என்ற பூதமாகப்ரயோகிக்கையாலே ப(ஃ)லித்த தாத்பர்யம்—தன்னுடையித்யாதி. 'யதீத்ருஶோ:' (யதீத்ருஶ:) இத்யாதிப்படியே பிறப்பட்டோமென்று புண்படுகிறானென்றபடி. 'விஷ்ணு:'என்று அவன் பெருமையையும் பிறந்த ஸ்த்தலத்தின்கொடுமையையும் அருளிச்செய்கிறார்—ஆக்கரானவித்யாதி. ஆக்கரான= ஸ்ருஜ்யரான,

## ३. गुणैर्दशरथोपमः । 1—9.

௩. கு3ணைர்த3ஶரதோ2பம: ॥

ப—ரை. (ஸ்ரீராமன்) கு3ணை:= குணங்களாலே, த3ஶரதோ2பம:= தசரதருக்கொப்பானவன்.

பெரி-வ்யா. (நாச்சியார். 9-3) நஞ்ஜீயர் ஸுந்தரபாண்டிய தேவரைக் கண்டிரா நிற்கச்செய்தே 'கு3ணைர்த3ஶரதோ2பம:'

என்றவிடத்துக்கு ‘பிறந்து படைத்த குணங்களும் ஸ்வாபாவிக குணங்களுமெல்லாம் கூடினாலும் அரைமட்டமாய் சக்ரவர்த்தித் திருமகன் எனனப் போருமித்தனை’ என்றருளிச்செய்ய, அத்தைக்கேட்டு, ‘பரமபுருஷனுக்கு ஒருவன் வயிற்றிலே பிறந்து ஓரேற்றமுண்டாகவேணுமோ? அவன் பிறக்கையாலே அக்குடிதனக்கும் ஏற்றமாமித்தனையன்றோ’ என்றானும் ‘நாம் போன ஸமாதி (யி) இவன் அறிந்திலன்’ என்று பார்த்து, அதெல்லாம் கிடக்கச் செய்தே பரமபுருஷன் என்னும்படி என்னென்றாராம்.

அரும்.—நஞ்ஜீயரித்யாதி. ராஜா, ‘ஸர்வாதி (யி) கனானவனை தஶரதர்க்கு ஸமமாகச் சொல்லலாமோ? என்று ஜீயரைக் கேட்க, “ஆத்மாநம் மாநுஷம் மந்யே” என்று ‘தசரதன்மகன்’ என்கிறதே தமக்கேற்றமாக நினைத்திருக்கையாலே ஸமரென்னலாம். ஸௌஶீல்யமன்றிக்கே பரமபுருஷத்வமுண்டோ? ஶீலகுணமுண்டானபோது காண் பரமபுருஷத்வம்” என்று ஜீயருக்கு விவக்ஷை. நாம் போனஸமாதி = நம் ஹ்ருதயம். என்னென்றாராம் = அவனைக் கொண்டாடினாராம். அரை மட்டமாய் = அளவுபட்டென்றபடி.

பெரி—வ்யா. (பெரியதிரு. 10-4-1) ‘பரமபதத்திலுள்ள ஸ்வாபாவிககுணங்களும், அவத்ரித்து ஆர்ஜித்தகுணங்களும் கூடினால், சக்ரவர்த்தியோடு உபமாநம் மார்மட்டமாய் நிற்குமித்தனை’ என்று இத்தை ஜீயர் அருளிச்செய்ய, “பரமபுருஷனுக்கு ஓரிடத்தே பிறந்து ஒரு குணம் தேடவேணுமோ” என்றார் ஸுந்திரபாண்டியதேவர். ‘நாமோடுகிற நரம்பு இவன் அறிந்திலன்’ என்று அத்தை விட்டு பரமபுருஷன் என்ற போதை அழகு இருந்தபடி என்’ என்றாராம். எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே அந்வயமில்லாதார் பகவத்விஷயத்தில் சொன்ன ஏற்றமெல்லாம் அர்த்தவாதம் என்றிருப்பர்கள். அதுடையவர்கள் பகவத்ப்ரபா(ஹா)வத்துக்கு அவதி(யி) இல்லாமையாலே, சொன்னவை சில சொன்னவித்தனை; சொல்லாததுவே பெரிது’ என்றிருப்பர்கள்.

அரும். ‘பஹவோ ந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே’ என்று நாட்டார் கொண்டாடும்படி ஸமஸ்தகல்யாணகுணாம்ருதோததியாயிருக்கு

மவரை தசரதனோடு ஸாம்யம் சொல்லும்படி அமைத்துக் கொண்டிருக்கை யாலே மஹதா மந்தைः ஸஹ நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷரூபகுணம் ஸூசிதமென்று தாத்பர்யமருளுகிறார்—பரமபதத்திலித்யாதி. நரம்பறிந்திலன்= ரஸதா(யா) ரை அறிந்திலனென்றபடி. அத்தை = ஸௌஶீல்யகுணத்தை. இந்த அழகை அவன் அறியாதே போனானென்று கருத்து. தசராதிகளோடு ஸாம்யம் ஸௌஶீல்யமென்று சொல்லக்கூடுமோ? அபிநயமாமத்தனையன்றோ என்னும் ஶங்கையில் அருளுகிறார் — எம்பெருமானரித்யாதி.

## ௪. अभियाता प्रहर्ता च सेनानयविशारदः । 1—29.

௪ 𑌅𑌭𑌿𑌯𑌾𑌤𑌾 𑌪𑍍𑌰𑌹𑌰𑍍𑌤𑌾 𑌚 𑌸𑍇𑌨𑌾𑌨𑌯𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌃 ।

ப—ரை. (ஸ்ரீராமன்) 𑌅𑌭𑌿𑌯𑌾𑌤𑌾 = யுத்தத்தில் தானாகவே எதிர்த்துச் செல்லுகிறவன், 𑌪𑍍𑌰𑌹𑌰𑍍𑌤𑌾 = எதிரிகளைக் கொல்லுகிறவன், 𑌸𑍇𑌨𑌾𑌨𑌯𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌃 = ஸேனையை நடத்துவதில் ஸமர்த்தன்.

ஈடு. (தி - வாய். 5-4-3.) 𑌅𑌭𑌿𑌯𑌾𑌤𑌾— எதிரிகள் வரப்பொரவிருக்கை யன்றிக்கே, எடுத்து விட்டுப் பொருகையும் தமக்கே பணியாயிருக்கும். 𑌪𑍍𑌰𑌹𑌰𑍍𑌤𑌾 𑌚—தூசித்தலையில் நின்று 'முதல் வெட்டு ஆரது' என்றால், அதில் முற்பாடும் தம்மதாயிருக்கும். 𑌸𑍇𑌨𑌾𑌨𑌯𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌃—தாம் போகாதே, தூசியுமணியும் பேரணியுமாக வகுத்து விட்டால், ஒக்கநின்று பொருவித்தாற்போலே வென்று மீளும்படி படை கோக்கவல்லவர்.

அரும்ப—பொர=யுத்தம்பண்ண. தூசி=யுத்தம். தூசியுமணியும்= தூசியில் அணியும். அணி—இடவணி, வலவணி, பேரணி, பின்னணி. அன்றிக்கே, தூசியும் பின்னணியும் அணியுமென்னுதல். தூசி-யுத்தமும், முன்னணியும். அணியாவது—வ்யூஹம். ஒக்கநின்று=கூடவிருந்து.

## ௫. त्रैलोक्यमपि नाथेन येन स्यान्नाथवत्तरम् । 2—13.

௫. 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌮𑌪𑌿 𑌨𑌾𑌥𑍇𑌨 𑌯𑍇𑌨 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨𑌾𑌥𑌵𑌤𑍍𑌤𑌰𑌮𑍍 ।

ப—ரை. 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌮𑍍 𑌅𑌪𑌿 = மூன்று உலகமும், 𑌯𑍇𑌨 𑌨𑌾𑌥𑍇𑌨 = எந்த நாதனால் (எந்த ராமன் நாதனாயிருந்தால்)

நாதவத்தரம் = மிகவும் நல்ல நாதனையுடையதாக, ஸ்யாத் = இருக்குமோ.

ஈடு. (திருவாய். 8-4-10) த்ரைலோக்யத்தையும் பெருமாளுக்குக் கையடைப்பாக்கினாலும், பின்னையும் ரக்ஷ்யம் சுருங்கி ரக்ஷகத்வத்துடிப்பே விஞ்சியிருக்கும். யேந நாதேந நாத வத்தரம் ஸ்யாத்

அரும்ப—'நாதவத்தரம்' என்றதுக்கு அதிசயத்திலே 'தரப்' ப்ரத்யயம் என்று விவக்ஷித்து அர்த்தம்--த்ரைலோக்யமித்யாதி. இவ்வர்த்தக்ரமேண ஶ்லோகத்துக்கு அந்வயம்——யேநேத்யாதி

௬. बहवो नृप कल्याणगुणाः पुत्रस्य सन्ति ते । 2—26.

ஸூ. பஹவோ ந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே।

ப—ரை. ந்ருப = ஓ அரசனே, தே = உம்முடைய, புத்ரஸ்ய = பிள்ளைக்கு (ஸ்ரீராமனுக்கு) பஹவ: = பல, கல்யாண குணா: = மங்களகுணங்கள், ஸந்தி = இருக்கின்றன.

ஈடு—(திருவாய். 7. 6 ப்ரவேசம்) சக்ரவர்த்தி, 'பெருமாளைத் திருவபிஷேகம் பண்ணுவிக்க' என்று கோலி, 'அறுபதினாயிரம் ஆண்டு ஒரு தலைமிதிக்க ஒருதலை கிளப்பும்படியான ராஜ்யத்தை வருந்தி ஒருபடியடிப்படுத்தினோம். இத்தை ஒரு சிறுபிள்ளை தலையிலே வைத்தால் பொறுக்குமோ, பொறாதோ' என்று விசாரித்து 'இதுதன்னை நாட்டோடே கூட்டிப்பார்ப்போம்' என்று கோலி, ராஜலோகத்தையடையத்திரட்டி 'நான் இங்ஙனே பெருமாளைத் திருவபிஷேகம் பண்ணுவிக்கப் பாராநின்றேன், உங்களுக்கிஷ்டமோ அன்றோ' என்று கேட்க, அநந்தரம் 'கிழவா! போகாய்' என்ன, 'கதம் நு மயி தர்மேண ப்ருதிவீமநுஶாஸதி। பவந்தோ த்ரஷ்டுமிச்சந்தி யுவராஜம் மமாத்மஜம்॥', 'நாம் ஒருப்பட்ட கார்யம் நன்றாய் விழுந்தது. ராஜலோகம் இப்படி த்வரிக்கப் பெறுவதே' என்று அதிலே போர ஹ்ருஷ்டனாய், அந்த ஹர்ஷத்தை நெஞ்சிலே இட்டுவைத்து, 'அதுதன்னை இவர்கள்

வாயாலே சொல்லக் கேட்கலாகாதோ’ என்று, “வாரீர்கோள், அறுபதினுயிரமாண்டு ராஜ்யம் பண்ணுகிறவிடத்து இற்றைவரை எனக்கு என்றொரு ஸுகம் கோலாதே உங்கள் ரக்ஷணத்துக் காமவையே தேடிக்கொடு போந்த நான் ஒரு வார்த்தை சொன்னால், ‘இப்போது நீ இருந்தாயாகில் வீகமென்? க்ரமத்திலே செய்து கொள்ளுகிறோம்’ என்னுதல், அன்றாகில் ‘உனக்கு ப்ரிய மாகில் அப்படிச் செய்யலாகாதோ’ என்று ஒரு வார்த்தை சொல்லி ஆறியிருத்தல் செய்கையொழிய, படுகொலைக்காரர்கை யிலே அகப்பட்டார் ‘தப்பவேணும்’ என்று பார்க்குமாப்போலே நீங்கள் இங்ஙனே கூப்பிடுகைக்கு நான் பண்ணின அபராதமென்’ என்ன—வஹவொ நுவெ கூஊணஹாணாஃ வாதூஸஸெஷி தெ—‘எதிரிகளம்பால் அழியப்பெற்றதில்லை உன்னுடைய விஷ யம். உன்மகனுடைய குணத்தாலே நாட்டைப் படுகொலைக்குத் தினைய் காண் நீ’ என்றார்களாயிற்று. நாங்கள் குணஜிதராய் இவ்வார்த்தை சொன்னோமித்தனையல்லது ஒரு கார்யபுத்த்யா (காயபுஊஷா) சொன்னோமல்லோம் காண். யாதஷிநாஜெவ லெஹெயெஹா ஹாணாநாஜாகுஜொ ஜஹாநு—தாது (யாதா) க்களானவை ‘இன்ன மலையிற்பொன்’ என்று விலைபோமாப் போலே, புறப்பே சில குணங்கள் கண்டால் ‘பெருமாள் பக்கல் குணம்’ என்றிட்டாயிற்று அங்கு விலைபோவது. ‘இவ்வ்யக் தியில் குணம்’ என்றாயிற்றுப் புறப்பு விலைபோவது.

அரும்ப—ஒருப்பட்டகார்யம்=உத்யோகித்த கார்யம். விஷயம்= தேசம். வீகம்= த்வரை.

ஈடு. (தி-வாய் 9–6. ப்ரவேஶம்) சக்ரவர்த்தி, ‘பெருமாளைத் திருவபிஷேகம் பண்ணவேணும்’ என்று கோலி, ‘நாம் அறுபதினுயிரமாண்டு கூட ஒருதலை மிதிக்க ஒருதலை கிளர இப்படி வருந்தி அடிப்படுத்தின ராஜ்யத்தை இன்று சிறியவன்தலை யில் வைத்தால் இது பொறுக்குமோ’ என்று பார்த்து, ‘இது தன்னை நாட்டோடே சேர விசாரித்துச் செய்வோம்’ என்று ராஜலோகத்தோடே கூட்டினவிடத்து ‘ஜௌளவொ ஊஷெஷஸ

நாஶோ விநாஶம் கூர்யந்நிவ' என்று சக்ரவர்த்திமாளிகை அழித்துச் செய்யவேண்டும்படி ஆர்த்துக்கொள்ள, அத்தைக் கேட்டு, 'நாம் நினைத்த கார்யம் வாய்க்கப் போய்த்து. ஆனாலும் இவர்கள் நினைவுதன்னை இவர்கள் வாக்காலே சொல்லக் கேட்டாலாகாதோ' என்னுமத்தைப் பற்ற 'வாரீர்கோள், 'கஶ்சம் நாஹ ஶயிஷ்யே' என்று அறுபதினாயிரமாண்டு சிறியத்தைப் பெரியது நலியாதபடியாக பூமிப்பரப்படைய நோக்கிக்கொண்டு, 'வாஜ்ஞு ரஸ்யாதவத்ரஸ்ய ச்சாயாயாம் ஜரிதம் மயா' என்று முத்துக் குடைநிழலிலே திரிந்து எனக்கென்ன ஒருஸுகம் கோலாதே உங்களுடைய ரக்ஷணதர்மத்தையே செய்துகொண்டு போந்தேன். நான் ஒரு வார்த்தை கேட்டவிடத்து 'இப்போது நீ இருக்கச் செய்தே வேணுமோ? க்ரமத்திலே செய்துகொள்ளுகிறோம்' என்னுதல், அன்றியே 'கார்யமாகில் செய்யலாகாதோ' என்று வார்த்தை சொல்லுகையன்றிக்கே, படுகொலையடித்தவனைத் தப்ப ஒருதார்மிகன்மேலே ஒதுங்க நினைப்பாரைப்போலே என்னை விட்டு என்மகனை அமையும் என்று நீங்கள் விரும்புகைக்கு நான் உங்களுக்குப் பண்ணின அபராத(ய)மென்' என்ன, 'நீ எங்களுக்குப் பண்ணிற்றோரபராதமில்லை. உன் மகனுடைய குணபாரதங்கள் இதுக்கடி. நீ நோக்கிக் கொண்டு போந்த படிகளில் ஒரு குறையில்லை. குணவானாயிருப்பானொரு புத்ரனைப் பெற்று நாட்டைப் படுகொலையடித்தாய் காண்—வஹவ:—உன்னளவல்ல காண் ரக்ஷணதர்மத்தில் அவர்க்குண்டான பாரிப்பு. யாசந்நாஸிவ—நாட்டிலே சிலரை குணஹீநரென்று நிந்திக்கிறதும் சிலரை குணவான்களென்று கொண்டாடுகிறதும். 'இன்ன ஆகரத்திற்பொன்' என்று விலைபெறுமாப்போலே 'இவ்வாஶ்ரயத்திலே கிடக்கிற குணம்' என்றுய்த்து புறப்பு விலை போவது. 'ஹ்ருஷ்யந்த்யோ ஜநஸ்ய ஶ்ரோணவத்யா.'

அநும்ப—முத்துக்களால் வந்த பாண்டரத்வமென்று திருவுள்ளம்பற்றி—முத்தின்குடையென்றது. படுகொலையடித்தவனை = கொலையிலே பட்டு விழும்படி யடித்தவனை ஹிம்ஸகனை என்றபடி. 'பஹவ:' என்ற சப்தம் ஆபேக்ஷிகமாகையாலே—உன்னளவல்ல காண் என்கிறார். தாது:—ரத்நஸுவர்ண

திகள். சிலரை நிந்திக்கிறது—இவருடைய குணமில்லாமையாலே யென்று கருத்து. ஆமமந்தேவ = கடைந்தவர்போலே யானுரென்றபடி.

௭. प्रियवादी च भूतानां सत्यवादी च राघवः । 2—33.

எ. ப்ரியவாதீ ச பூதாநாம் ஸத்யவாதீ ச ராகவ: ।

ப—ரை. ராகவ: = ராமன், பூதாநாம் = ப்ராணிகளுக்கு, ப்ரியவாதீ = ப்ரியமானதைப் பேசுபவன், ஸத்யவாதீ ச = உண்மையானதைச் சொல்லுபவன்.

ஈடு (தி-வாய். 7-5-1.) ப்ரியவாதீ ச—பெருமாள் ஒன்றை அருளிச் செய்தால் அது செவிப்படாதொழியில் செய்யலாவதில்லை; செவிப்படில் இனிதாயன்றியிராது. ஆர்க்குத்தானென்றால்— பூதாநாம்—ஸத்தாயோகி(பி)ஸகலபதார்த்தங்களுக்கும். அஸத்வ்யாவ்ருத்திமாத்ரமே (ஸஹவந்யாவ்ருத்தி) வேண்டுவது. அப்போது ப்ரியமாய் விபாகத்தில் வேறொன்றை ப(ப)லிப்பிக்குமோ என்னில்—ஸத்யவாதீ ச—அருளிச் செய்யுமதுதான் பூத(பூத)ஹிதமாயன்றியிராதென்கிறது. ஓர் உக்தியே இரண்டுமாகாநின்றால், அல்லாதது க்குச் சொல்லவேண்டாவிறே.

அரும்ப—ப்ரியஹிதங்களிரண்டும் பெருமாளே என்னுமதுக்கு ப்ரமாணம்—ப்ரியவாதீசேத்யாதி. 'ஸத்யம் பூதஹிதம் ப்ரோக்தம்' என்றத்தை உட்கொண்டருளிச் செய்கிறார்—பூதஹிதமித்யாதி. இஶ் ச்லோகத்தில் பெருமாள் உக்திக்கன்றோ ப்ரியஹிதத்வங்களைச் சொல்லுகிறது. பெருமாளுக்குச்சொல்லவில்லையே என்ன- அது கிம்புநர்ந்யாயஸித்தமென்கிறார்—ஒருக்தியேயித்யாதி.

௮. व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः । 2—41.

அ. வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:கித:।

ப—ரை. (ஸ்ரீராமன்) மநுஷ்யாணாம் = மனிதர்களுடைய, வ்யஸநேஷு = வ்யஸநங்களில், ப்ருசம் = மிகவும், து:கித: = துக்கமுள்ளவனாக, பவதி = ஆகிறான்.

ஈடு. (தி—வாய். 7-9-7.) திவ்யாந்தப்புரத்திலுள்ளார்க்காதல் திருத்தாய்மார்க்காதல் ஒரு வ்யஸநம் வந்தாலோ துக்கித (ஜீவித) ராவதென்றால்—மநுஷ்யாணாம் ப்ருஶம் ஜீவிதே பவதி—துக்கிதனானவனளவிலன்றிக்கே, ஆனை அளறுபட்டாப் போலே நோவுபடுவராயிற்று. ஜீவிதே பவதி—இன்று ஒரு படியாய், பிற்றைநாள் ஒருபடியாய், அநந்தரம் ஆறிப்போமிவர்களுக்கு; இவர்கள்க்லேஶத்தில் நாள்தோறும் புதியராயிருப்பர். வ்யஸநம் இவனதானால் துக்கமும் இவனதாக வேண்டியிருக்க, இவர் துக்கிதராகைக்கு ஹேது என்னென்னில்—'இவன் படுகிற க்லேசம் இவன் காவற்சோர்வால் வந்ததொன்றன்றே, நம் காவற் சோர்வால் வந்ததொன்றன்றோ' என்று ரக்ஷகராகையாலே நாள் தோறும் புதியராயிருப்பர். 'ஹ்ரீரேஷா ஹி மமாதுலா' என்னக்கடவதிறே. இவனளவல்லவாயிற்று பிற்பாட்டுக்கு அவன் லஜ்ஜிக்கும்படி.

அரும்ப—'மநுஷ்யாணாம்' என்றதுக்கு பாவம்—திவ்யேத்யாதி. 'ப்ருஶம்' என்றதுக்கு அர்த்தம்—துக்கிதனானவனித்யாதி, 'பவதி' என்கிற வர்த்தமாநார்த்தம்—இன்றொருபடியித்யாதி. அளறுபட்டாப்போலே = சேற்றிலே அகப்பட்டாப்போலே. அளறு = சேறு. உதவப்பெற்றிலோமென்று நோவுபட்டிருக்குமோ என்ன—ஹ்ரீரேஷேத்யாதி. 'அதுலா' என்றதுக்கு அர்த்தம்—இவனளவித்யாதி.

१. चैत्रः श्रीमानयं मासः पुण्यः पुष्पितकाननः । 3—4.

௧. சைத்ர: ஸ்ரீமாநயம்மாஸ: புண்ய: புஷ்பிதகாநந:।

ப—ரை. அயம் = இந்த, சைத்ர: மாஸ: = சித்திரை மாஸம், ஸ்ரீமாந் = ஸம்ருத்தியுள்ளது, புண்ய: = புனிதமானது, புஷ்பிதகாநந: = பூத்தகாடுகளையுடையது.

பெ-வ்யா. (திருப்பாவை 1.) ஒரு ஸம்ருத்தியைப் பற்ற காலத்தைக் கொண்டாடிற்றிறே. சைத்ர:—அல்லாதாரிற் காட்டில் பெருமாளுக்குள்ள ப்ராதா (யா) ந்யம்போலே மாஸங்களெல்லாவற்றுக்கும் முதலான மாஸம். ஸ்ரீமாந்—அவர் எல்லாருக்கும்

ராஜாவாக ப்ராப்தரானாற்போலே, சைத்ரமாஸம் ஸர்வர்க்கும் ஸுக (வ) கரமாகையாலே மாஸங்களுக்கெல்லாம் ராஜாவென்கிறது. அயம் மாஸ:—அபி(ஷி)ஷேகமநோரத(ய) ஸமயத்திலே ஸந்நிஹிதமான தன்னேற்றம். அங்கு, ஶேஷியை ஶேஷபூ(ஹ)தர் லபிக்கைக்குக் கொண்டாடுகிற கொண்டாட்டம். இங்கு, ஶேஷபூதரை ஶேஷி லபிப்பைக்குக் கொண்டாடுகிற கொண்டாட்டம். புண்ய: புஷ்பிதகாநந:—'பாவந: ஸர்வலோகாநாம் த்வமேவ' என்றும் 'பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்' என்றும் அவர்க்கு இரண்டாகாரமுண்டானாற்போலே, இக்காலமும் பாவநமுமாய் போக்ய (ஹேது) முமாயிருக்கை. புஷ்பிதகாநந:—படைவீடுபோலே நாம் அலங்கரிக்கவேண்டாதே தானே அலங்கரிக்கை. புஷ்பிதகாநந:—பெருமாள் பொன்முடி சூட, காடு பூமுடி சூடிற்று.

அரும். ஸம்ருத்தியைப் பற்றவென்பது — திருவபிஷேகத்துக்குடலான அதிஶயங்களைப் பற்றவென்றபடி. 'அயம் மாஸ:' என்ன அமைந்திருக்கவும், 'சைத்ர:' என்றதுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார்—அல்லாதாரித்யாதி. அல்லாதார் = பரதாதிகள். காலத்துக்கும் பெருமாளுக்கும் முதன்மையாலே ஸாத்ருஶ்யம் உபபாதித்து, 'ப்ரஜாஸகித்வே சந்த்ரஸ்ய' என்கிறபடியே ஸுககரத்வத்தாலே உண்டான ஸாத்ருஶ்யத்தை அருளிச் செய்கிறார்—அவரெல்லாருக்குமித்யாதி. 'ராஜாவாக ப்ராப்தரானாற்போலே' என்றது—ரஞ்ஜகதயா வந்த ஸுககரத்வம் என்கிற குணாதிஶயத்தாலே ப்ராப்தரானாற்போலே என்றபடி. அயம் என்றத்தாலே அதீதாநாகதவ்யாவ்ருத்தி தோன்றுகையாலும் ஓரதிஶயமுண்டென்கிறார் — அபிஷேகேத்யாதி. அயம் என்கிறது புத்திஸ்த்தபராமர்ஶியாகையாலே அவதாரஹேதுவான சைத்ரமாஸமே இது என்று அக்ஷரார்த்தம் திருவுள்ளம் பற்றி, தாத்பர்யாந்தரம் அருளிச் செய்கிறார்—அங்கு இத்யாதிவாக்யத்வயத்தாலே.

१०. रूपौदार्यगुणैः पुंसां दृष्टिचित्तापहारिणम् । 3. 28.

௧௦. ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம் ॥

ப—ரை. ரூபௌதார்யகுணை:= அழகு தா (ஔா)நம் ஶீலம் ஆகிய இவைகளால், பும்ஸாம் = புருஷர்களுடைய,

த்ருஷ்டிசித்தாபஹாரிணம் = கண்ணையும் மனத்தையும்பறிக்கின்ற (ஸ்ரீராமனைக் கண்டு தசரதன், பார்த்தது போருமென்று த்ருப்தி அடையவில்லை)

ஈடு. (தி-வாய். 5-3-6) ரூபௌதார்யகுணை:—ரூபமென்கிறது— வடிவழகை. ஔதார்யமென்கிறது— அத்தை எல்லார்க்கும் அநுபவிக்கலாம்படி ஸர்வஸ்வதாநம் பண்ணிக்கொண்டிருக்கை. குணமாவது— கொள்ளுகிறவனிலும் தாம் தாழநின்று கொடுக்கும் ஶீலம். தன் மேன்மை தோற்ற இருந்துகொடுக்குமன்று ஆள் பற்றுதிறே. அதுக்காகத் தாழநின்றாயிற்றுத் தன்னைக் கொடுப்பது. பும்ஸாம்— அந்த ஸௌந்தர்யமும் ஔதார்யமும் ஶீலமும் வயிரவுருக்காயிற்று. அப(பு)ஸகள் படுமத்தை வன்னெஞ்சரையும் படுத்தவற்றாயிற்று. அன்றியே, 'ப்ரக்ருதிபுருஷர்கள்' என்றாப்போலேயாய், அசித்வி(வி)லக்ஷணரெல்லாரையும் ஈடுபடுத்தவற்றென்னவுமாம். த்ருஷ்டிசித்தாபஹாரிணம்— கண்ணுக்கு மநஸ்ஸஹகாரம் வேண்டாதே, கண்ணைப் பின்செல்லுமத்தனை நெஞ்சு. தாய் வேறு கன்று வேறாக்கும் விஷயமிறே.

அரும்—ஆள்பற்றுது=ஆள் கிடையாது. வயிரவுருக்கு= வயிரத்தைப் போலே கடிநமானஹ்ருதயத்தையுமுருக்கும். வயிரம்=வஜ்ரம். தாய்வேறித்யாதி. கரணங்களுக்கு ப்ரதாநமாகையாலே மநஸ்ஸை தாய் என்றும், மற்றைக்கரணங்கள் மநஸ்ஸைப் பின்செல்லுகையாலே அவற்றை கன்று என்றும் சொல்லுகிறது. இவ்வர்த்தத்துக்கு 'அபஹாரிணம்' என்கிறதிலே நோக்கு. ஸ்ரீபரதாழ்வானையும் கைகேயியையும் வேறாக்கிற்றிறே.

११. सह पत्न्या विशालाक्ष्या नारायणमुपागमत् । 6—1.

கக. ஸஹ பத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத் ॥

ப—ரை. (ஸ்ரீராமன்) விஶாலாக்ஷ்யா= விசாலமான கண்ணையுடைய, பத்ந்யா ஸஹ= பத்நியோடுகூட, நாராயணம்= நாராயணனை (ஸ்ரீரங்கநாதனை) உபாகமத்= அடைந்தான்.

ஈடு. (தி-வாய். 5-8-1) ஸஹ பத்ந்யா—ஆழங்காலிலே இழிவார் ஒரு கொம்பைக்கொடியைப் பிடித்திழியுமாப்போலே,

வத்ரா ஸஹ— கிண்ணகத்தில் இழிவார் தேசிக (தெஶிக)ரைக் கைப்பிடித்துக்கொண்டு இழியுமாப்போலே, பெருமாள் பெரிய பெருமாளை அநுபவிக்கும்போது பிராட்டியைக் கூடக்கொண்டா யிற்று இழிவது. விஶாலாக்ஷ்யா—இவர்க்குப் பெரியபெருமாள் பக்கலுண்டான ப்ரேமாதிஶயத்தைக் கண்டு, தன்னை அணைக்கும் போதையிற்காட்டிலும் உடம்பெல்லாம் கண்ணானபடி. நாரா யணமுபாகமத்— இவர் நியதி இருக்கிறபடி. இக்கண்ணுக்கு இலக்காய் ஆழங்காற்படாதே அவ்வருகு பட்டார். இத்தால் சொல்லிற்றாயிற்று—தான் தன்னை அநுபவிக்கும்போதும் கூட்டுத் தேடவேண்டும்படியாயிற்று ஆராமை இருக்கும்படியென்கிறது.

அரும்— கொம்பென்றது— 'கொம்புபோற்சீதை' என்றத்தைப்பற்ற. நியதியாவது— ஜிதேந்த்ரியத்வம்.

## १२. ज्ञातिदासी यतो जाता । 7—1.

கஉ. ஜ்ஞாதிதாஸீ யதொ ஜாதா ।

ப—ரை. (கைகேயினுடைய) ஜ்ஞாதிதாஸீ = பந்து (பந்து)வின் வேலைக்காரியும், யதொ ஜாதா = எங்கேயோ பிறந்த வளுமாகிய (மந்தரைஎன்பாள், அகஸ்மாத்தாய் கைகேயினுடைய அழகிய மாளிகைமேலே ஏறினாள்.)

ஈடு. (தி—வாய். 7-5-1) யதொ ஜாதா—இத்தேசத்திலே பிறந்தாளாகில் பெருமாளுக்கு விரோதம் செய்யாளாகையாலே, எங்கேனுமோரிடத்தில் பிறந்தாள் ஒரு விழுந்தான் கிடக்கை என்கிறது. 'யதஃகுதஶ்ஜாதா' என்று வ்யாக்யானம் பண் ணினான் உடாலி. இன்னிலத்திற் பிறவாமை இவளுக்குக் கொ டுமை விளைந்ததென்கிறானிறே. தேசந்தானே எல்லா நன்மை களையும் பிறப்பிக்கவற்றாயிருக்குங் காணும்.

அரும்— ஒருவிழுந்தான் கிடக்கை = அப்ரஸித்தையாய்க் கிடப்பா ளொருத்தி. ஒருத்தன் விழுந்தால், அறிந்தவர்கள் உண்டாகில் வந்தெடுப்பர் கள். இல்லாவிடில் விழுந்தவிடத்தே கிடக்குமித்தனை.

१३. अहं पुनर्देवकुमाररूपमलंकृतं तं सुतमाव्रजन्तम् ।
नन्दामि पश्यन्नपि दर्शनेन भवामि दृष्ट्वा च पुनर्युवेव ॥ 12.106.

௧௩. 𑌅𑌹𑌂 𑌪𑍁𑌨𑌰𑍍𑌦𑍇𑌵𑌕𑍁𑌮𑌾𑌰𑌰𑍂𑌪𑌮𑌲𑌂𑌕𑍃𑌤𑌂 𑌤𑌂 𑌸𑍁𑌤𑌮𑌾𑌵𑍍𑌰𑌜𑌨𑍍𑌤𑌂 । 𑌨𑌨𑍍𑌦𑌾𑌮𑌿 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌨𑌪𑌿 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌭𑌵𑌾𑌮𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌚 𑌪𑍁𑌨𑌰𑍍𑌯𑍁𑌵𑍇𑌵 ॥

ப—ரை. 𑌅𑌹𑌂 𑌪𑍁𑌨𑌃 = நானோ, 𑌦𑍇𑌵𑌕𑍁𑌮𑌾𑌰𑌰𑍂𑌪𑌂 = மன்மதனுடைய அல்லது ஸுப்ரமண்யனுடைய ரூபம்போன்ற ரூபத்தையுடையவனும், 𑌅𑌲𑌂𑌕𑍃𑌤𑌂 = அலங்கரிக்கப்பட்டவனுமான, 𑌤𑌂 𑌸𑍁𑌤𑌂 = அந்தப் பிள்ளையை (ராமனை) 𑌆𑌵𑍍𑌰𑌜𑌨𑍍𑌤𑌂 = எனது ஸமீபத்திற்கு வருகிறவனாக, 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 = அகக்கண்ணால், 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌅𑌪𑌿 = கண்டுகொண்டும் (என்ஸமீபம் வருகிறவனாக மனோரதித்தவனாயிருந்தும்) 𑌨𑌨𑍍𑌦𑌾𑌮𑌿 = ஸந்தோஷப்படுகிறேன். 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 = நேரில் பார்த்து விட்டோ, 𑌯𑍁𑌵𑌾 𑌇𑌵 = வாலிபனைப்போல, 𑌭𑌵𑌾𑌮𑌿 = ஆகின்றேன். அந்த பிள்ளையை என்னிடம் வருகிறவனாக, (𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 = கேட்டு) 𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 = கண்ணால், 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 𑌅𑌪𑌿 = பார்க்கிறவனைப்போலே, (𑌅𑌪𑌿𑌃—𑌇𑌵𑌾𑌰𑍍𑌥𑍇) 𑌨𑌨𑍍𑌦𑌾𑌮𑌿. 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌚, 𑌪𑍁𑌨𑌃 = மறுபடியும், 𑌯𑍁𑌵𑌾 𑌇𑌵, 𑌭𑌵𑌾𑌮𑌿 = என்று வ்யாக்யாநிப்பாருமுண்டு.

ஈடு. (திருவாய். 7-4 ப்ரவேஶம்) 𑌅𑌹𑌂 𑌪𑍁𑌨𑌃—என் ப்ரக்ருதியை அறிந்து என்வழியே போந்த நீ, 'பெருமாள் காடேறப் போக' என்றால் நான் ஜீவிப்பேனென்று சொன்னாயே. 𑌦𑍇𑌵𑌕𑍁𑌮𑌾𑌰𑌰𑍂𑌪𑌂—அது கிடக்க, இவரையே நீ தான் 'காடேறப் போக' என்கிறது. 'இவர்க்குமவ்வளவேயோ' என்று சிறியாத்தான் கேட்க, 'கண்ணெச்சிலாம் என்று தரம்போராதாரை ஒப்பாகச் சொல்லி ரிஷி கரிபூசுகிறான்' என்றார். 𑌅𑌲𑌂𑌕𑍃𑌤𑌂—அத்தாலும் வெறும்புறங்கிடீரொரு போலி சொல்லலாவது, ஒப்பித்தால் ஒக்கச் சொல்லலாவாரில்லை. 𑌤𑌂 𑌸𑍁𑌤𑌂—இவனுக்கு இரண்டுபடியும் உத்தேஶ்யமாயிருக்கிறபடி. 𑌆𑌵𑍍𑌰𑌜𑌨𑍍𑌤𑌂—புஷ்பம் அல

ரும்போது எங்கும் ஒக்கப்பிறக்கும் விகாஸம்போலே. அதுவும் வண்டை நோக்கியிறே; இவரும் போக்தா (ஹோக்தா)க்களைக் குறித்திறே. ந்ருஜீத ராஜி— கண்டபடியே இருக்கச்செய்தே, காணாது கண்டாரைப்போலே ஆயிற்று நாள்தோறும் நாள்தோறும் க்ஷணம்தோறும் க்ஷணம்தோறும் உகக்கும்படி. ஸ்பர்ஶந— அணைத்தல், வார்த்தைசொல்லுதல் செய்யவேண்டா; காட்சியே அமையும். கரைபுரண்டு அநுபவமுள்ளவிடத்திற்போலே காணும் ப்ரயோஜநம். ஸதா (ஊ) பஶ்யந்தியிறே. ஷஷ்டிர் வர்ஷ ஸஹஸ்ராணி— அறுபதினாயிரம் ஸம்வத்ஸரம் வயஸ்ஸைப் புக்கு வ்ருத்த (வ்ருத்த) ஞன சக்ரவர்த்தி, பெருமாளைக் கண்டபின்பு பெருமாளுக்கும் தனக்கும் வாசி தெரியாதபடியானன்; 'காமனைப்பயந்தகாளை' என்னுமாப்போலே. தன்னை அநுபவிப்பாரையும் தன்னைப்போலே யாக்கி உஜ்ஜீவிப்பிக்கும் விஷயம்போலே காணும். 'யௌவநஸ்தோ ஹி ராஜா ஸௌவர்ணஸ்ஸர்வதா ஜராத்' என்னும்படியானரிறே வஸுதேவரும்.

அரும்பதம்— புந:— வ்யாவ்ருத்தியுண்டென்றபடி. கைகேயியைப் பார்த்து 'இப்போது எனக்கு விசேஷமுண்டு' என்று சொல்லுகிறவனுடைய பாவம்— என்ப்ரகிருதியையித்யாதி. அது கிடக்க- எனக்கு ஹிதகாமையாயிருக்கிற ஆகாரமில்லாவிட்டாலுமென்றபடி. எனக்கு ஹிதகாமையாயிருக்கிற ஆகாரத்தைப்பார்த்திலேயேயாகிலும், இவருடைய ஆபிரூப்யத்தைப்பார்த்தால், இவரை 'காடேறப்போ' என்று சொல்ல வாயெழுந்ததோ என்றுதாத்பர்யம். தேவகுமார:— ஸுப்ரஹ்மண்ய:. இவர்க்கும்— பெருமாளுக்கும். அவ்வளவேயோ—அழகு ஸுப்ரம்மண்யனளவோ என்றபடி. கேட்க நம்பிள்ளையைக்கேட்க. கண்ணெச்சில்— த்ருஷ்டிதோஷம். கரிபூசுகை— த்ருஷ்டிதோஷபரிஹாரமாகக் கரியைப்பூசுகை. அழகை மறைக்கிறானென்றபடி. 'தேவகுமாரரூபம்' என்றமுந்தரச்சொல்லி, அநந்தரம் 'அலங்க்ருதம்' என்னதுக்கு பாவம்— அத்தாலுமித்யாதி. அத்தாலும்—கரிபூசுகிற ஆகாரத்தாலும். இவனுக்கு—சக்ரவர்த்திக்கு,அன்றிக்கே ரிஷிக்கு. இரண்டுபடியும்—அழகும், புத்ரத்வமும். ஆ ஸுமந்தாத் வ்ரஜந்தம் என்று விவக்ஷித்து பாவம்—புஷ்பமித்யாதி. அதாவது—பூ அலரும்போது ஒக்கவொருவிகாஸம் பிறக்குமாப்போலே, இவர் நடக்கும்போது திருமேனியெங்கும் ஒக்கவொரு செவ்வி பிறக்குமென்றபடி. சதுர்கதியிறே நடக்கிற நடையிலே மத்தகஜத்தினுடைய மதிப்பும், புலியினுடைய சிவிட்கும், ரிஷபத்தினுடைய

செருக்கும், விம்மத்தினுடைய பராபிபவநமும் (ஈஷிஹவநம்) இந்த நாலும் காணுமாயிறே இருப்பது. "இந்த ஸேவைதன்னை ஸேவித்தவர்களுக்கு நம்பெருமாளுடைய படியேற்றல் ஸேவையை ப்ரத்யபிஜ்ஞை (ப்ரத்யபிஜ்ஞா) பண்ணலாயிருக்கும்" என்றருளிச்செய்வர். இந்தப்படியேற்றத்தைக் கோயிலண்ணன் ஸேவித்து வித்த(விஐ)ராய் அருளிச்செய்ததொரு ஶ்லோகத்தை அருளிச்செய்வர்— 'ப்ராய: பரவ்யோமபதேரபி ஸ்யாதா (ஷா) ரோஹணுரோஹணசாதுரீதி. வியத்க (ஞ்ஞூ) தஸ்தத்ர து தாமத்ருஷ்ட்வா புஷ்போத்கரோ ரங்கிணமேதி பூய:'. 'ஆவ்ரஜந்தம்' என்றதுக்கு ஆபிமுக்யேந வ்ரஜந்தம் என்று விவக்ஷித்து அர்த்தாந்தரம்— அதுவுமித்யாதி. 'பஶ்யந்' என்கிற வர்த்தமானத்தாலே— 'நாள்தோறும்' என்றும், 'நந்தாமி' என்கிற வர்த்தமானத்தாலே 'க்ஷணம்தோறும்' என்றும் விவக்ஷிக்கிறதென்று அருளிச்செய்கிறார்— நாள்தோறுமித்யாதி. காணுநிற்கச்செய்தே ஸந்தோஷிக்கிறது பரிஷ்வங்காதிகளுமுண்டாயோ என்ன— அணைத்தலித்யாதி. காட்சி மாத்திரமே போருமோ என்ன— கரைபுரண்ட வித்யாதி. கரைபுரண்ட அநுபவமுள்ளவிடம்=பரமபதம். அங்கேயும் காட்சியோ ப்ரயோஜனமென்ன -- ஸதா பஶ்யந்தீத்யாதி. வ்ருத்தனுனவன் மகனைப்போலே ஆகக்கூடுமோ என்ன— காமனையித்யாதி. காமனைப்பெற்ற யுவாவென்றபடி. ஸர்வஶக்தியாகையாலே அவனுக்குக் கானேயாகலாம்; இவனுக்குக் கூடுமோ என்ன— தன்னையித்யாதி.

१४. तत्र काषायिणो वृद्धान् वेत्रपाणीन् स्वलंकृतान् ।
दद‍र्श विष्ठितान् द्वारि स्त्यध्यक्षान् सुसमाहितान् ॥ 16—3.

௧௪. தத்ர காஷாயிணோ வ்ருத்தாந் வேத்ரபாணீந் ஸ்வலங்க்ருதாந் । தத‍ர்ஶ விஷ்டிதாந் த்வாரி ஸ்த்ர்யத்யக்ஷாந் ஸுஸமாஹிதாந் ॥

ப—ரை. (ஸ்ரீராமன்) தத்ர = அங்கே (தசரதரந்தப்புரத்தில்) காஷாயிண: = காஷாயவஸ்த்ரங்களை தரிக்கின்றவர்களும், வேத்ரபாணீந் = பிரம்புக்கையிலுள்ளவர்களும், ஸ்வலங்க்ருதாந் = நன்றாக அலங்கரிக்கப்பட்டவர்களும், த்வாரி = வாயிலில், விஷ்டிதாந் = இருக்கின்றவர்களும், ஸுஸமாஹிதாந் = மிகவும் ஜாக்கிரதையுள்ளவர்களுமான, வ்ருத்தாந் ஸ்த்ர்யத்யக்ஷாந் = கிழக்கஞ்சுகிகளை, தத‍ர்ஶ = கண்டான்,

ஈடு. (தி-வாய். 5-9-3) தத்ர காஷாயிண:—தந்தாமைப் பேணுமவர்களல்லாமையாலே அழுக்குச் சட்டையும் தாங்களுமாயிறேயிருப்பது. வ்ருத்தாந்—தொண்ணூற்றஞ்சு வயஸ்ஸுக்கு மேலாய் வீதராக (ர)ராயிருப்பாரையிறே அந்தப்புரங்களுக்கு வைப்பது. வேத்ரபாணீந்—பெருமாள் விற்பிடித்தாப்போலே அவர்கள் பிரம்பு பிடித்தபடி. விற்பிடித்து ரக்ஷகராயிருப்பாரும் பிரம்பு பிடித்து ரக்ஷகராயிருப்பாரும் காணும். ஸ்வலங்க்ருதாந்—பேணாத பரிவட்டங்களை உடையராய் வ்ருத்த (வ்ருத்) ருமாயிருந்தார்களாகில் இவர்களுக்கு அலங்காரமாவதென்னென்னில்—பெருமாள் சக்ரவர்த்தி மாளிகையிலே போய் திருமஞ்சனம் பண்ணி அமுதுசெய்து மீண்டு திவ்யாந்தப்புரத்திலே எழுந்தருளும்போது, சக்ரவர்த்தியோபாதி, பழையராகையாலும் தங்கள் பரிவாலுமாக இவரை மடியிலே வைத்தணைத்து உச்சியை மோந்து விடுவார்கள். அத்தாலே குங்குமக்குழம்பும் கோயிற்சாந்துமாயிருப்பர்கள். பெருமாளுடையவும் பிராட்டியுடையவுமொப்பனைபோலன்று இவர்களொப்பனை.

அரும்ப— தம்திருமாளிகை யிருக்க, 'சக்ரவர்த்திமாளிகையிலே அமுதுசெய்து' என்கிறதுக்கு நியாமகம் ஏதென்னில்— 'ஆடியமுதுசெய்தப்பனுமுண்டிலன்' இத்யாதி உண்டென்று கண்டுகொள்வது. 'ஸ்வ' என்றத்துக்கு அர்த்தம்— பெருமாளுடைய வித்யாதி.

१९. पतिसंमानिता सीता भर्तारमसितेक्षणा ।
आद्वारमनुवव्राज मङ्गलान्यभिदध्युषी ॥ 16– 21.

க௯. பதிஸம்மாநிதா ஸீதா பர்த்தாரமஸிதேக்ஷணா ।
ஆத்வாரமநுவவ்ராஜ மங்களாந்யபிதத்⁴யுஷீ ॥

ப—ரை. அஸிதேக்ஷணா= அழகிய கருவிழியுள்ள, ஸீதா= ஸீதை, பதிஸம்மாநிதா= பர்த்தாவினால் வெகுமானிக்கப்பட்டவளாய், மங்களாநி= மங்களங்களை, அபிதத்⁴யுஷீ= ப்ரார்த்தனை செய்பவளாய்க்கொண்டு, பர்த்தாரம்= கணவனை, ஆத்வாரம்= வாயில்வரையில், அநுவவ்ராஜ= பின்தொடர்ந்து வந்தாள்.

பெரி—வ்யா. (திருவிருத்தம். 24) பதிஸம்ஶோபிதா—பெருமாள் சக்ரவர்த்திபாடு ஸுமந்த்ரனழைக்க எழுந்தருளுகிற போது, தொடர்ந்து பின்னே புறப்பட்ட பிராட்டிக்குத் திருத் தோளில் மாலையை வாங்கியிட்டு 'நாம் வருமளவும் வ்ருத்தகீர்த்தநம் பண்ணியிரு' என்று எழுந்தருளினார் என்று பழையவர்கள் நிர்வாஹம். 'மாலையையிட்டுத் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு எழுந்தருளினார்' என்று பட்டர். அஸிதேக்ஷணா—இவர் தோளில் மாலையிட்டதுக்கு இவள் கண்ணாலே மாலையிட்டபடி.

அரும்ப—எம்பெருமான் தனக்கும் ஸர்வஸ்வமாயிருப்பது மாலை என்றும், அத்தைக்கொடுத்து இவளாசையைத் தீர்க்க வேண்டும்படி இவன் விரும்பியிருப்பனென்றும் தாத்பர்யமாகையால் அத்தை ஸம்வாத [ஓ] முகேந த்ருடீகரிக்கிறார்— பதியித்யாதி. பதியானவன் பார்யைக்கு ஸம்மாநம் பண்ணுகைக்கு உசிதமென்னென்னில்— வஸ்த்ரபூஷணங்களென்ன வொண்ணாது, ஜநகமஹாராஜபுத்ரியாகையாலே; இனித் தம்மைக்குறித்துப் பாரதந்த்ரமாயிருக்கை யென்னவொண்ணாது, ஐயரழைத்துவர விட்டபடியாலே; தனக்கு அபிமதமான மாலை இவளுக்கு தாரகமாகக்கொடுக்குமித்தனை என்று எடுத்த ப்ரமாணத்துக்கு பாவமருளிச் செய்கிறார்— பெருமாளித்யாதி. அபிமதமான மாலையைக்கொடுத்தவவ்வளவேயன்றிக்கே, கழித்த மாலையை இட்டதென்று அபராதக்ஷமாபணமும் பண்ணிப்போனார் என்று பட்டர் நிர்வஹித்தாரென்றருளிச்செய்கிறார் — மாலையையித்யாதி.

१६. दीक्षितं व्रतसंपन्नं वराजिनधरं शुचिम् ।
कुरङ्गशृङ्गपाणिं च पश्यन्ती त्वा भजाम्यहम् ॥ 16—28.

௧௬. தீக்ஷிதம் வ்ரதஸம்பந்நம் வராஜிநதரம் ஶுசிம் ।
குரங்கஶ்ருங்கபாணிம் ச பஶ்யந்தீ த்வா பஜாம்யஹம் ॥

ப—ரை. அஹம் = நான், தீக்ஷிதம் = தீக்ஷையுள்ளவரும், வ்ரதஸம்பந்நம் = நன்றாக வ்ரதமுடையவரும், வராஜிநதரம் = நல்ல மான்தோலை தரிக்கின்றவரும், ஶுசிம் = பரிசுத்தரும், குரங்கஶ்ருங்கபாணிம் ச = மான் கொம்பு கையிலுள்ளவருமாகிய, த்வா = உம்மை, பஶ்யந்தீ = பார்க்கின்றவளாய், (பார்ப்பதற்காக) பஜாமி = பஜிக்கின்றேன்.

பெரி-வ்யா. (நாச்சியார் திருமொழி. 14-2) தீக்ஷிதஃ— திருமேனியிலே பூசின வெண்ணெயும், போர்த்த உருப்புத் தோலும், யஜமாநவேஷம்தோற்றும்படியாக விருக்கும்படி. ஸகலம் வஞ்சிஃ—ரிஷி சொன்னவளவன்றிக்கே, அவன் ஒரு பட்டினிவிடச்சொல்லுமாகில் தாம் இரண்டுபட்டினிவிடுவர். வராஜிநபரஃ— நல்லபரிவட்டங்கள் சாற்றுமதின்றிக்கே, வராஜிநதரராயிருப்பர். ஶுசிஃ= ஒருவரையும் ஸ்பர்ஶிக்கவாகாது; பிராட்டியொருத்தியையும் செய்பலாவதில்லையிறே என்றால், அவள் தன்னை ஸ்பர்ஶிக்கிலும் அடுத்தடுத்து முழுகாநிற்பர்.

ஈடு. (தி-வாய். 4-8-4) தீக்ஷிததீக்ஷாதி. பிராட்டி ஆசாரப்ரதா (யா)நமான ஜநககுலத்தில் பிறப்பாலே அவ்வடிவை விரும்பினாள். தீக்ஷிதஃ—உறுப்புத்தோலும் வெண்ணெய் பூசின உடம்புமான யஜமாநவேஷத்தோடே நின்ற நிலையைக் காண ஆசைப்படா நின்றேனென்கிறாள். ஸகலாவஞ்சிஃ—ரிஷி ஒரு பட்டினிவிடச்சொன்னானாகில், 'இவன் நம்முடைய ஸௌகுமார்யத்துக்கு 'பொறாது' என்று சொன்னானித்தனை' என்று நாலுபட்டினி விட ஒருப்படுவராயிற்று தர்மஶ்ரத்தையாலே. வராஜிநபரஃ—கூறையுடையையும் காற்கடைக் கொள்ளவேண்டும்படியாயிருக்கை. ஶுசிஃ—'ஒரு ஸ்த்ரீகளையும் தீண்டலாகாது. தர்மபத்நியாகையாலே பிராட்டியைத் தீண்டினால் வருவதொரு சேதமில்லையிறே; ஆனபின்பு அதொழிய பரிஹரிப்பது' என்றால் அதுதன்னிலும் அதிஶங்கைபண்ணி, பிராட்டியுடைய திருப்பரிவட்டம் தாக்கினாலும் முழுகத் தேடாநிர்பர். குரங்கஶ்ருங்கபாணிஂச— 'ஶகலவஸ்யரோ யஙீ' என்னுமதிற்காட்டிலும், கையும் கலைக் கொம்புமாயிருக்குமதுதானே போந்திருக்கை. பஶ்யந்தீ கா ஹஜாமி ஹஃ— 'மேல்வரும் ப (ஹ) லத்தை அபேக்ஷிக்கவே, நடுவுள்ளது ஆநுஷங்கிகமாய் வருமிறே' என்னுமத்தைப் பற்றச் சொல்லுகிறாள். பஶ்யந்தீ கா ஹஜாமி ஹஃ— பகவத்பஜநம்(ஹமவஜ்ஜநஃ)பண்ணுவார் பண்ணுவதெல்லாம் த்ருஷ்ட (த்ருஷ்ட) த்துக்கிறே. ஆகையாலே த்ருஷ்டத்துக்காக பஜிக்கிறாள் காணும். ஸதா பஶ்யந்தி

யிறே அங்கும். ‘வழிப்போக்கில் கண்ணெச்சில் வாராதொழிய வேணும்’ என்றிறே மங்களாஶாஸநம் பண்ணுகிறது. அது தன்னடையே வருமிறே மேல் வரும் பலத்தை அபேக்ஷிக்கவே. ஸாவித்ரி தன் பர்த்தாவைக் காட்டி ‘இவனுக்கு நான் அநேகம் பிள்ளைகளைப் பெறவேணும்’ என்று வேண்டிக்கொண்டாளிறே.

அரும்— உருப்புத்தோல் = க்ருஷ்ணாஜிநம். கூறை = திருப்பீதாம்பரம். காற்கடைக்கொள்ள = உபேக்ஷிக்க.‘ஶுசிம்’ என்றதுக்கு வாஸனை—ஒரு ஸ்திரீகளையுமித்யாதி. வழிப்போக்கில் கண்ணெச்சில் வாராமல் மங்களாஶாஸனம் பண்ணுகிற ப்ரகரணத்திலே, திருவபிஷேகத்துக்கு அங்கமானவற்றை ஆசைப்படுவானென்னென்ன—மேல் வருமித்யாதி. அநுபவிப்பேனென்னாதே, ‘பஶ்யந்தீ’ என்றதுக்கு வாஸனையை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார்— பகவத்பஜனமித்யாதி. த்ருஷ்டத்துக்கிறே யென்பது, சாடு. வாஸ்தவார்த்தம்—தர்ஶநம். ரஸம்— த்ருஷ்டப்ரயோஜநம்.

१७. यश्च रामं न पश्येत्तु यं च रामो न पश्यति ।
निन्दितः स वसेल्लोके स्वात्माप्येनं विगर्हते ॥ 17-14.

கஎ. 𑌯𑌶𑍍𑌚 𑌰𑌾𑌮𑌂 𑌨 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍𑌤𑍁 𑌯𑌂 𑌚 𑌰𑌾𑌮𑍋 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌨𑌿𑌨𑍍𑌦𑌿𑌤𑌃 𑌸 𑌵𑌸𑍇𑌲𑍍𑌲𑍋𑌕𑍇 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌪𑍍𑌯𑍇𑌨𑌂 𑌵𑌿𑌗𑌰𑍍𑌹𑌤𑍇 ॥

ப—ரை. 𑌯𑌃 𑌤𑍁 = விசேஷமுள்ளவனானாலும் யாவனொருவன், 𑌰𑌾𑌮𑌂 𑌚 = ராமனையும், 𑌨 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍 = பார்க்கிறதில்லையோ; 𑌰𑌾𑌮𑌃 𑌚 = ராமனும், 𑌯𑌂 = எவனொருவனை, 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 = பார்க்கிறதில்லையோ; 𑌸𑌃 = அவன், 𑌲𑍋𑌕𑍇 = உலகத்தில், 𑌨𑌿𑌨𑍍𑌦𑌿𑌤𑌃 = நிந்திக்கப்பட்டவனாய், 𑌵𑌸𑍇𑌤𑍍 = வஸிக்கவேண்டும், 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 𑌅𑌪𑌿 = தன்மனதும், 𑌏𑌨𑌂 = இந்த மனிதனை, 𑌵𑌿𑌗𑌰𑍍𑌹𑌤𑍇 = நிந்திக்கிறது.

பெ—வ்யா, (பெரிய திருமொழி, 1-1-1) 𑌯𑌶𑍍𑌚 𑌰𑌾𑌮𑌂 𑌨 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍𑌤𑍁— ‘ராமம்’ என்கிறது கண்ணுக்கு வகுத்த விஷயத்தை. 𑌯𑌃—காணாதிருக்கிறவன் யாவனொருவன். 𑌤𑍁—எத்தனையேனும் உயர்ந்தவனாகவுமாம். இது தப்பினாலும், தப்பாதது தப்பினால் வருமது இவ்வளவன்று என்கைக்காக விஶேஷிக்கிறது—

யம்வ ஙாமொ ந வஸ ்தி— எத்தனையேனும் சிறியாரும் இவர் கண்பார்வைக்கு இலக்காகாதாரில்லை. யழ— எத்தனையேனும் சிறியவனென்கிறது. எத்தனையேனும் சிறியாரிறே இவர் கண்ணிற் பார்வைக்கு இலக்காவார். 'யாருமோர் நிலைமையனென வறிவரிய வெம்பெருமான் யாருமோர் நிலைமையனென வறிவெளிய வெம் பெருமான்' ப்ரஹ்மாதிகளுடைய ஞானத்துக்கும் அவிஷயமா யிருக்கும்; ஓரிடைச்சிக்கும் வேடனுக்கும் கைபுகுந்திருக்கும். எத்தனையேனும் உயர்ந்தவனாகிலும் பெருமாளுடைய ஒருநாளைப் புறப்பாடு காணுனாகில், அவன் பெரியவனல்லன். எத்தனையே னும் சிறியனானவன் பக்கலிலும் தப்பாது அவருடைய பார்வை. தப்புகிறான் யாவனொருவன், அவன் அவஸ்துக்களோடும் எண்ண ப்படான். எண்ணப்படாமையிலே எண்ணப்படும். எல்லாரும் நிந் தித்து 'சீ, சீ' என்னப்படும். இவனை நிந்திப்பார் வஸிஷ்ட்டாதிகள் துடக்கமானார் நால்வரிருவரோ வென்னில்— நிநீதஃ ஸ வ லொ கெ. லொகெ நிநீதஃ— இவனை நிந்திக்கைக்குரியால்லா தாரில்லை. விஷயப்ரவணனானவன் இப்போது பழியாய் மேல் நரக மாயிருக்கச்செய்தே, தான் 'நல்லது செய்கிறோம்' என்றிருக்கு மிறே. அப்படி தான் 'நல்லதுசெய்கிறோம்' என்றிருக்குமோவெ ன்னில்— ஸ்வாத்மாவெ ்நபி வி஗ஹதெ— தானும் தன்னை நிந் தித்துக்கொள்ளும். திருக்கைத்தலம் இழந்தவன் 'இற்றைப் புறப் பாடு காணப் பெறாத நாம் கர்ப்பூரமும் எலுமிச்சங்காயும் பெற் றோமாகில் முடிந்து பிழைக்கலாயிற்று' என்றிருக்குமிறே.

அரும்ப— ப்ராதாந்யே சகாரமென்றருளிச்செய்கிறார்— எத்தனையே னுமித்யாதி. 'இது' என்றது தன்னுடைய ஸேவை என்கை. தப்பாதது— பெருமாளுடைய கடாக்ஷம். 'ராமஶ்ச' என்றந்வயித்து, அதிநிக்ருஷ்டனை யும் கடாக்ஷிக்குமவரென்கிற ப்ராதாந்யத்தை விவக்ஷித்தருளிச்செய்கிறார்— எத்தனையித்யாதி. உத்க்ருஷ்டரைக்கடாக்ஷியாமல் நிக்ருஷ்டரைக் கடாக்ஷி ப்பரென்னுமதுக்கு ஸம்வாதம்— யாருமித்யாதி.

१८. न नूनं मयि कैकेयि किंचिदाशंससे गुणम् ।
यद्राजानमवोचस्त्वं ममेश्वरतरा सती ॥ 19—24.

௧௮. ந நூநம் மயி கைகேயி கிஞ்சிதாஶம்ஸஸே குணம் ।
யத்ராஜாநமவோசஸ்த்வம் மமேஶ்வரதரா ஸதீ ॥

ப—ரை. கைகேயி= ஏ கைகேயி, மயி= என்னிடத்தில், குணம்= குணத்தை, கிஞ்சித்= கொஞ்சம்கூட, நாஶம்ஸஸே (நீர்) அறியவில்லை. (இருக்கிறதாக நினைக்கவில்லை) நூநம்= நிச்சயம். யத்= யாதொரு காரணத்தால், த்வம்= நீர், மம= எனக்கு, (என்னை) ஈஶ்வரதராஸதீ= நியமிக்க மிக்க பாத்தியதையுள்ளவராயிருந்தும், ராஜாநம்= அரசரை (தசரதரோடு) அவோச:= சொன்னீரோ.

பெ—வ்யா. (பெரியதிருமொழி 2-3-1) ந நூநம் மயி கைகேயி— 'சக்ரவர்த்தி வார்த்தை சொல்லமாட்டாமை இருக்கிறனத்தனை. உம்முடைய தம்பிக்கு ராஜ்யத்தைக் கொடுத்தான். உம்மைக் காடேறப்போகக் காணுமவன் நினைத்திருப்பது' என்று சக்ரவர்த்தி கருத்தைச் சொல்ல, அத்தைக்கேட்டு 'நடுவிலாய்ச்சி, திருவடிகளிலே அழகிதாக ஶுஶ்ரூஷித்தோமென்றிருந்தோம். நம் பக்கல் ஒருகுணமுண்டாக நினைத்திராமையிறே தாம் போகச் சொல்லாமே ஐயர் கருத்தாக அருளிச்செய்தது' என்று 'ஐயரோ பாதியாகவோ உம்மை நினைத்திருப்பது? அவரை ஈஶ்வரராகவும், உம்மை ஈஶ்வரதரையாகவுமிறே நினைத்திருப்பது' என்றாரிறே.

१९. राज्यं च तव रक्षेयमहं वेलेव सागरम् ।
प्रतिजानामि ते वीर मा भूवं वीरलोकभाक् ॥ 23—28.

௧௯. ராஜ்யம் ச தவ ரக்ஷேயமஹம் வேலேவ ஸாகரம் ।
ப்ரதிஜாநாமி தே வீர மா பூவம் வீரலோகபாக் ॥

ப—ரை. அஹம்= நான், தவ= தேவரீருடைய, ராஜ்யம் ச= ராஜ்யத்தையும், வேலா= கரை, ஸாகரம் இவ= ஸமுத்திரத்தைப்போலே, ரக்ஷேயம்= காப்பாற்றுவேன். வீர= ஏ சூரா, தே= தேவரீரின் பொருட்டு, (தேவரீரிடத்தில்) ப்ரதிஜா

ஜாநி= ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன். (இல்லாவிடில்) வீரலோ கான் = வீரர்களுக்குரிய லோகத்தை அடைபவனாய், ந ஸஹ்ய = (நான்) ஆகக்கடவனல்லன்.

பெ-வ்யா. (கண்ணிநுண்சிறுத்தாம்பு ப்ரவேஶம்) ராஜ்யம் ச தவ ரக்ஷேயம் — 'ராக்ஷஸ யஜேஷண ஜநேந' என்கிறபடியே உம்முடைய ரக்ஷணம் பண்ணுகையன்றிக்கே, உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிக்கக்கடவேன். எனக்கு தாதர்த்யம்(தாஸ்யம்) ஸ்வரூபமானாலும் உம்மால் என்னை மீறவொண்ணாது காணும். ஸமுத்ர இவ வேலாம் — கடலுக்குக் கரை ஶேஷமாயிருக்கச் செய்தேயும், கரையை அதிக்ரமிக்கமாட்டாதிறே கடல். அப்படியே 'நீர் பெரியீர்' என்று, உம்மாலென்னை விஞ்சவொண்ணாது காணும். ப்ரதிஜாநாமி — நானிப்படி ப்ரதிஜ்ஞையைப்பண்ணுகிறேன். தே வீர — ஒருகோழை முன்னேயோ நான் ப்ரதிஜ்ஞைபண்ணிற்று; ப்ரதிஜ்ஞை பண்ணினால் அத்தைத் தலைக்கட்டித் தரவல்ல ஆண்பிள்ளைத்தனமுடைய உம்முடைய முன்னேயன்றோ. ந ஸஹ்ய — இப்படிச்செய்திலேனாகில், உம்முடைய ஸந்நிதி(யி)யில் வர்த்திக்கப்பெறுதொழிகையுமன்றிக்கே, உம்முடைய ராஜ்யத்திலும் வர்த்திக்கப்பெறுதவனாகிறேன். வீரலோகான் — உம்மை முடிசூடி அநுபவிக்கப் பாரித்து அதுபெறுதே போன சக்ரவர்த்தி புக்க லோகம் புகுகிறேன்.

அரும்— சகாரத்தை அநுக்தஸமுச்சயமாக்கி அர்த்தம்— ரக்ஷேத்யாதி. 'தவ ராஜ்யம் ச ரக்ஷேயம்' என்கையாலே ஶேஷத்வம் தோன்றுகையால் ஶேஷபூதனை நீ என்னை ரக்ஷிக்கையாவதென்னென்கிற ஶங்கையிலே 'ரக்ஷேயம்' என்கிற லிங்கை ஆவஶ்யககார்யகரப்ரவர்த்தந(?) நிமந்த்ரணத்திலே யாக்கி அருளிச்செய்கிறார்—எனக்கித்யாதி. மீறவொண்ணாது=அதிக்ரமிக்கவொண்ணாது, ரக்ஷியாதே போகேனென்கை. இதுக்கு உபபத்திபரமான த்ருஷ்டாந்தகத (ய) நத்துக்கு பாவமருளிச்செய்கிறார்— கடலுக்கித்யாதி. 'ராம' என்னாதே 'வீர' என்றதுக்கு, ப்ரதிஜ்ஞாநிர்வஹணம் பண்ணவில்லையோ வென்கிற ஶங்காபரிஹாரபரமாக தாத்பர்யமருளிச்செய்கிறார்— ஒரு கோழையித்யாதி. கோழை=அசதுரன். இப்படி சக்ரவர்த்தியும் ப்ரதிஜ்ஞை பண்ணவில்லையோ வென்கிற ஶங்கைக்கு

உத்தரமாக தாத்பர்யமருளிச்செய்கிறார்— இப்படியித்யாதி வாக்யத்வயத்தாலே. இதில், ‘ஸோ சேத், மா பூவம்’ என்று கூட்டி அஸத்தாகக் கடவனென்று பொருளாக்கி, இதுக்கு தாத்பர்யம்— இப்படி செய்திலேனாகிலித்யாதி. ‘வர்த்திக்கப்பெறாதவனாகிறேன்’ என்கையாலே அஸத்கல்பனாகிறேனென்று கருத்து. ‘வீரலோகபாக் பவேயம்’என்று கூட்டி வீரபதத்துக்கு சக்ரவர்த்திபரமாக பாவம்— உம்மையித்யாதி. அன்றிக்கே, ‘வீரலோகபாக் மா பூவம்’ என்று ஒரு வாக்யமாய், ப்ரதிஜ்ஞையைப் பண்ணிச் செய்யாத தசரதன் லோகமடையக்கடவேனல்லனென்று ஶப்தார்த்தமாகையாலே, தானும் செய்யாவிடில். அவன் லோகத்தை அடைந்து தேவரீர் ஸன்னிதியிலும் ராஜ்யத்திலும் இராதே போகக் கடவனென்று அர்த்தம் பண்ணுகிறதாக தாத்பர்யமருளிச் செய்கிறார்— இப்படியித்யாதி. புக்கலோகம்=புக்கக் கடவலோகம். ‘ந தே (ஷு) வலோகாக்ரமணம்’ என்று இளையபெருமாளுக்கு வீரஸ்வர்க்கம் அநுத்தேஶ்யமாகையாலே, ப்ரதிஜ்ஞை பண்ணின அர்த்தத்தைப் பண்ணாவிடில் வீரஸ்வர்க்கத்தை அடையாதவனாகக் கடவேனென்ற ஶபதம் இவர் ப்ரதிஜ்ஞைக்குச் சேராது. ஆகையாலே, தஶரதன் புக்க லோகம் என்று வ்யாக்யாநம் செய்யலாகாதென்று கண்டுகொள்வது.

२०. ईर्ष्यारोषौ बहिष्कृत्य भुक्तशेषमिवोदकम् ।
नय मां वीर विस्रब्धः पापं मयि न विद्यते ॥27—8.

௨0. 𑌈𑌰𑍍𑌷𑍍𑌯𑌾𑌰𑍋𑌷𑍌 𑌬𑌹𑌿𑌷𑍍𑌕𑍃𑌤𑍍𑌯 𑌭𑍁𑌕𑍍𑌤𑌶𑍇𑌷𑌮𑌿𑌵𑍋𑌦𑌕𑌮𑍍 । 𑌨𑌯 𑌮𑌾𑌂 𑌵𑍀𑌰 𑌵𑌿𑌸𑍍𑌰𑌬𑍍𑌧𑌃 𑌪𑌾𑌪𑌂 𑌮𑌯𑌿 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

ப—ரை. 𑌵𑍀𑌰 = ஏ வீரா, 𑌈𑌰𑍍𑌷𑍍𑌯𑌾𑌰𑍋𑌷𑍌 = அஸூயை கோபம் ஆகிய இவைகளை, 𑌭𑍁𑌕𑍍𑌤𑌶𑍇𑌷𑌮𑍍 = குடித்து மிச்சமுள்ள, 𑌉𑌦𑌕𑌮𑍍 𑌇𑌵 = ஜலத்தைப்போல, 𑌬𑌹𑌿𑌷𑍍𑌕𑍃𑌤𑍍𑌯 = தள்ளிவிட்டு, 𑌵𑌿𑌸𑍍𑌰𑌬𑍍𑌧𑌃 = நம்பிக்கையுள்ளவராய், 𑌮𑌾𑌮𑍍 = என்னை, 𑌨𑌯 = அழைத்துக்கொண்டுபோம். 𑌮𑌯𑌿 = என்னிடத்தில், 𑌪𑌾𑌪𑌮𑍍 = பாபம், 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 = கிடையாது.

பெ—வ்யா (பெரியதிருவந்தாதி. 9) 𑌈𑌰𑍍𑌷𑍍𑌯𑌾𑌰𑍋𑌷𑌾𑌵𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 “ அதிலே துஷ்டஸத்வங்களும் ராக்ஷஸருமுண்டு ; 𑌸𑍁குமாரையாயிருக்கிற உன்னைக் கொடுபோக வொண்ணாது” என்று பெருமாள் அருளிச்செய்ய, ப்ரணயரோஷத்தாலே பிராட்டி விண்ணப்பம் செய்கிறாள்—உம்முடைய பின்னே போந்தே

னென்று எனக்கொரு உயர்த்தி உண்டாங்காட்டில் உமக்கு இத்தனை பொருமையும் சீற்றமும் வேணுமோ? 'பிதாவினுடைய வசநத்தை அநுவர்த்தித்துக் காடேறப் போனார்' என்று உமக்கு ஒரு உயர்த்தி தேடுகிறவோபாதி உம்முடையபின் போந்தேனென்று எனக்கொரு உயர்த்தி உண்டானாலாகாதோ? ஸம்ஷ்ருஷ்டா ரோஷௌ பஹிஷ்க்ருத்ய ஹர்ஷரோஷவிவர்ஜிதா—வஸிஷ்ட்ட ஸிஷ்யராய் ஜ்ஞாநவான்களானால், த்யஜிக்கப்படுமவை த்யஜிக்க வேணும் காணும். நய ஶோ—அஸூயையும் கோபமும் போனால் ப்ரஸம்ருத்தியேயிறேயுள்ளது; ஆனபின்பு என்னைக் கொடு போகீர். வீர—ப்ரஸம்ருத்தி உண்டானால் கொடுபோகாதொழிகைக்கடி வீர்யத்தில் கொத்தையிறே; அதில்லையிறே உமக்கு. விஸ்ரப்தஃ—உம்மை நீரறியீர். என்னை விஸ்வஸித்துக் கொடுபோம். வாஸம் மயி ந வித்யதே—உம்மைப் பிரிந்து ஜீவிக்கைக்கடியான பாபமெனக்கில்லை காணும். பாபமாவது க்லேஸஹேதுவிறே. உம்மைப் பிரிந்து க்லேஸப்படுமதில்லை காணுமெனக்கு.

௭௫. (தி-வாய். 6-2. ப்ரவேஸம்) ஸம்ஷ்ருஷ்டாரோஷௌ பஹிஷ்க்ருத்ய—பிறருயர்த்தி கண்டால் பொறுக்கவேண்டாவோ. நான் 'உம்மோடேகூடப்போர' என்று புறப்பட்டு நாலடியிட்டால், எனக்கு அத்தால் வரும் ஏற்றம் கண்டு பொறுக்கமாட்டாமையால் உண்டான கோபாஸூயைகளைப் பொகடும். ஹர்ஷ ரோஷவிவர்ஜிதா— இதுவுமப்படியாகாதே தான். ப்ரணயிகள் கோஷ்டியில் இங்ஙனே காணும் பரிமாற்றம். ப்ரணயிநிக்குண்டான தன்னேற்றம் தன்னதாயிருக்க வேண்டாவோ. நய ஶோ வீர—என்னை அறியாதாப்போலே உம்மையும் அறிந்திலீராகில், நான் சொல்லக் கேளும். உமக்கு ஒரு குறைகளுமில்லை காணும்; என்னைக் கொடுபோகப் பாரும். விஸ்ரப்தஃ— தந்தாமை அறியாவிட்டால் ஆப்தர்வாயிலே கேட்டறியவேணும் காணும். வாஸம் மயி ந வித்யதே—பொகடும்; இங்ஙனன்றாகில், நீர் என்னை இங்கே நிறுத்திப்போனால், நீர் மீண்டு வருந்தனையும் தரித்திருக்

கைக்கு வேண்டும் ஹேது எனக்கில்லை காணும். இப்படியிறே ப்ரணயரோஷம் தலையெடுத்தாலிருக்கும்படி.

அரும்ப—ஈர்ஷ்யை = பொறாமை. இதுவுமென்றது—ஈர்ஷ்யாரோஷங்களை. அப்படியாகாதே தான்—புக்தஶேஷாதகவத் த்யாஜ்யமன்றே வென்றபடி. இங்ஙனேகாணுமென்றது—மேல் வாக்யத்தில் அர்த்தத்தைப் பராமர்ஶிக்கிறது. "வீர மாம் நய" என்கிறவளுடைய ஹார்த (௨-௪) பாவம்—என்னையித்யாதி. 'ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ரு (௯ ௰) தௌ' 'அகலகில்லேனிறையும்' என்கிற என் ஸ்வரூபத்தை அறியாதாப்போலே, 'ஶ த்ரோ: ப்ரக்யா (வ்ரா) தவீர்யஸ்ய' என்கிற உம்மையும் அறிந்திலீராகிலென்றபடி. விஶ்லேஷத்தில் த (ய) ரிக்கைக்கு ஹேது பாபமென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார்—பொகடுமித்யாதி. பொகடும்—விடுமென்றபடி.

२१. किं त्वामन्यत वैदेहः पिता मे मिथिलाधिपः ।
राम जामातरं प्राप्य स्त्रियं पुरुषविग्रहम् ॥ 30—3.

௨௧ 𑌕𑌿𑌂 𑌤𑍍𑌵𑌾𑌮𑌨𑍍𑌯𑌤 𑌵𑍈𑌦𑍇𑌹𑌃 𑌪𑌿𑌤𑌾 𑌮𑍇 𑌮𑌿𑌥𑌿𑌲𑌾𑌧𑌿𑌪𑌃 ।
𑌰𑌾𑌮 𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍍 ॥

ப—ரை. 𑌰𑌾𑌮 = ஏ ராமா, 𑌵𑍈𑌦𑍇𑌹𑌃 = விதேஹ குலத்தில் பிறந்த, 𑌮𑌿𑌥𑌿𑌲𑌾𑌧𑌿𑌪𑌃 = மிதிலாநகரிக்கு அதிபதியான, 𑌮𑍇 𑌪𑌿𑌤𑌾 = என் தகப்பனார் (ஜநகமஹாராஜன்) 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 = பெண்ணாய் (பெண்போலே தைரியமில்லாத) 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍍 = புருஷசரீரமுள்ள, 𑌤𑍍𑌵𑌾 = உம்மை, 𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌮𑍍 = மணவாளனாக (மாப்பிள்ளையாக) 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 = அடைந்து, 𑌕𑌿𑌮𑍍 𑌅𑌮𑌨𑍍𑌯𑌤 = என்ன நினைப்பார்.

திருவாய்மொழிப்பிள்ளை வ்யாக்யானம். (பெரியாழ்வார் திருமொழி 2–1–2). 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍍—"எங்கள் ஐயர் கேட்கில் 'பெண்ணுக்குப் பெண்ணைக் கொடுத்தோம்' என்று என்னை நிறுத்திப் போகில் போர வெறுத்துச் சொல்லுவர். அது என்னால் கேட்கப் போகாதென்று கிடீர் எனக்கு க்லேஶம். நீர் நிறுத்திப்போனால் நிற்கும் பாபம் எனக்குமில்லை; நீர் தாமும் நிறுத்திப் போகிறவருமல்ல. ஆயிருக்க இந்த

நெஞ்சொழிந்த பலவார்த்தை சொல்லி அலேவலேயாகவேணுமோ’ என்ருளிறே. (அலேவலே என்பது—அர்த்தகௌரவமும் அதிகாரி குணகுணமும் பாராதே தன்னெஞ்சில் ப்ரதிபந்நமானவற்றைச் சொல்லுமவனிறே)

ஈடு —(தி-வாய். 6-2. ப்ரவேசம்) ‘ஸ்ரீணயாஸ்ரீ ஸிரோநாஸ பரிவிக்ஷேப ராஸவஷு’ அவரோடுண்டான சிரபரிசயத்தாலும் கலவியாலும் ‘என்னுடையவரன்றே’ என்கிற வேண்டப்பாட்டாலும் பெருமாளை மேலிட்டு வார்த்தை சொன்னுள். என் சொன்னுளென்னில்—கிம் த்வாமந்யத வைதேஹஃ பிதா மே மிதிலாதிபஃ। ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்—வாரீர், ஒருவனுக்காற்ருவொருத்தி உண்டோ? என்னை ஒருத்தியையும் நோக்கமாட்டாமையே! வைத்துப் போகப் புகுகிறது. இதுதன்னை எங்கள் ஐயர்கேட்கில் போரவெறுப்பர். ஒருபெண் பெண்டாட்டி ஆணுடை உடுத்து என் மகளைக் கைப்பிடித்துக் கொண்டு போனவித்தனையாகாதே என்றிராமே கடுகக் கொண்டு போகப் பாரும்.

அரும்ப—ப்ரகர்ஷேண நய:= ப்ரணய: என்ருய், ‘ணீஞ் ப்ராபணே’என்கிற தாதுவாலே சிரபரிசயத்தையும் அத்தாலுண்டான கலவியையும் சொல்லுகிறது. வேண்டப்பாடு= பெருமை. அபிமாநமாவது—வேண்டப்பாடு. சிரபரிசயம் பண்ணினவன் விட்டுப்போகப்புக்கால் கோபமாமிறே. ஆகையாலே, சிரபரிசயம், மேலிட்டு வார்த்தை சொல்லுகைக்கு ஹேது. மேலிட்டு வார்த்தை சோல்லுகையாவது— வீரனுனவனை காபுருஷனுக்கி வார்த்தை சொல்லுகை.

२२. यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना ।
इति जानन् परां प्रीतिं गच्छ राम मया सह ॥ 30—18.

உஉ யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்கோ நிரயோ யஸ்த்வயா விநா ।
இதி ஜாநந் பராம் ப்ரீதிம் கச்ச ராம மயா ஸஹ ॥

ப—ரை. ராம = ஏ ராமா, த்வயா ஸஹ = உம்மோடு கூடி, யஃ= யாதொரு (வாஸம் உண்டோ) ஸஃ= அது, ஸ்வர்கஃ=

ஸ்வர்க்கம், த்வயா விநா = உம்மைப் பிரிந்து, ய꞉ = யாதொரு (வாஸமுண்டோ,) (ஸ꞉ = அது) நிரய꞉ = நரகம், இதி = என்கிற, பராம் = சிரேஷ்டமான, ப்ரீதிம் = ப்ரீதியை, ஜாநந் = அறிந்தவரான, (த்வம் = நீர்,) மயா ஸஹ = என்னோடு கூடி, கச்ச = போம் (புறப்படும்)

ஈடு. (தி-வாய். 2-10-7.) யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்க꞉— "காட்டிலே போமது துக்கம், படைவீட்டிலே இருக்குமது ஸுகம்" என்றாயிற்று பெருமாள் அருளிச்செய்தது. அங்ஙனல்ல — ஸுகதுக்கங்கள் வ்யக்திதோறும் வ்யவஸ்த்திதமாய்க் காணுமிருப்பது. யாதொன்று உம்மோடே பொருந்துகிறது, அது ஸுகமாகிறது. உம்மை ஒழியப் படைவீட்டிலிருக்குமிருப்பு துக்கமாகிறது. இதி ஜாநந்— தந்தாமுக்கில்லாதவை, பிறர் பக்கலிலே கற்றறியவேணும் காணும். பராம் ப்ரீதிம்— உம்மைப்போலே நிறுத்தல்ல காணும் என் ப்ரீதியிருப்பது. நம்மில் உனக்கு ப்ரீதி பரையாகச் சொன்னாய்; அதுக்கு நம்மைச் சொல்லுகிறதென்னென்ன — கச்ச மயா ஸஹ — "அக்ரதஸ்தே கமிஷ்யாமி" என்று நான் புறப்பட்டபடியே, என்னை முன்னே போக விட்டுப் பின்னே வரப் பாரும்.

அரும். 'பராம்' என்றதுக்கு பாவம்—உம்மைப்போலே யித்யாதி. 'மயா ஸஹ' என்றதுக்கு 'ஸஹயுக்தே அப்ரதாநே' என்கிற க்ரமமன்றிக்கே, லோகவ்யவஹாராநுகுணமாக வ்யாக்யாநம் பண்ணுகிறார்— அக்ரத இத்யாதி.

२३. न देवलोकाक्रमणं नामरत्वमहं वृणे ।
ऐश्वर्यं वापि लोकानां कामये न त्वया विना ॥ 31—5.

௨௩. ந தேவலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே ।
ஐஶ்வர்யம் வாபி லோகாநாம் காமயே ந த்வயா விநா ॥

ப—ரை. த்வயா விநா = உம்மை விட்டு, தேவலோகாக்ரமணம் = பரமபதப்ராப்தியையும், அமரத்வம் = கைவல்யத்தையும்,

லோகாநாம் ஐஶ்வர்யம் வாபி = உலகங்களுக்கெல்லாம் அதிபதியாயிருப்பதையும், ந காமயே = விரும்பமாட்டேன்.

பெ—வ்யா. (பெரிய திருவந்தாதி. 79) ந தேவலோகாக்ரமணம்— பறைச் சேரியிலடியிடுமோபோலே ஸ்வர்க்கத்திலடியிடுகை வேண்டேனென்கிறார். தஸ்யாந்தராயோ மைத்ரேய தேவேந்த்ரத்வாதிகம் பலம்—பகவத்விஷயத்திலே கைவைத்தவனுக்கு அந்தராயமாவது இந்த்ரனுபிருக்குமிருப்பிறே.

ஈடு. (தி-வாய். மஹாப்ரவேஶம்) 'வானவர்நாடு' என்கிற பரமபதம், ஆத்மலாபம், லோகாநாம் ஐஶ்வர்யம் இவையித்தனையும் உமக்குப் புறம்பாய் வருமன்று வேண்டேன்.

அரும். 'தேவாநாம் பூரயோத்யா' என்றத்தைப் பற்ற 'தேவலோகம்' என்று பரமபதத்தைச் சொல்லுகிறது.

२४. कुरुष्व मामनुचरं वैधर्म्यं नेह विद्यते | 31—24.

௨௪. குருஷ்வ மாமநுசரம் வைதர்ம்யம் நேஹ வித்யதே ।

ப—ரை. மாம் = என்னை, அநுசரம் = வேலைக்காரனாக, குருஷ்வ = செய்துகொள்ளும். இஹ = இந்த விஷயத்தில், வைதர்ம்யம் = எதிரிடையானது, ந வித்யதே = இல்லை.

ஈடு. (தி-வாய். 2-9. ப்ரவேஶம்) இளைய பெருமாள், 'நில்' என்ன 'குருஷ்வ' என்றாரிறே. அந்வயத்தாலே த(ய)ரிக்கக் கடவ வஸ்துவை வ்யதிரேகித்து நிற்கச் சொல்லுகையாவது அழிக்கையிறே. 'குரு' என்னாதே 'குருஷ்வ' என்றாரிறே. ஆருடைய ப்ரயோஜநத்துக்கு ஆர்தான் இருக்கிறார். உம்முடைய இழவுக்கு நீர் பதறுதிருக்கிறதென்! அநுசரம்—பண்ணும் ப்ரகாரத்தை விதிக்கிறார். நீர்தாம் 'நில்' என்று அருளிச்செய்தது—நான் நிற்கச் சொல்லுகைக்கு யோக்யனும்படியிருக்கையிறே. உம்முடைய சா(ஹா)யையை 'நில்' என்று சொல்லிற்றிலீரே. சாயையோபாதி உம்மைப் பின் செல்வேனாகவேணும்.

அநும். இளையபெருமாளித்யாதி. பெருமாள் 'நீர் நில்லும்' என்று சொன்னவளவிலே, இளையபெருமாள் 'குருஷ்வ மாமநுசரம்' என்று சொன்னாரென்றபடி. 'நில்' என்கை அழிக்கப் பார்க்கை என்று விவக்ஷித்து, 'நில்' என்றால் அழிக்கையாமோ என்ன— அந்வயத்தாலேயித்யாதி. 'ஜலாந்மத்ஸ்யாவிவ' என்றதிலே நோக்கு. அன்றிக்கே, 'வைத(ய)ர்ம்யம் நேஹ வித்ய(த)தே' என்றத்தைக் கடாக்ஷித்து தாத்பர்யமாதல். குரு என்னுதேயித்யாதி. ஆத்மநேபதம் கொண்டு இவரால் வரும் பேறு பெருமாளதென்று சொல்லுகிறதென்றபடி. என்றால் ஏதென்ன— ஆருடையவித்யாதி. தாத்பர்யம்— உம்முடையவித்யாதி. பதரு து=த்வரியாது. 'அநுசரம்' என்றதுக்கு பாவம்— நீர்தாமித்யாதி. 'மாம்' என்றதுக்கு பாவமாதல். நிற்கச்சொல்லுகைக்கு யோக்யராகாமையை த்ருஷ்டாந்தமுகத்தாலே காட்டுகிறார்— சாயையித்யாதி.

२९. सृष्टस्त्वं वनवासाय स्वनुरक्तः सुहृज्जने ।
रामे प्रमादं मा कार्षीः पुत्र भ्रातरि गच्छति ॥ 40—5.

உகு. ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்த: ஸுஹ்ருஜ்ஜநே ।
ராமே ப்ரமாதம் மா கார்ஷீ: புத்ர ப்ராதரி கச்சதி ॥

ப—ரை. புத்ர = ஏ புத்ரா, த்வம் = நீ, ஸுஹ்ருஜ்ஜநே = மித்ரர்களிடத்தில், ஸ்வநுரக்த: = விசேஷமாகப்ரீதியுள்ளவன். வநவாஸாய = காட்டில் வஸிப்பதற்காக, ஸ்ருஷ்ட: = உண்டுபண்ணப்பட்டாய். ப்ராதரி = ஸஹோத(த)ரனான, ராமே = ராமன், கச்சதி(ஸதி) = போகும்பொழுது, ப்ரமாதம் = தவறுதலை, மா கார்ஷீ: = செய்துவிடாதே.

ஈடு. (திருவாய். 3-3-10) ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய— ஐயர் சொல்லிற்றுச் செய்யவேண்டுகையாலே பெருமாள் காடேற எழுந்தருளாநின்றார். நானும் கூட சேவித்துப்போவேனென்ன, அவர் காட்டிலே எழுந்தருளாநிற்கப் படைவீட்டிலே இருக்கைக்கோ நாம் உம்மைப்பெற்றது? நீர் இப்படிச்செய்தீராகில் நான் உம்மைப்பெற்ற ப்ரயோஜனம் பெற்றேனாகிறேன். அவர்க்கு யாதொருபோது துணைவேண்டிற்று, அப்போது நீர் துணையாகைக்காகவன்றோ நானும்மைப்பெற்றது. ஸ்வநுரக்த: ஸுஹ்ருஜ்ஜநே—

நீர் ஸாஹ்ருஜ்ஜநத்தின் பக்கல் ஸ்வநுரக்தரல்லீரோ. ஆகை யாலே எல்லார்க்கும் வேர்ப்பற்றான பெருமாளை நோக்கித் தாரீர். அன்றிக்கே, ஸாஹ்ருஜ்ஜநே ராமே என்றாய் பெருமாள் பக்கல் பண்டே ஸ்நேஹித்தன்றோ நீர் இருப்பது. இப்போது 'போம்' என்று நான் உமக்குச் சொல்லவேண்டியிருந்ததோ. ராமே வ ரோதம் ஓ காஷீஃ—இப்படி யிருக்கிற உம்மை நியமிக்கவேண்டு வதொன்றுண்டு — ப்ரமாத(உ)த்தைப் பண்ணாதே கொள்ளும். என்றான், ப்ரமாதம் என்னென்னில்—வரூத ஹாதஸி ஜூதி— உங்கள் தமயனார் நடப்பர்கிடீர். அவர் நடையிலே நடை கொள் வர். அவர் நடையழகிலே கண்வைத்துக் காவற் சோர்வு பட விடாதே கொள்ளும்.

அரும்ப— 'பெருமாள் காடேறப்போகக்கூடப்போக வேணும்' என்று ஏற்கவே அறிந்தோ என்னைப்பெற்றதென்ன— அவர்க்கித்யாதி. அனுப்பு கிறவள், இருக்கைக்கு ஹேதுவானத்தைச்சொல்லலாமோ என்ன—நீரித்யா தி. ப்ரமாதம் என்று அநவதா[யா]நத்தைச் சொல்லுகிறது. நடையிலே நடைகொள்வர்—தம்முடைய நடையழகாலே 'காலாழும் நெஞ்சழியும்' என் கிறபடியே உம்மை ஈடுபடுத்துவர். காவற்சோர்வுபடவிடாதே—ஸாவதான தைக்கு நழுவுதல் உண்டாம்படி விடாதேயித்யர்த்த:. படுகை—உண்டாகை.

ஈடு. (தி-வாய். 3-9-9) ஸூஷ்ஸா வநவாஸாய —"ஐய ரையும் ஆய்ச்சியையும் அநுவர்த்தித்துப் பெருமாள் காடேற எ ழுந்தருளாநின்றார். நானும் அவரை அநுவர்த்தித்துப் போகி றேன்" என்று இளையபெருமாள் அறிவிக்க, உமக்கு முடிவேணு மென்று அபேக்ஷை உண்டாகில், முடி சூடுகைக்கு யோக்யனாயி ருப்பானொருவன் வேணுமென்றதுக்கிடாக நோன்பு நோலேனோ, அவரை அநுவர்த்திக்கைக்காகவன்றோ நான் உம்மைப்பெற்றது. ஸாஹ்ருஜ்ஜநே ராமே, ஸ்வநுரக்த:—உபதே(ஶ)நிரபேக்ஷ மாகப் பெருமாள் திருவடிகளுக்கு நீரே பரிவரிறே, நான் இன்றி ருந்து சொல்லவேண்டுவதொன்றுண்டோ, அடிமையிலுண்டான ருசி செவிகண்ணுக்கண்டடிமை செய்யுமவரிறே, அன்றிக்கே, ஸ்வநுரக்த: ஸாஹ்ருஜ்ஜநே — கருமுகைமாலையை வெய்யிலி லே இட்டாற்போலே, பெருமாள் தம் ஸௌகுமார்யம் பாராதே

பித்ரநுவர்த்தநம் பண்ணிக் காட்டிலே போகாநின்றார். என்புகுகிறதோ' என்று வயிறெரிந்திருக்கிற ஸுஹ்ருஜ்ஜனங்களுக்கு நல்லீரிறே. ஸுஹ்ருஜ்ஜநமென்கிறது—திருத்தாயார் தொடக்கமான படை வீட்டிலுள்ளாரை. அவர்களுக்கு வேர்ப்பற்றான இவரை நோக்கித் தாரீரென்றும். ராமே—நடக்கை மிகையாம்படி, வெறுமனேயிருந்தாலும் ஆகர்ஷகமான வடிவழகையுடையவர். ராமே வ ரேஷம் ரோ கூாஷீகூ—'பாமூராகவூுதி ஸுஹ்ருஷ' என்று அவதாரகாலமே தொடங்கி அந்வயத்தில் தரி(ய)ரித்து வ்யதிரேகத்தில் தரியாதவர்க்கு, இன்றாக ஒரு ப்ரமாதம் புகுருகைக்கு ஶங்கையில்லையிறே. ஸம்பாவிதமானதொன்றைச் சொல்லுகிறாளாகவேணுமே—ஹூாதஸீ ஶஷதி—அவர் உம்முடைய முன்னே நடப்பர் கிடீர். அவ்வழகிலே கண்வைத்து, நீர் அதி(யி)கரித்ததுக்குச் சோர்வு பிறவாதபடி குறிக்கொள்ளும். கூஹு தஃ வ யபௌ—நடைச் சக்ரவத்துப் பிடிக்கலாம்படி.

அரும். அபேக்ஷை = எனக்கபேக்ஷை. 'ஸு' என்கிற உபஸர்க்கத்துக்கு பாவம்-உபதேஶோத்யாதி. அப்படி பெருமாளுக்குப் பரிவரோ என்ன, ரஸோக்தியாக உத்தரம் -- அடிமையிலித்யாதி. ருசி= ருசியாலே. செவி கண்ணாக—திருவநந்தாழ்வானிறே. ரமயதீதி ராம: என்கிற வ்யுத்பத்தியைப் பற்ற—நடக்கையித்யாதி. சோர்வு= ப்ரச்யுதி. ப்ரகர்ஷேண யயௌ = ப்ரயயௌ—நடைச்சக்ரவத்துப்பிடிக்கையாவது—நடைச்சக்ரவர்த்தி வந்தானென்று விருது பிடிக்கவேண்டும்படியாயிருக்கை.

२६. रामं दशरथं विद्धि मां विद्धि जनकात्मजाम् ।
अयोध्यामटवीं विद्धि गच्छ तात यथासुखम् ॥ 40—16.

உசு. ராமம் தஶரதம் விஜி மாம் விஜி ஜநகாத்மஜாம் ।
அயோத்யாமடவீம் விஜி ஶச்ச தாத யதாஸுகம் ॥

ப—ரை. தாத = அப்பனே, ராமம் = ராமனே, தஶரதம் = தசரதனாக, விஜி = அறிந்துகொள். (நினைந்து நடந்துகொள்) ஜநகாத்மஜாம் = ஸீதையை, மாம் = நானாக, விஜி = அறிந்துகொள், அடவீம் = காட்டை, அயோத்யாம் = அயோத்தி

யாக, வித்தி = அறிந்துகொள். யதாஸுகம் = ஸுகமாக, கச்ச = போ.

பெ—வ்யா. (நான்முகன் திருவந்தாதி. 47) ரக்ஷணத்துக்கு உறுப்பாகையாலே திருவயோத்யையிலும் காட்டை விரும்பினாரிறே பெருமாள். அவர் விரும்பின காட்டை விரும்பிப் போகிற இளையபெருமாளை அக்காட்டோபாதி இப்படைவீட்டையும் நினையுங்கிடீரென்றாரிறே திருத்தாயார்—ராமம் தஶரதம் வித்தி—பித்ருதாம் பித்ருதாம் என்று அருவராதே உங்கள் தமயனாரோபாதியாக உங்களையரையும் நினையுங்கிடீர். மாம் வித்தி ஜநகாத்மஜாம்—உங்கள் தமயனாருகந்த பிராட்டியோபாதி என்னையும் நினையுங்கிடீர் என்கிறார்.

२७. ये तु रामस्य सुहृदः सर्वे ते मूढचेतसः ।
शोकभारेण चाक्रान्ताः शयनं न जहुस्तदा ॥ 41—20.

உஎ. யே து ராமஸ்ய ஸுஹ்ருதஸ் ஸர்வே தே மூடசேதஸ: ।
ஶோகபாரேண சாக்ராந்தா: ஶயநம் ந ஜஹுஸ்ததா ॥

ப—ரை. ராமஸ்ய = ராமனுக்கு, ஸுஹ்ருத: = ஸ்நேஹிதர்கள், யே து = எவர்களோ; தே ஸர்வே = அவர்களெல்லாரும், மூடசேதஸ: = அறிவழிந்த மனமுடையவர்களாய், ஶோகபாரேண = அதிகதுக்கத்தால், ஆக்ராந்தா: = ஆக்ரமிக்கப்பட்டவர்களாய், ததா = அப்பொழுது, ஶயநம் = படுக்கையை, ந ஜஹு: = விடவில்லை. (விட்டெழுந்திருக்கவில்லை)

பெ—வ்யா. (நாச்சியார் திருமொழி. 13-1.) யே து—சக்ரவர்த்தி போக்கை அநுமதிபண்ணினான். ஸ்ரீ கௌஸல்யையார் மங்களாஶாஸநம் பண்ணிவிட்டார். அவ்வளவன்றிக்கே, பத்தொன்பதாம் பாஷையாய்த்து தோழன்மார்படி. ராமஸ்ய ஸுஹ்ருத:—தாய் தகப்பனுக்கு மறைத்தவையும் வெளியிடும்படி உட்புக்கவர்களிறே தோழன்மாராகிறார். தங்களைப் பேணு

தே அவனுக்கே நன்மை எண்ணிப் போந்தவர்கள் படுகுலைப்பட்டார்களென்கிறது. ஸமேந தெ—ஒரு விபூ(ஹ-பி)தியாக ஸாம்யாபத்தி பெற்றிருக்குமாப்போலே. உங்ஙிஸ்செதஸஃ—ஸுஹ்ருத்துக்களாகில் எழுந்திருந்து காலைக்கட்டி மீளாதொழிவானென்னென்னில்—அறிவு கலந்தால் செய்யுமத்தை நெஞ்சில் வெளிச்செறிப்பில்லாதபோதும் செய்யப்போகாதிறே. அறிவு கெடுகைக்கு ஹேதுவென்னென்னில்— ஶோகஹாரெண வாகூாஞாஃ—மலை அமுக்கினப்போலே ஶோகம் அமுக்காநிற்கச் செய்வதென்? ஶயநம் ந ஜஹுஸ்தா—படுக்கையை விட்டெழுந்திருந்தார்களாகில் மீட்டுக் கொடு புகுந்த வாசியன்றோ. தாந்தாமே படுக்கையில் கிடந்து போந்தவர்களன்றே.

அரும். துஶப்தார்த்தம்—சக்ரவர்த்தியித்யாதி. லோகத்திலே உள்ளது பதினெட்டு பாஷையாகையாலே, எல்லாரையும் பற்ற இவர்களுடைய வ்யாவ்ருத்தி தோற்றுகைக்காக — பத்தொன்பதாம் பாஷை என்கிறது. ஸுஹ்ருத்பதத்துக்கு அவயவார்த்தவிவக்ஷயா தாத்பர்யாந்தரம்—தங்களையித்யாதி. ஸாம்யாபத்தி= ராமவிஶ்லேஷத்தில் எல்லாருக்கும் துக்கமொத்திருக்கை. படுக்கையில் கிடந்தவர்களெல்லாம் எழுந்திருக்கவில்லையோ லோகத்திலென்ன—தாந்தாமேயித்யாதி. ஶோகபாரத்தாலே கிடந்தவர்களாகையால் ஸ்வவஶமல்லவென்றபடி.

२८. पुत्रद्वयविहीनं तत् स्नुषया च विवर्जितम् ।
अपश्यद्भवनं राजा नष्टचन्द्रमिवाम्बरम् ॥ 42—30.

௨௮. புத்ரத்வயவிஹீநம் தத் ஸ்நுஷயா ச விவர்ஜிதம் ।
அபஶ்யத்பவநம் ராஜா நஷ்டசந்த்ரமிவாம்பரம் ॥

ப—ரை. ராஜா= அரசன் (தசரதன்) புத்ரத்வயவிஹீநம்= இரண்டு பிள்ளைகளுமில்லாததும், ஸ்நுஷயா ச விவர்ஜிதம்= நாட்டுப் பெண்ணுமில்லாததுமான, தத் பவநம் = அந்த கிருஹத்தை, நஷ்டசந்த்ரம் = சந்த்ரனில்லாத, அம்பரம் இவ = ஆகாசத்தைப்போலே, அபஶ்யத்= கண்டான்.

ஈடு. (தி-வாய். 6-7. ப்ரவேஶம்) புத்ரத்வயவிஹீநம் தத்—சக்ரவர்த்தி, பிள்ளைகளிருவரையும் தேடிப் போர நொந்

தான். ஸ்நுஷயா ச விவர்ஜிதம்—'மீண்டுமிவ்விடத்தை விரும்புவர்கள்' என்று நினையாதபடி குழைசரக்கறுத்துக்கொண்டு போனபடி. அவஸ்யந்தம் வநம் ராஜா நஷ்டசந்த்ரேவ ஶர்வரீ—நிலவோடும் நக்ஷத்ரதாராகண(ங்க)ங்களோடுங்கூட சந்த்ரன் குடி வாங்கின ஆகாசம்போலே கிடந்தது.

அரும். 'ஸ்நுஷயா' என்றதைப் பற்ற—மீண்டுமித்யாதி. குழை சரக்கறுத்துக்கொண்டு போனபடி என்றது—ரக்ஷ்யவர்க்கத்தையுங்கூடக் கூட்டிக்கொண்டுபோனபடி என்கை. அதாவது—பை நெகிழ்ந்த கயிறெல்லாம் கட்டிப் பண்டங்களை எடுத்துக் கொண்டுபோம் செட்டிகளைப்போலே, தங்களுக்கு ரக்ஷ்யவர்க்கமான பிராட்டியையுங்கூட்டிக் கொண்டு போனார்களென்றபடி. குழைசரக்கு = ரக்ஷ்யவர்க்கம். அறுத்துக்கொண்டுபோகை யாவது—கூடக்கொண்டுபோகை. தார்ஷ்டாந்திகத்ரயாநுகுணமாக த்ருஷ்டாந்த த்ரயம்—நிலவோடித்யாதி. பிராட்டிஸ்தாநத்திலே நிலவு, இளைய பெருமாள் ஸ்தாநத்திலே நக்ஷத்ரதாராகணங்கள். ராம சந்த்ரனிறே.

२९. रामं मेऽनुगता दृष्टिरद्यापि न निवर्तते ।
न त्वा पश्यामि कौसल्ये साधु मा पाणिना स्पृश ॥ 42—34.

உகூ. ராமம் மேऽநுகதா த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே । ந த்வா பஶ்யாமி கௌஸல்யே ஸாது மா பாணிநா ஸ்ப்ருஶ ॥

ப—ரை. ராமம் = ராமனை, அநுகதா = பின்தொடர்ந்து சென்ற, மே த்ருஷ்டி: = என்கண், அத்யாபி = இன்னமும், ந நிவர்த்ததே = திரும்பவில்லை. கௌஸல்யே = ஏ கௌஸலை, த்வா = உன்னை, ந பஶ்யாமி = காணுகிறேனில்லை. பாணிநா = (உனது) கையினால், மா = என்னை, ஸாது = நன்றாக, ஸ்ப்ருஶ = தொடு।

பெரி-வ்யா. (திருமாலை 17) ராமம் மேऽநுகதா த்ருஷ்டி:—கர்த்தாவை ஒழியவே கரணங்களுக்கே அந்வயவ்யதிரேகங்களிலே ஶோகஹர்ஷங்களுண்டாம்படியிறே விஷயஸ்வபாவமிருப்பது.

பெ-வ்யா. (நாச்சியார்–10–7) ராமம் மே இத்யாதி—கடல் கொண்ட வஸ்து இனி மீளப் புகுகிறதோ? மே— அக்கடலிலே இழியாதிருக்கமாட்டாதார்க்கு ஏறப்போமோ? அத்யாபி ந நிவர்த்ததே— அவரைக் காணப்பெறுவிட்டால் அவரைப் பெற்ற

ஸௌபாக்ய (ஸௌபாக்ய)முடைய உன்னைக்காண்கைக்கு நல்ல காலமிறே; இவ்வளவிலும் மீளுகிறதில்லை. ந க்வா ஸஜ்ஞாதி கௌஸல்யே-- பெருமாள் முகத்திலே விழிக்கப்பெறாதே, கைகேயிமுகத்திலே விழித்தத்தால் வந்த தாபமெல்லாம் ஆறும்படி உன்னைக் காணவேணுமென்று ஆசைப்படாநின்றேன்; அது செய்யப்பெறுகிறிலேன்.. ஸாயுஜ்ய வாணிநா ஸ்ப்ருஶ-- இந்த்ரியங்கள் தான் நித்யாதீந்த்ரியவஸ்துக்களாகையாலே கார்யகல்ப்யமிறே. ரூபக்ரஹணாபாவத்தாலே சக்ஷுரிந்த்ரியம் குடிபோய்த்ததென்றிருந்தேன் ; த்வகிந்த்ரியம் (த்வகிந்த்ரிய) கிடந்ததோ இல்லையோ என்று ஸ்பர்ஶித்துப் பார்க்கவல்லையோ? ஸாயுஜ்ய ஸ்ப்ருஶ—“ கைகேயியோடே க்ருதஸங்கேதனைப் பெருமாளைக் காடேறப் போகவிட்டான். ‘அவர் கை கழியப்போனார் ; இனி மீளார்’ என்றறிந்தவாறே, பொய்யே கூத்தடிக்கிறான்” என்றிராதே, ‘இவனுக்கு இது ஸம்ஸர்க்கத்தாலே வந்தது. ஐயோ என் செய்வான். பாவி அகப்பட்டான்’ என்னும் நெஞ்சோடேகூட. என்னை ஸ்பர்ஶிக்கவல்லையே.

பெ—வ்யா· (திருநெடுந்தாண்டகம். 9) ராமம் அநுகதா த்ருஷ்டி:—என்னுடைய கண்ணானது அ(பி)பிராமதையைப் பற்றிப் பெருமாள்பின்னே போயிற்று. ஆஶ்ரயத்தை விட்டு விஷயத்தின் பின்னே போயிற்றது. பிறந்தகத்தில் ஸம்பந்தம் விஷயம் பெறுமளவும்போலே காணும். த்ருஷ்டி: என்று கண்ணைக் கொண்டாடுகிறான். நான் விஶ்லேஷத்தாலே தளர்ந்து தரைப்பட்டுக் கிடந்தேன் ; கண் கூடப் போகப் பெற்றதிறே. கர்த்தாவாயிராதே காணமாகப் பெற்றிலேனென்கிறான். அத்யாபி ந நிவர்த்ததே—இவ்வளவிலும் மீண்டதில்லை ; உன்னுடைய தர்சந (தர்ஶந)த்தாலே ஆஶ்வஸிப்பிக்க யோக்யதை உண்டானதசை (தஶை)யிலும் மீண்டதில்லை. ந க்வா ஸஜ்ஞாதி— ஆஶ்ரயமான நீர் இங்கே யிருக்கக் கண் அவர்பின்னே போகையாவதென்னென்னில்—கார்யத்தைக்கொண்டு காரணத்தைக் கல்பித்தேனென்கி

றான். வந்து நிற்க உன்னைக் காணப்பெற்றிலேனே; அத்தாலே சொல்லுகிறேன். நித்யாநுமேயமாயிறே இந்த்ரியங்களிருப்பது. கௌஸல்யே — கைகேயியாயிட்டுக் காணுதொழிகிறேனன்றே. ஸாது மா பாணிநா ஸ்ப்ருஶ — என்னுடைய அதிக்ரமத்தை நினையாதே துர்க்கதி(தௌர்கத்ய)யைப் பார்த்து 'ஐயோ' என்றிரங்கி ஸ்பர்ஶியாயென்கிறான். "கண்ணானது அவன் பின்னே போயிற்று. த்வகிந்த்ரியம் (த்வகிந்த்ரிய) போயிற்றோ இல்லையோ என்று அறியும்படி உன் கையாலே தடவிப் பாராயென்கிறான்" என்று அருளிச்செய்வர் பட்டர்.

ஈடு. (தி-வாய். 3-8-3) ராமத்ருஷ்டி — கடல்கொண்ட வஸ்து மீளுமோ? அறுபதினாயிரமாண்டு மலடு நின்று பட்டினிவிட்ட என்கண்கள் மீளுமோ? நல்லது கண்டு கால் தாழ்ந்ததை இனி 'நம்மது' என்று வழக்குப் பேசினால் பசையுண்டோ? அத்யாபி — தன்னைக்கொண்டு கார்யங் கொள்ளவேண்டு மிற்றைக்கும் உதவுகிறதில்லை. அவரைக் காணுவிட்டால், அவரைப் பெற்ற ஸௌபாக்யமுடைய உன்னைக் கண்டு த(ரி)ரிக்க வேண்டு மிவ்வளவிலும் மீளுகிறதில்லை.

அரும்ப—'ராமம்' என்றதுக்கு பாவம்—கடல்கொண்டவித்யாதி. 'மே' என்றதுக்கு தாத்பர்யத்வயம் — அறுபதினாயிரமித்யாதி வாக்யத்வயமும். பசை=ப்ரயோஜநம்.

३०. कथं दाशरथौ भूमौ शयाने सह सीतया ।
शक्या निद्रा मया लब्धुं जीवितं वा सुखानि वा ॥ 51—9.

௩௦. கதம் தாஶரதௌ பூமௌ ஶயாநே ஸஹ ஸீதயா ।
ஶக்யா நித்ரா மயா லப்தும் ஜீவிதம் வா ஸுகாநி வா ॥

ப—ரை. தாஶரதௌ = தசரத புத்ரனாகிய ஸ்ரீராமன், ஸீதயா ஸஹ = ஸீதையோடு கூட, பூமௌ = தரையில், ஶயாநே (ஸதி) = படுத்திருக்கும்போது, மயா = என்னால், நித்ரா =

தூக்கம், லப்தும் = அடையப்பட, கதம் = எப்படி, ஶக்யா = முடியும். ஜீவிதம் வா = ஜீவிதமாவது, ஸுகாநி வா = ஸுகங்களாவது, (கதம் லப்தும் ஶக்யாநி = எப்படி அடையப்பட முடியும்).

பெ-வ்யா. (திருவிருத்தம்-30.) "நிஶாமேதிஷ்ட தஸ்ய ரோதஸ்ய கேஶவாத்" என்று பெருமாள் ஸ்ரீகு(ஶ்ரு)ஹப்பெருமாள் பரிஸரத்தே கண் வளர்ந்தருளுகிற விடத்திலே, ஜங்கமமான மதிள்போலே கையும் வில்லுமாய் இளையபெருமாள் திரிகிறபடியைக் கண்டு ஸ்ரீகுஹப்பெருமாள் "இயம் தாத ஸுகா ஶய்யா த்வதர்த்தமுபகல்பிதா" என்று உமக்குத் தகுதியாம்படி பெருமாள் திருவடிகளிலே தளிராலே படுக்கை படுத்தேன். கண் வளரீரென்ன—கதம் தாஶரதௌ பூமௌ ஶயாநே—என்று அறுபதினாயிரம் ஸம்வத்ஸரம் மலடு நின்று பெற்ற பிள்ளை ஸுகுமாரமான வடிவைக்கொண்டு தரைக்கிடை கிடக்கக் கண் உறங்குமோ? ஶயாநே ஸஹ ஸீதயா—இவர் வஸிஷ்டஶிஷ்யராகையாலே இக்கிடை கிடக்கவும் பொறுக்கும். படி நடந்து புறப்பட்டறியாத செல்வப் பெண்பிள்ளை தரைக்கிடை கிடப்பதே! ஶக்யா நித்ரா மயா லப்தும்—என் கண் தன்னில் நித்ரை குடி புகுகிறதில்லை காணும்.

ஈடு. (தி-வாய். 5-9-4) பெருமாளும் இளையபெருமாளும் பிராட்டியும் ஶ்ருங்கிபேர(ஶ்ருங்கிவேர)புரத்திலே விட்டருளினவன்று ஸ்ரீகுஹப்பெருமாள் இளையபெருமாளைப் பார்த்து, "பெருமாளும் பிராட்டியும் கண்வளரா நின்றார்கள். உமக்கீடாம்படி திருவடிகளிலே தலையாப்படி படுக்கை படுத்தேன். நாங்கள் காடராய் அங்கேயிங்கே திரிகையாலே எங்களுக்கு உறக்கம் வாராது. நீர் ராஜபுத்ரராகையால் ஸுகுமாரர். 'பரதாதிகள் வருவர்கள்' என்று அஞ்சவேண்டா. நானும் என் பரிகரங்களுமுண்டு. நீர் கண்வளர்ந்தருளும்" என்ன—கதம் தாஶரதௌ பூமௌ ஶயாநே ஸஹ ஸீதயா—வாரீர், மஹாராஜனை சக்ரவர்த்தி அறு

பதினாயிரமாண்டு அநபத்யனாய் வருந்திப் பெற்ற ஸுகுமாரனை பெருமாள் தரைக்கிடை கிடக்க, எனக்குக் கண்ணுறங்குமோ? அவர் தாம் வஸிஷ்டாதிகள் கீழே தரையிலே யிருந்துமறிவர். அதுவுமின்றிக்கேயிருக்கிற பிராட்டியோடே கூடக் கிடக்கிற கிடை பாரீர். ஆனபின்பு,எனக்கு உறக்கமுண்டாய் அது போகைக்கு அபிஸந்தி (ஸஹிஷ்யமி) பண்ணியிருக்கிறேனல்லேன் காணும். உறக்கம் தேட்டமாய்க் கிடையாமையாலே யிருக்கிறேன்.

அரும்.—'ராமே' என்றதே 'தாசரதௌ' என்றதுக்கு பாவம்—மஹாராஜனை வித்யாதி. அபிஸந்தி=நினைவு.

३१. न च सीता त्वया हीना न चाहमपि राघव ।
मुहूर्तमपि जीवावो जलान्मत्स्याविवोद्धृतौ ॥ 53—31.

௩௧. ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ ।
முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ ॥

ப—ரை. ராகவ = ஏ ராமா, ஸீதா = ஸீதை, த்வயா ஹீநா = உம்மோடு பிரிந்தவளாய், ந = உயிருடனிருக்கமாட்டாள். அஹம் அபி = நானும், (த்வயா ஹீந: = உம்மை விட்டுப் பிரிந்தவனாய்) ந ச = ஜீவிக்கவேமாட்டேன். ஜீவாவ: அபி = ஜீவிப்போமேயானால், ஜலாத் = ஜலத்திலிருந்து, உத்த்ருதௌ = எடுக்கப்பட்ட, மத்ஸ்யௌ இவ = இரு மீன்களைப்போலே, முஹூர்த்தம் = கொஞ்சகாலந்தான், ஜீவாவ: = பிழைத்திருப்போம்.

பெ—வ்யா. (பெரியதிருமொழி. 4-9-1) ந ச ஸீதேத்யாதி—தேவரை ஒழிந்தவன்று பிராட்டியும் உளளாகாள், அடியேனும் உளனாகேன். தேவரை ஒழிந்தவன்று முதலிலே ஜீவிக்குமது தானில்லை. அபி ஜீவாவ: = யதி ஜீவாவ:, முஹூர்த்தம்—ஒரு க்ஷணகாலம். ஜலாந்மத்ஸ்யாவிவ—ஜலத்தைப் பிரிந்த மத்ஸ்யம் ஜீவிப்பது அந்நீர் நசை அறுமளவுமிறே. அப்படியே நில் என்று சொன்ன வார்த்தை உம்முடைய திருவுள்ளத்திலேயும் உண்

க்காகச் செய்யுமத்தையே தமக்கு கர்த்தவ்ய மென்றிருப்பர். கூ யெத்ராஜி—தாமுள்ளவன்று தாமுளராய், தாம் போனவன்றைக் கும் உம்மை வைத்துப் போனுரே என்கிருர். வ—தெ,ண—'புத்' என்று ஒரு நரக விஶேஷமாய், அதில் புகாதபடி நோக்கும் என் ருயிற்று புத்ரனென்று பேராகிறது. ஐயர்க்கு நம்முடைய அபிம த ஸித்தியின்றிக்கே யொழிகைதனக்கு மேற்பட நிரயமில்லையி றே. அவர்க்கு அது வராதபடி நோக்குகிறீர் நீரிறே. யஉ—ாதா— சக்ரவர்த்தி ப்ரஸ்துதனுனவாறே நம் ஐயரை ஒப்பாருண்டோ. அவருமொருவரே! தாமிருந்த நாள் தாம் வேண்டுவன எனக்குச் செய்து தாம் போனவன்று நமக்கு வேண்டுவன செய்கைக்கு உ ம்மைப் பெற்றுத் தண்ணீர்ப்பந்தல் வைத்துப்போவதே! ஜ—இ ருவருக்கும் பிதாவானமை ஒத்திருக்கச்செய்தே 'மம' என்கிரு ராயிற்று. அவர் நமக்குச் செய்யுமவை நீரிருந்து செய்கையாலே நாம் அவரை இழந்திலோம். நீரிழந்தீராகிலித்தனையிறே. 'சுஹம் வஸ்யஂ கரிஷ்ராமி' என்கிறவிடத்திலே ஶேஷியுடைய வ்யாபா ரமும் புகாதாகில் 'வஸ்யஂ' என்ன வொண்ணுதிறே.

அரும்—சொல்லுகிறவரிறே என்றது சொல்லப்படுகிறவரிறே என்ற படி. இப்படி பாவஜ்ஞரென்று கொண்டாடினது எந்த கார்யத்தைக் கொண் டென்ன, அருளிச்செய்கிருர் —பர்ணசாலையித்யாதி. 'க்ரியதாம்' என்று நி யமிக்கவன்றே செய்தார்; 'பாவஜ்ஞேந' என்பானேனென்ன அருளிச் செய்கிருர் —அல்லாதவையித்யாதி. க்ருதம் = க்ருதியை ஜாநாதி ஸாங்கமா க அறிவனென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி தாத்பர்ய மருளிச்செய் கிருர் —அதுவேயித்யாதி. த்ருஷ்டாந்த பூர்வகம் விவரிக்கிருர் —அறுபதி னுயிரமித்யாதி. ஶேஷியான பிதா செய்யுமத்தை ஶேஷபூதர் செய்யக்கூடு மோவென்ன, அருளிச்செய்கிருர்—அஹம் ஸர்வமித்யாதி.

ஈடு (தி-வாய். 5-4-8) ஊாவஜெஞ—ஸ்ரீபர்ணசாலை சமைக் கும்போது இளையபெருமாள், ரிஷிகளுக்கு ஓலக்கம் கொடுத்திரு க்குமிடம் பண்ணும்படியும், அக்நிசாலை சமைக்குமிட்மும் இவை யிறே பெருமாளருளிச் செய்வது. பிராட்டியும் தானும் ஏகாந்த மாக விருக்கும்படிகள் இவருடன் தாம் அருளிச்செய்யாரே. அ வையடையக் கருத்தறிந்து செய்வாராயிற்று. அவர் தூது செய் க

ணைகள் கொண்டு ஏன்றுபேசினால்; இவரும் செவிக் கண்ணுக்கே ட்டுச் சமைக்குமித்தனை. க்ருதஜ்ஞ:—வருந்தி இவர் நினைவைப் பின் சென்றமர்த்ரமன்றிக்கே, அறுபதினாயிரமாண்டு மலடுகின்று பிள்ளைபெற்ற சக்ரவர்த்தி பெருமாளுக்குப் பொருந்துமிடம் பார்த்து மாளிகை சமைத்து முன்பு செய்துபோந்த கட்டளைகளறிந்து அப்படியே செய்தாராயிற்று. யத்ஜ்ஞ:—இதுதான் தம்பியாயிருந்து இப்படிச்செய்தார் என்று குணமாகையன்றிக்கே, இது கர்த்தவ்யம் என்று செய்தார்; 'உஜ்ஜீவந ஹேதுவான் அநுஷ்டேய தர்மமிது' என்று செயதார். த்வயா வ்ருத்தே:—போன ஐயர்க்கு நிரயநிஸ்தாரகர் நீரேயிறே. 'நாமுள்ளதனையும் இவருடைய ரக்ஷணமிப்படி செல்லுகிறது. நம்க்குப் பின்பு இவர்க்கு ரக்ஷகர் ஆர். என் செய்யக்கடவது' என்று இதுவேயாயிற்று அவர்க்கு எப்போதும் நெஞ்சாரல். அவர் செய்யும்வற்றை நீர் செய்கையாலே அவர்க்கு துக்க நிவர்த்தகர் நீரேயிறே. யத்ராதா—ஐயருமொருவரே! தான் பரமதார்மிகர் கிடீர். தாமிருந்த நாளும் நமக்கு வேண்டும் ரக்ஷணங்கள் பண்ணி, தாம்போன நாளைக்கும் தண்ணீர்ப்பந்தல் வைப்பாரோபாதியும் வைத்துப்போவதே! ந ஸம்வ்ருத்த: பிதா—நாம் ஐயரை இழந்திலோமிறே, நீரிழந்தீராகிலித்தனையிறே.

அநும்—அவரருளிச் செய்யாதிருக்க, பாவமறிந்து செய்யும்படி எப்படியென்ன, —அவரித்யாதி. செவி கண்ணுக—கண் செவியாக, ஸேஷாவதீர்த்வாத் என்றபடி. சக்ரவர்த்திக்கு நிரயமாவது ஏதென்ன—நாமித்யாதி.

8\. अत्यन्तसुखसंवृद्धः सुकुमारः सुखोचितः ।
कथं त्वपररात्रेषु सरयूमवगाहते ॥ 16—30.

அத்யந்தஸுகஸம்வ்ருத்த: ஸுகுமாரஸ்ஸுகோசித: ।
கதம் த்வபரராத்ரேஷு ஸரயூமவகாஹதே ॥

ப—ரை. அத்யந்தஸுகஸம்வ்ருத்த:= மிக்க ஸுகத்துடன் வளர்ந்தவரும், ஸுகுமார:= மெல்லிய சரீரமுடையவரும்,

ஸுகோசித:= ஸுகத்திற்கே தகுதியுள்ளவருமான, (பரதர்) க்ஷபாயா: அபரராத்ரேஷு = ராத்திரியின் பிற்பகுதிகளில், கதம் நு = எப்படி, ஸரயூம் = ஸரயூ நதியை (நதியில்) அவகாஹதே = ஸ்நானம் பண்ணுகிறாரோ?

வ்யா. (திருவிருத்தம். 24) அத்யந்த ஸுகஸம்வ்ருத்த:—சக்ரவர்த்தி அறுபதினாயிரம் ஸம்வத்ஸரம் மலடு நின்று பெற்றவனாகையாலே அவன் கொண்டாடின ஸுகமிறே உம்முடைய ஸுகம். நீர் கொண்டாடப்பட்ட ஸுகமிறே இவனுடைய ஸுகம். ஸுகுமார:—உம்முடைய கண்ணாலேபார்க்கவும் பொறாத ஸௌகுமார்யம். ஸுகோசித:— உம்மோடு கலவிக்கு உசிதனத்தனையல்லது பிரிவுக்கு உசிதனன்றிறே. கதம் நு—தன்படியே என்று நினைக்கிறார். பிரிவில்லாமையாலே தமக்கு நீர் குளிருகிறபடியாலே சுடுமென்றறியாதே குளிருமென்றஞ்சுகிறார். அபரராத்ரேஷு—அகாலத்திலே போவானேனென்னில், புதிசாக வைத (ய) வ்யம் வந்தவர்கள் ஆள்கிளப்புவதுக்கு முன்னே மனிதர் முகத்திலே விழியாமே போமாபோலே 'கைகேயி மகன்' என்றும், 'இவனாலேயிறே இப்படி புகுந்தது' என்றும் சொல்லுமதற்கஞ்சி. ஸரயூமவகாஹதே—நீரிலே முழுகினால் தடவிஎடுக்கவேண்டும்படி.

அநு—இந்தஶ்லோகங்கள் பெருமாளும் பிராட்டியும் தாமுமாக அநுஷ்டானத்திற்கு எழுந்தருளினபோது ஜலம் அதிஶீதமாயிருக்கையாலே பரதாழ்வான் விஷயமாக இளையபெருமாள் பெருமாளுக்கு விண்ணப்பம் செய்த வகை.

9. न तेऽम्बा मध्यमा तात गर्हितव्या कथञ्चन ।
तामेवेक्ष्वाकुनाथस्य भरतस्य कथां कुरु ॥ 16—37

நதேம்பா மத்யமா தாத கர்ஹிதவ்யா கதஞ்சந ।
தாமேவேக்ஷ்வாகுநாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு ॥

ப—ரை. தாத= அப்பனே, தே= உன்னால், மத்யமாம்பா= நடுத்தாயார் (கைகேயி) கதஞ்சந= ஒரு விதத்திலும், ந கர்ஹி-

தவ்யா = நிந்திக்கத்தக்கவளல்ல. இக்ஷ்வாகுநாதஸ்ய — இக்ஷ்வாகு வம்ஸத்திற்கு அதி (யி) பதியாகிய, பரதஸ்ய = பரதனுடைய, தாமேவ கதாம் = அந்தவார்த்தையையே, குரு — பண்ணு (சொல்லு)

ஈடு (திருவாய். 9. I. 4.) இளையபெருமாள், கைகேயியுடைய படிகளை அநுஸந்தித்து 'க்ருத்தகாமா ஸதா க்ஷுத்ரா கைகேயீ ராஜ்யகாமிநீ' என்றாப்போலே சிலவற்றைச் சொல்ல, வாராய் பிள்ளாய், நீதானிவையெல்லாம் சொல்லுகிறது நடுவிலாய்ச்சியையோ; ந தே அம்பா மத்யமா தாத கர்ஹிதவ்யா கதஞ்சந — ஒருபடியாலும் நீ அவளை இவ்வார்த்தை சொல்லக்கடவையல்லை. தாமேவ — வேணுமாகில் கைகண்ட மருந்தைச் செய்யப்பாராய். இக்ஷ்வாகுநாதஸ்ய பரதஸ்ய — ஐயரோ பொகட்டுமுடிந்து போனார். நாம் பொகட்டுப் போந்த ராஜ்யத்தை இக்குடியில் மர்யாதை குலையாதபடியாக நோக்கிக்கொண்டு கிடந்த பிள்ளை பரதனன்றோ இக்குடிக்கு நாதன். பரதஸ்ய கதாம் குரு — நாநீர் வரும்படியான வார்த்தை சொல்லப் பாராய்.

அநும். — தேவர் இக்ஷ்வாகுநாதனாயிருக்க, பரதனை இக்ஷ்வாகுநாதன் என்கிறதென்னென்ன, அவ்வர்த்த ஸம்ஜ்ஞையை உடையவனாகையாலே அவனே இக்ஷ்வாகு நாதனென்கிறார்—ஐயரித்யாதி. நாநீர் வரும்படி = நாக்குக்கு நீர் வரும்படி.

10. कदा न्वहं समेष्यामि भरतेन महात्मना ।
शत्रुघ्नेन च वीरेण त्वया च रघुनन्दन ॥ 16—40

கதா ந்வஹம் ஸமேஷ்யாமி பரதேந மஹாத்மநா ।
ஸத்ருக்நேந ச வீரேண த்வயா ச ரகுநந்தந ॥

ப—ரை. ரகுநந்தந = ரகுகுலபுத்ரனாகிய லக்ஷ்மணா, மஹாத்மநா = மஹாத்மாவான, பரதேந = பரதனோடும், ஸத்ருக்நேந ச = சத்ருக்நனோடும், வீரேண = சூரனான, த்வயா ச = உன்னோடும், அஹம் = நான், கதா நு = எப்பொழுது, ஸமேஷ்யாமி = கூடப்போகிறேனோ.

ஈடு. (தி—வாய். 2. 4. 1.) ஸ்ரீ பரதாழ்வானோடும் ஸ்ரீ சத்ருக்நாழ்வானோடும் கூடப்பெறாத கிழிக்குறையாலே, கூடநிற்கிற இளையபெருமாளோடும் கூடிற்றாய்த் தோற்றிற்றில்லையிறே பெருமாளுக்கு.

11. विभीषणस्तु धर्मात्मा न तु राक्षसचेष्टितः । 17—24

விபீஷணஸ்து யர்மாத்மா ந து ராக்ஷஸசேஷ்டிதஃ ॥

ப—ரை. விபீஷணஃ து = விபீஷணனோ, தர்மாத்மா = தர்மபுத்தியுள்ளவன், ந து ராக்ஷஸசேஷ்டிதஃ = ராக்ஷஸவ்யாபாரமுள்ளவனல்ல.

ஈடு. (தி—வாய். 5. 3. 4) விபீஷணஸ்து தர்மாத்மா—இவன் இக்குடியிலுள்ளார்படியல்லன்; இவனுக்கு வாசியுண்டு; அந்த வாசிதன்னைச்சொல்லுகிறது—'தர்மாத்மா' என்று. 'மறக்குடியறஞ் செய்யக்கெடும்' என்றதிறே. ந து ராக்ஷஸசேஷ்டிதஃ— ஜாதிமாத்ரமே இவன் பக்கலுபஜீவிக்கலாவது.

அரும்.— இங்கு தர்மாத்மா என்று ஹிம்ஸாதி ப்ராதிகூல்ய நிவ்ருத்திமாத்ரம் சொல்லுகிறது. துஸப்தார்த்தம்—இவனித்யாதி. தர்மாத்மா—ஸநாதநதர்மமான பெருமாளை ஆத்மாவாகவுடையன் என்றும் சொல்லுவர்கள். தர்மாத்மா என்றால் அது பழியோவென்ன—மறக்குடியித்யாதி. மறக்குடி = க்ராதவம்ஸம். அறம் = தர்மம்.

12. तं दृष्ट्वा शत्रुहन्तारं महर्षीणां सुखावहम् ।
बभूव हृष्टा वैदेही भर्तारं परिषस्वजे ॥ 30—31

தம் த்ருஷ்ட்வா ஸத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் ।
பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்தாரம் பரிஷஸ்வஜே ॥

ப—ரை ஸத்ருஹந்தாரம் = சத்ருக்களைக் கொன்றவரும், மஹர்ஷீணாம் = மஹர்ஷிகளுக்கு, ஸுகாவஹம் = ஸுகத்தை உண்டுபண்ணினவருமான, தம் = அந்த ராமனை, த்ருஷ்ட்வா = பார்த்து, வைதேஹீ = ஸீதை, ஹ்ருஷ்டா = ஸந்தோஷமுள்ளவ

ளாக, பஸஸ்ருஜே = ஆனாள்; ஹ்ருஷ்டா = பர்த்தாவாகிய ராமனை, பரிஷஸ்வஜே = ஆலிங்கநம் செய்துகொண்டாள்.

ஸ்ரீபட்டர் வ்யாக்யாநம். (திருநெடுந்தாண்டகம். 21-பாட்டு) ராக்ஷஸ வேட்டையாடின பெருமாளுடைய யுத்தாயாஸஶ்ரம பரிக்லிந்நமான திருமேனியிலே ராக்ஷஸ ஶரவ்ராத வ்ரணரோப திவ்யௌஷதமான காடா(ஶ்லேஷா)லிங்கநத்தைப் பண்ணி பிராட்டி ஸத்தை பெற்றாளென்கிறது. தம்—ராக்ஷஸபூ(ஹு)யிஷ்டமான தேசத்தில் உன்னைக்கொடுபோக அஞ்சுவேனென்றவரை. தம்—'ஸ்வயம் வாஸஷிருஹம்' என்று பிராட்டியாலே ஆண்கள் முன்பாக ஏவுண்டவன்று தொடங்கி திருவுள்ளத்திலே கறுவியிருந்து பதினாலாயிரம் ராக்ஷஸரையும் ஆழிமூழையாகத் தறித்து ரக்தவெள்ளத்தே மிதக்கவிட்டுப் பிராட்டியைப் பிடித்துக்கொண்டு சேவகத்தை முதலித்துக்காட்டியருளினவரை. தம்= 'க்ஷிதா ஜவ தெஜஸீ' இத்யாதியாலே வீரப்பாட்டுக்குச் சிறுவிரல் முடக்கும்படி அவதீர்ணரானவரை. தம்—படுக்கைத்தலையிலே விடுபூ விழுந்து திருமேனி சிவக்கும்படியான ஸௌகுமார்யத்தையுடையவரை. தம்—உகப்பாலே அடுத்துப்பார்க்கில் ராகமானதேஜஸ்ஸை கொலையும்படியான திருமேனியுடைய்வரை. தம்—வீரஶ்ரீபரிணயமான மணக்கோலத்தோடே த(ஷ)ர்ஶநீயமான ஸௌகுமார்யாதிஶயத்தையுடையவரை. தம்—ரிஷிகளுக்குப்பண்ணின ப்ரதிஜ்ஞை கடலோசையாகாதபடி அது செய்து தலைக்கட்டுகையாலே பூர்ணமநோரதரானவரை. ஶத்ருஹந்தாரம்—ரத்நக(வ)சிதமானபொன்னரிமாலைபோலே ஶத்ருஶரவ்ராதவ்ரணாங்கிதமான திவ்யமங்களவிக்ரஹத்தையுடையவராயுள்ளவரை. த்ருஷ்ட்வா—ஆதபாபிபூ(ஹி)தருடைய ஶீதளதடாகப்ரவேஶம்போலே ராக்ஷஸநிகராபிபூதமான திருமேனியைத் தன் பூர்ணகடாக்ஷமாகிற ஹிமஜலத்தாலே வழிய வார்த்து. 'ஶத்ருஹந்தாரம்' என்றது ப்ரதிபக்ஷநிரஸநத்தால் வந்த புகருடைமை. ஸர்வபூ(ஹு)தஸுஹ்ருத்தான ஸர்வேஶ்வரனுக்கு ப்ரதிபக்ஷமுண்டோவென்னில், 'ஜ்ஞாநீத்வாத்மைவ

வ' 'ஜகௌ வாணா ஹி' 'பத்தர்' இத்யாதிப்ரக்ரியையாலே ஆஶ்ரித விரோதிகளை தனக்கு விரோதிகளாமித்தனையிறே. மஹர்ஷீணாம் ஸுகாவஹம்—யுத்தாரம்பம் தொடங்கி 'கிம் பவிஷ்யதி' என்று வயிறு பிடித்து துக்கிதராயிருந்த மஹர்ஷிகளுடைய பயம் தீர ஶத்ருக்களைக் கட்டடங்கக் கொன்றுவிட்டு அவர்களுக்கு ஸுகாவஹராயுள்ளவரை. மஹர்ஷீணாம் ஸுகாவஹம்—தம்முடைய போஷ்யகுடும்பத்துக்கு ஸுகத்தைப்பண்ணி, தம்முடைய ஸத்தைக்கு ஆபாதகமானவரை. பபௌ—மாலையும் மணமும்போலே அத்யந்தஸுகுமாரமான விக்ரஹத்தையும் ஸ்வபாவத்தையுமுடையவராயிருக்கிற பெருமாள், கடி(டி)னமான கா(ஶா)த்ரங்களையும் ஸ்வபாவங்களையுமுடைய முரட்டுராக்ஷஸரோடே யுத்தம் ப்ராரம்பித்தபோதே தொடங்கி ப்ரேமாதிஶயத்தாலே ஸத்தை மாண்டு கிடந்த பிராட்டி, திருமேனியிலே ஒரு தீங்கின்றியிலேநின்ற பெருமாளைக் கண்டு ஸத்தை பெற்றாளென்கிறது. ஹ்ருஷ்டா—தர்மியுண்டானால் தர்மம் பிறக்கக் கடவதிறே. ராமஸௌந்தர்யத்தை முழுக்கக் கண்டு திருவுள்ளத்தில் பிறந்த களிப்புப் புறவெள்ளமிட்டபடி. வைதேஹீ—ஐயர் வயிற்றிலே பிறந்திலேனாகில் நமக்கு இந்தப் பேறில்லையிறே. வைதேஹீ—இக்குடியில் பிறந்திலேனாகில் பெருமாள் என்னைக் கைப்பிடியாரே. வைதேஹீ—இந்நிலத்தில் பிறந்திலேனாகில் எனக்கு இவ்வில்லோட்டை ஸௌப்ராத்ரம்(ஸௌஹார்தம்) கிடையாதே; அவ்வில்லோட்டை ஸௌப்ராத்ரம் இல்லையாகில் வீர்யஶுல்கமான இவ்வாகாரம் கூடாதே. வைதேஹீ—தனுர்பங்க(பஞ்ஜன)மாத்ரத்திலே என்னையும் தம்முடைய வம்ஶத்தையும் பெருமாளுக்கு அடிமையாக எழுதிக் கொடுத்த ஐயர், இற்றை நாளை ஆகாரம் கண்டால் என்படுகிறாரோ. வைதேஹீ—'பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்' என்கிறபடியே ஸர்வலோகாகர்ஷகமான இந்நிலையை ஐயரை ஒழிய நான் காண்பதே என்று பித்ருஸ்ம்ருதி பண்ணுகிறாள். பர்த்தாரம்—பாணிக்ரஹணம்வேளை தொடங்கி பதித்வப்ரதிபத்தி பண்ணிப் போந்தேன்; இப்போதிறே தாத்பர்த்தம் (யாதார்த்யம்) ஜீவி

த்தது. பரிஷஸ்வஜே—ஸஸ்வஜே—ஆலிங்கனம் பண்ணினாள்; பரிஷஸ்வஜே—பூர்ணமாகத்தழுவினாள். பரிஷஸ்வஜே—பர்யாப்தமாகத்தழுவினாள். பரிஷஸ்வஜே—திருமேனியில் தழும்பு மாறுமளவும் தழுவினாள். பரிஷஸ்வஜே—ஶரவ்ரணங்களால் வந்த தழும்பு மாறுமளவும் திருமுலைத்தடத்தாலே வேது கொண்டாள். தான் கைகண்ட மருந்திறே ஶரவ்ரணங்களுக்கு ஆலிங்கனம். ஔஷதமாமிடத்தில் ஐந்துடன் ஐந்நூறோடு வாசியில்லையே. அந்தரங்கர் உள்ளூற எய்த புண்ணுக்கு மருந்தான இது தோல்புரையே எய்தபுண்ணுக்கும் மருந்தாகச் சொல்லவேணுமோ என்றிருந்தாள். ஒரு கொடியாகில் ஒரு கொள்கொம்பைத் தழுவியல்லது நில்லாதிறே. பரிஷஸ்வஜே—நித்யஸம்யோகஸ்திதிரூபமான ப(ஹ)ர்த்ருத்வாகாரம் ஒரு கொள்கொம்புக்கு உண்டானால் ததாதார (தத்ஶாகா)மாகப் படர்ந்து அத்தை மூடி அக்கொள்கொம்பைச் சிறப்பித்துக் கொண்டாலல்லது கொடிக்கு ஸ்வரூபமில்லையிறே. ப⁴ர்த்தாரம் பரிஷஸ்வஜே—'ப⁴ர்த்தாரமுபஸங்க³ம்ய ஸாயகார்த்த: பரிஷ்வஜே। ப்ரஹ்ருஷ்டா ஸ்ரீ: க்ருதப்ரஜ்ஞா நவிநஷ்டா: ஶுபே⁴' என்னுமாபோலே.

'த்³ருஷ்ட்வா' என்கிற பதம் பெருமாளுடைய ஸர்வாதா(பா)ரத்வத்தைக் காட்டுகிறது. 'த்³ருஷ்ட்வா' என்கிற பதத்தாலே பெருமாளுடைய ஆகாரங்களையெல்லாம் நேராகக்காணவல்லாள் பிராட்டி என்கிறது. 'ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகா²வஹம்' என்கிறவற்றால் தன்னோடு கூடல்துடக்குண்டான சேதநர்க்கு அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் பண்ணினபோதல்லது அவரைக் காணக் கண்ணில்லை என்கிறது. 'வைதே³ஹீ' என்கிறவித்தால் அவரைக் கண்டு ஸத்தை பெற்றாளென்கிறது. 'ஹ்ருஷ்டா' என்கிற பதத்தாலே தர்மி உண்டானவாறே தர்மம் குடிபுகுந்ததென்கிறது; 'வைதே³ஹீ' என்ற பதத்தாலே ஹேதுபூதர்பக்கல் உபகாரஸ்ம்ருதி சொல்லுகிறது. 'ப⁴ர்த்தாரம்' என்று 'விதாஹ்ருஶ்ரஹம் ஜாதா' என்று புத்ரரக்ஷணத்தில் உகப்பாலே புருஷகாரத்வம் சொல்லுகிறது. 'பரிஷஸ்வஜே' என்று ஆஶ்ரிதரக்ஷணத்தால் வந்த

உகப்புக்குப் போக்குவீடு ஆலிங்கனமாய், அதுதான் பாரம்பர்யோ ஜநமென்கிறது. இத்தால் வீரபத்நி அகப்பட்ட வீரக்கோலம் சொல்லிற்று.

ஈடு (தி-வாய். 3. 5. 4) தம் த்ருஷ்டா—ப்ரணயதா(யா)ரை யில் ரஸிகத்வமேயாயிற்று முன்பு கண்டு போந்தது; அந்த போக (ஹோம) த்துக்கு விரோதிகளானவற்றைப் போக்கவல்லர் என்று கண்டது இன்றாயிற்று. வேட்டைக்குப் போனால் இன்ன துஷ்ட ம்ருக(ரூப)த்தைக் கொன்றார், இன்ன ராக்ஷஸனைக் கொன்றார் என்று கூடப் போனவர்கள் சொல்லக் கேட்குமத்தனை முன்பு; அவ்வளவன்றிக்கே கண்ணாலே கண்டது இன்றாயிற்று. ஸுகாவஹ ஜாரஞ்—தம் திருமேனியில் ஒரு வாட்டம் வாராமே எதிரிகளை நோவுபடும்படியாக, அம்போடே வெட்டோடே போகாமே எதிரிகளை முதலற மாய்த்து வந்தவரை. மஹர்ஷீணாம் ஸுகாவஹ ஞ்—பா(ஹா)ர்யையபக்கல் முகம் பெறுகைக்கு ப்ரஜையை எடுத்துக்கொண்டு போவாரைப்போலே ரிஷிகளுக்கு விரோதிகளான ராக்ஷஸர்களைக் கொன்று, பிராட்டியை அணைக்கைக்கு அது பச்சையாக வந்தார். வைதேஹீ—ராக்ஷஸருடைய க்ரௌர்யத்தையும் பெருமாள் ஸௌகுமார்யத்தையும் அநுஸந்தித்து 'என்புகுருகிறதோ' என்று 'ஸத்தையில்லை' என்னும்படியிருந்தவள் வெற்றியோடே கண்டு உளளானாள். ஹ்ருஷ்டா—தர்மியுண்டானால் தர்மங்களும் உண்டாமிறே. வைதேஹீ—வீரவாசி அறியுங்குடியிலே பிறந்தவளென்னுதல்; அன்றிக்கே ஒரு வில்லை முறிக்க என்னைக் கொடுத்த எங்கள் ஐயர் தனியே நின்று பதினாலாயிரம் ராக்ஷஸரைக் கொன்ற வீரவாசியைக் கண்டாராகில் என்படுவரோ என்று அவரை நினைத்தாளாகவுமாம். ஸதத்ராஞ—'தாராஃ விதத்ருக்ஷு தாஃ' போலே 'ஐயர் நீர்வார்த்துக் கொடுத்தவர்' என்று விரும்பிப் போந்தாள் முன்பு; இப்போதாயிற்று ஆண்பிள்ளை என்று அணைத்தது- 'ஷீபம் வாரஷவிந்த்ரஹஞ்' என்றவளிறே. பரிஷஸ்வஜே—புத்தவடிவுள்ளவிடமெங்கும் திருமுலைத்தடத்தாலே வேதுகொண்டாள்.

அநும்—'தம்' என்றதுக்கு—பாவம் ப்ரணயேத்யாதி. தச்சப்தம் 'ராமஸ்து ஸீதயா ஸார்த்தம்' இத்யாதிகளில் உக்தமான ஆகாரபராமர்ஶீத்யபிப்ராய:. இப்போது ஶத்ருஹந்தாவாகக் கண்டாளாகையாலே முன்பு ஆகாராந்தரம் கண்டிருப்பளென்னுமிடம் ஸித்தமிறே. 'த்ருஷ்ட்வா' என்றதுக்கு பாவம்—வேட்டைக்கித்யாதி. பச்சை = உபஹாரம். வெற்றி = ஜயம். தர்மீத்யாதி—'ஹ்ருஷ்டா ச பபூவ' என்று இவர்க்கு விவக்ஷிதம். விதேஹராஜகுலோத்பவாத் வா ததாநீம் விதேஹராஜஸ்மரணயோகாத் வா வைதேஹீதி ப்ரயுக்தவான் வால்மீகிரிதி பாவ:. வேதுகொண்டாள் = காய்ச்சியொத்தினாள். 'ஶீதகாலே பவத்யுஷ்ணம் உஷ்ணகாலேதிஶீதளம். கூபோதகம் வடச்சாயா நாரீகுசயுகம் ததா' என்னக் கடவதிறே.

ஈடு. (தி-வாய். 6. 10. 4) தம் த்ருஷ்ட்வா—வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியான அழகையுடையவரை, எதிரிகளைவென்ற வீரக்கோலத்தோடே கண்டாள். ஶத்ருஹந்தாரம்—தம் திருமேனியிலே ஒருவாட்டம் வாராமே, அவர்களைக் குற்றுயிராக்கிவிடுவதும் செய்யாதே, துண்டித்து அடுக்கினவரை. முன்பு திருவயோத்யையிலிருந்த நாள், இவர்வேட்டைக்கு போனவிடத்தே இன்னபடியுமின்னபடியும் பொருதார் இன்னபுலியைக்குத்தினார் இன்ன ஸிம்மத்தைக் குத்தினார் என்றுப்போலே பந்துக்கள் சொல்லக்கேட்குமத்தனையிறே. இங்கு பூசலுக்குப் புகுகிறபோதே பிடித்து மேலுள்ள வ்யாபாரங்களடங்கலும் கண்டாள். மஹர்ஷீணாம் ஸுகாவஹம்—ரிஷிகளுடையவிரோதிகளைப் போக்கி அவர்களுக்குக் குடியிருப்புப் பண்ணிக்கொடுத்தவரை. தங்கள் தபோபலத்தாலே வெல்லலாயிருக்க, தங்கள் பர(ஹர)த்தைப் பெருமாள் தலையிலே பொகட்டு முறையுணர்ந்துகொண்டிருக்குமவர்களுக்கு. '[illegible]' தந்தாம் கைம்முதலழிய மாறுதேயிருக்குமவர்கள். தபோத(ய)னராயிருக்கச் செய்தே கர்ப்பபூதராயிருப்பர்கள் தந்தாமுக்கென்ன இபற்றி உண்டாயிருக்கச்செய்தே; கர்ப்பாவஸ்தையில் ஜநநி அறிந்து ரக்ஷிக்குமத்தனையிறே. அப்படியே அவனை அறிந்து ரக்ஷிக்கவிருக்குமவர்கள். அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூலநிரஸநமும் இவளுக்கு ப்ரியமாகச் செய்யுமவையிறே.

ஹ்ருஷ்டா—பதினாலாயிரம் முரட்டு ராக்ஷஸரோடே தனியே நின்று பொருகிற வீரத்தைக் கண்டஞ்சி 'இதென்னாய் விளையுமோ,

என்று ஸத்தை அழிந்துகிடந்தாள்; இப்போதுளளானாள். 'ஸந்த்ருஷ்டா'. ஹ்ருஷ்டா—ஸத்தை உண்டானால் உண்டாமதுவுமுண்டாயிற்று. வைதேஹீ— உபாத்யாயர்கள் பெண்பிள்ளைகளுக்குச் செவியேற்றாலே ஓத்துப் போயிருக்குமாபோலே, வீரவாசியறியுங்குடியிலே பிறந்தவளிறே. ஒரு வில்லை முறித்தவிதுக்கு உகந்து என்னைக்கொடுத்த எங்களையர், பதினாலாயிரம் பேரைத் தனியே நின்று முடித்தவித்தைக்கண்டாலென்படுகிறார் தான். ஸதஸ்வஜே— முன்பு இவர் ஸுகுமாரராகையாலே 'குழை சரக்கு' என்றும் 'ஐயர் நம்மை இவர்க்கு நீர்வார்த்துக்கொடுக்கையாலே நாம் இவர்க்கு சேஷம்' என்றும் அணைத்தாளத்தனை. ஆண்பிள்ளை என்று அணைத்தது இப்போது. பரிஷஸ்வஜே—ராவணஸமராய், அவன் மதித்த வீரத்தையுடையராயிருப்பார் பதினாலாயிரம் பேரும் விட்ட அம்புகளடங்கலுமிவர்மேலேபட்டு, கண்டவிடமெல்லாம் புத்தவடுவாயிறே திருமேனி கிடக்கிறது. அவ்வோவிடங்கள்தோறும் திருமுலைத்தடத்தாலே வேதுகொண்டாள்.

அரும்—தம்ஶத்ருஹந்தாரம் த்ருஷ்ட்வா என்கிற பதங்களுக்கு அர்த்தம்-வெரும்புறத்திலே யித்யாதி. 'தம்' என்ற ப்ரஸித்தியாலே ஸ்வாபாவிகமான அழகைச் சொல்லுகிறது. 'ரிஷீணாம்' என்றதுக்கு பாவம்—தங்களித்யாதி. அதாவது—ரிஷி தர்ஶனே (ருஷீ தஶநே) என்று ஈஶ்வரனே ரக்ஷகன் நாம் ரக்ஷ்யரென்கிற ஞானத்தையுடையவர்களென்றபடி. அப்படி அவனிடத்தில் ந்யஸ்தபரரோ என்ன—கர்ப்பபூதா இத்யாதி. விவரணம்—தந்தாமுக்கென்னவித்யாதி. இயற்றி=யத்நம். குழை சரக்கு=ரக்ஷ்யவஸ்து. பரிஷஸ்வஜே என்றதுக்கு பரித: ஸஸ்வஜே என்றாக்கி, எங்கும் கட்டிக்கொள்ளுகைக்கு ஹேது அருளிச் செய்கிறார்—ராவணஸமராயித்யாதி.

13. तौ वनानि गिरींश्चैव सरितश्च सरांसि च ।
निखिलेन विचिन्वानौ सीतां दशरथात्मजौ ॥ 61-21.

தௌ வநாநி கிரீம்ஶ்சைவ ஸரிதஶ்ச ஸராம்ஸி ச ।
நிகிலேந விசிந்வாநௌ ஸீதாம் தஶரதாத்மஜௌ ॥

ப—ரை. தௌ உஸாரயாத்மஜௌ = அந்த தசரதபுத்ரர்களான ராமலக்ஷ்மணர்கள், ஸீதாம் = ஸீதையைக் குறித்து, வநாநி = காடுகளையும், கிரீந் வ = மலைகளையும், ஸரித: வ = ஆறுகளையும், ஸராம்ஸி வ = தடாகங்களையும், நிகிலேந = முழுமையும், விசிந்வாநௌ = தேடுகிறவர்களாகக் கொண்டு, (தாம் = அந்த ஸீதையை, ந வ அதிஜக்மது: = அடையவேயில்லை.)

ஈடு. (தி-வாய். 2-1-4) ஸீதாம்—'தேடிக்கண்டிலோம்' என்று ஆறியிருக்கலாம் விஷயமன்று. உஸாரயாத்மஜௌ—தேடப் பிறந்தவர்களல்லர்.

அரும்—'நிகிலேந' என்கையாலே கடல் ஆகாசம் உட்படவெங்கும் விஸ்லேஷ ப்ரயுக்த மயக்கத்தாலே அஸாத்யம் என்றறியாதே தேடத்தொடங்கினார்களென்றபடி. தேடித்யாதி—அயோநிஜத்வத்தால் வந்த வைலக்ஷண்யத்தையுடையவளாகையாலே ஆறியிருக்கப் போகாதென்றபடி. 'தசரதாத்மஜௌ' என்று ராஜபுத்ரர்களாகையால் வந்த ஸௌகுமார்யம் சொன்னபடி. தேடப்பிறந்தவர்களல்லரென்பது—'மஹதா தபஸா ராம மஹதா சாபி கர்மணா' ராஜ்ஞா தசரதேந த்வம் லப்தோऽம்ருதமிவாமரை:' என்றதைப் பற்ற.

14. अस्मिन्मया सार्धमुदारशीला शिलातले पूर्वमुपोपविष्टा ।
कान्तस्मिता लक्ष्मण जातहासा त्वामाह सीता बहुवाक्यजातम् ॥

அஸ்மிந்மயா ஸார்த்தமுதாரஶீலா ஶிலாதலே பூர்வமுபோபவிஷ்டா । காந்தஸ்மிதா லக்ஷ்மண ஜாதஹாஸா த்வாமாஹ ஸீதா பஹுவாக்யஜாதம் ॥ 63-12.

ப—ரை. லக்ஷ்மண = ஏ லக்ஷ்மணா, உதாரஶீலா = கம்பீரமான ஸ்வபாவமுடையவளும், காந்தஸ்மிதா = அழகிய புன்சிரிப்புள்ளவளுமான, ஸீதா = ஸீதையானவள், பூர்வம் = முன், மயா ஸார்த்தம் = என்னோடுகூட, அஸ்மிந் = இந்த, ஶிலாதலே = கற்பாறையில், உபோபவிஷ்டா = நெருங்கி உட்கார்ந்து கொண்டவளாய், ஜாதஹாஸா (ஸதீ) = பரிஹாஸச் சிரிப்பு உண்டானவளாய், த்வாம் = உன்னை, (உன்னோடு) வாக்யஜாதம் = அனேகவார்த்தைகளை, பஹு = பலவிதமாக, ஆஹ = சொன்னாள்.

பெ—வ்யா (பெரிய திருமொழி. 2. 7. 7.) முன்பு தாமும் பிராட்டியுமாய் ஜலக்ரீடாதிகள் பண்ணி ஸரஸமாகப் பரிமாறிற்றேரிடத்திலே, பிராட்டியைப் பிரிந்து தாமும் இளையபெருமாளுமாய்த் தேடிக்கொண்டு வாரா நிற்கச்செய்தே அவ்விடத்தைக் கண்டு இளையபெருமாளைப் பார்த்தருளிச்செய்கிறார்—க்ஷிநு—இப்படி வெறுந் தரையாயிருக்கிற விடத்திலே காண் அன்று நாம் எடுப்பு எடுத்தது. ஃயா ஸாய—ப்ரணயதா(யா)ரையில் தம்மைத் தாம் சால மதித்திறேயிருப்பது, நாமும் கூடக் காணவந்த சோழரோபாதியாகக் கடக்க நிற்கும்படி அவளுடைய அளவுடைமையும் விதக்த(விசஷ்ட)மாகப் பரிமாறினபடியும் காண். உஷாரு ஸீஷா—படைவீட்டிலிருந்த நாள் மாமனார் மாமியார்க்குக் கூசிச் சிறிது படிவிடுவாரோபாதி அளவுபடவாயிற்று போகம் செல்லுவது; இப்போது அவ்வளவன்றிக்கே ஏகாந்தஸ்தலமாகையாலே தன்னை முற்றூட்டாக ஸர்வஸ்வதானம் பண்ணிக்கொண்டிருந்தாளாயிற்று. ஸீஷாதயெ வ—ஜவ—ஜலக்ரீடை பண்ணுகிறதோரிடத்திலே சிலாதலமாய், இளைத்தவிடத்திலே அதிலே ஏறுவதாகப் பெருமாள் முற்கோலிக் கணிசிக்க, 'வெ—க்ஷி தஜூாஸு கொஸஸீா:' என்கிற அதிலேயும் ஒரு ஸம்பந்தமுண்டிறே ஸூவளுக்கு; அத்தை இவருடைய இங்கிதாதிகளைக் கொண்டறிந்து இவரை இளைப்பிக்கவேணுமென்று பார்த்து, பெருமாளேறுவதாகக் கணிசித்த துறையை அடைத்துக் கொண்டிருந்தாள். உவொவவிஷா—அப்படியாயிருக்குமிறே எங்கும். காஜுவஷிதா—வெறும்புறத்திலே தானே துவக்கவல்லவள்; முறுவலைச் சேர்த்தாற்போலேயாயிற்று முகந்தானிருப்பது. அதுக்குமேலே அப்போது பிறந்த வெற்றியாலே ஜாதஹாஸையானுளாயிற்று. கூாரோஷ—இதுக்கு முன்பு துடங்கின் கார்யத்தில் தலைக்கட்டாதே மீளுமைதில்லையிறே பெருமாள்; இதொன்றும் தலைக்கட்டப் பெற்றதில்லை; அத்தாலே லஜ்ஜித்துக் கவிழ்த்தலையிட்டார் பெருமாள். அவரை விடா, இவரைப் போரப்பொலிய சொல்லிக்கொண்டாடும் இளையபெருமாள்முகத்தைப் பார்த்தாள்; 'பாரீரோ தம்பியீர், நீங்கள்

நினைத்ததெல்லாம் தலைக்கட்டினிகோளிறே. நீங்கள் வல்லவலிய ஆண்பிள்ளைகள், நாங்கள் பெண் பெண்டுகள். நீங்கள் வேட்டைக்கும் வினைக்கும் போய் வ்யாபரிக்குமவர்கள், நாங்கள் வீடுவிட்டுப் புறப்பட்டறியோம். உங்களுக்கு நினைத்தவகைகளெல்லாம் தலைக்கட்டலாமிறே. உங்கள் தமையனார் வென்றாரிறே' என்று பஹுமுக(பஹுவித)மாகக்கொண்டு வார்த்தை அருளிச்செய்தாளாயிற்று.

அரும்—எடுப்பு = நிக்ஷேபம். அஸ்மச் சப்த தாத்பர்யம் அருளிச்செய்து, த்ருதீயை அப்ரதானேயாய், ஜலக்ரீடா ரஸாநுபவத்திலிருக்கும் ப்ராதா(யா)ந்யத்தை அருளிச் செய்கிறார்—நாமுமித்யாதி. காண்வந்த சோழரோபாதி = மல்லயுத்தம் பார்க்க வந்த சோழராஜாக்களோபாதியென்றபடி. உப உப என்கிற த்வி(ரு)ருக்தியாலே, ஸமீபத்தில் துறை துறைதோறுமிருந்தாளென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார்—அத்தையித்யாதி. 'ஜாதஹாஸா' என்று கதா(உ)சித் ஹாஸம்போலன்றிக்கே, 'காந்தஸ்மிதா' என்று சொன்னதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்—வெறுமித்யாதி. ப்ரணயதாரையில் பெருமாளோடு வார்த்தை சொல்ல ப்ரஸக்தி உண்டாயிருக்க, இளையபெருமாளோடு வார்த்தை அருளிச்செய்கைக்குக் கருத்தருளிச்செய்கிறார்—இதுக்கு முன்பித்யாதி. வாக்ய ஜாதந்தானென்னென்ன——பாரீரோ இத்யாதி.

15. पुरेव मे चारुदतीमनिन्दितां दिशन्ति सीतां यदि नाद्य मैथिलीम्।
सदेवगन्धर्वमनुष्यपन्नगं जगत्सशैलं परिवर्तयाम्यहम्॥ 64-76

புரேவ மே சாருத³தீமநிந்தி³தாம் தி³ஶந்தி ஸீதாம் யதி³ நாத்³ய மைதி²லீம் । ஸதே³வக³ந்த⁴ர்வமநுஷ்யபந்நக³ம் ஜக³த்ஸஶைலம் பரிவர்தயாம்யஹம் ॥

ப.—ரை. சாருத³தீம் = அழகிய பற்களையுடையவளும், அநிந்தி³தாம் = குற்றமற்றவளும், மைதி²லீம் = ஜநகமஹாராஜரின் புத்ரியுமாகிய, ஸீதாம் = ஸீதையை, அத்³ய = இப்போது, மே = என்பொருட்டு, புரா இவ = முன்போல, ந தி³ஶந்தி யதி³ = கொடுக்கமாட்டார்களேயாகில், அஹம் = நான், ஸதே³வக³ந்த⁴ர்வமநுஷ்யபந்நக³ம் = தேவர்கள், கந்தர்வர்கள், மனிதர்கள், ஸர்ப்பங்க

ள், ஆகிய இவர்களோடு கூடியதும், ஸபெளஷம் = மலைகளோடு கூடியதுமான, ஜகத் = உலகத்தை, வரிவத்யாமி = அழித்துவி டுகிறேன், அல்லது மாற்றிவிடுகிறேன்.

பெ.—வ்யா. (பெரியதிருமொழி. 3. I. 7.) வாரெவ 0த வாரா்டிதீ—மாயாம்ருகத்தின் பின்னே போவதுக்கு முன்பு 'இம்மானைப் பிடித்துத் தரவேணும்' என்ற முறுவலோடே கொடு வந்து காட்டிற்றிலர்களாகில், கமிநி தாழ—அவளைப்பெருமையா லே ஜகது(மஹா)பஸம்ஹாரம் பண்ணினுரென்றால், அவளுக்கா க இது செய்தவிடம் தப்பச்செய்தார் என்னவல்லாருமுண்டோ. 'யாக்ஷ்தெவ்ய 0த 8தி:' என்னுமித்தனையாகாதே, பிராட்டியை உ ள்ளபடியெல்லாமறியாத எனக்கும் இருந்தபடி இது. இனி இவ ளை உள்ளபடி அறிவார் என் நினைந்திருப்பார்களோ.

16. राज्याद्भ्रंशो वने वासः सीता नष्टा हतो द्विजः ।
ईदृशीयं ममालक्ष्मीर्निर्दहेदपि पावकम् ॥ 67—25.

ராஜ்யாத்ப்ரம்ஶோ வநே வாஸ: ஸீதா நஷ்டா ஹதோ த்விஜ:।
ஈத்ருஶீயம் மமாலக்ஷ்மீர்நிர்தஹேதபி பாவகம் ॥

ப.—ரை. ராஜ்யாத் = ராஜ்யத்தினின்றும், ப்ரம்ஶ: = நழு வுதல்; வநே = காட்டில், வாஸ: = இருப்பு; ஸீதா = ஸீதை, ந ஷ்டா = காணப்படவில்லை; த்விஜ: = ஜடாயுபக்ஷி, ஹத: = கொல்ல ப்பட்டது; ஈத்ருஶீ = இவ்விதமுள்ள, மம = என்னுடைய, இயம் = இந்த, அலக்ஷ்மீ: = துர்ப்பாக்கிய நிலைமை, பாவகமபி = அக்நி யைக்கூட, நிர்தஹேத் = கொளுத்திவிடும்.

ஈடு. (தி. வாய் 4-9-1) இவர்கள் படுகிற க்லேஶத்தைக் க ண்டு தன் க்ருபையாலே அவனெடுக்கக் கைநீட்டினவிடத்திலே படுகிறபாடிறே இது. திருவபிஷேகம் பண்ண நாளிட்டவாறே, 'ராஜ்யமெனக்கு வேணும்' என்றார்கள் சிலர். அத்தை இழந்தால் படைவீட்டிலேயிருக்கப் பெற்றதாகிலுமாமிறே. 'என்மகன் ராஜ்

யம் பண்ணவேண்டா, பிக்ஷைப் புக்காகிலும் என் கண்வட்டத்தி லே இருக்கவமையும்' என்றருளிறே ஸ்ரீகௌஸல்யையார். ஸீதா நஷ்டா—'பிராட்டியும் தாமுமாய் ஏகாந்தமாக புஜிக்கலாம்' என்று போர, இருவரும் இரண்டிடத்திலேயாம்படியாய் விழுந்தது. ஹதோ த்விஜ:—பிராட்டிக்குத் தனியிடத்திலே உதவப் புக்க பெரிய உடையாரையுமிழந்தது. 'ராஜ்யநாஶம் வசுஷ்டுதி' 'வநவாஸோ மஹோதய:' என்றும் சொல்லிப் போந்தவற்றை இப்போது அநர்த்தமாகச் சொல்லுகிறதென்னென்னில்—'ஆஶ்ரித ஸம்ஶ்லேஷத்துக்கும், ரிஷிகளை எடுக்கைக்கும்' என்றிறே போந்தது, அத்தோடே விரோதிக்கையாலே சொல்லுகிறார். பிராட்டியைப் பிரிகையாலும் பெரியவுடையாரிழவு பலிக்கையாலும், இவற்றுக்கு அடியானவையும் இப்போது அநர்த்தமாகத் தோற்றுகையாலே சொல்லுகிறார். இவ்விரண்டாலும் வரும் துக்கங்களையடைய நினைக்கிறது. நிர்தஹேதபி பாவகம்—பிரியாத இளைய பெருமாளையும் பிரிக்கவும் வற்றாயிறே இருப்பது.

அரும்—'ராஜ்யாத் ப்ரம்ஶ:, வநே வாஸ:' என்ற பதத்வயத்துக்கும் வாஸனை—திருவபிஷேகமித்யாதி வாக்யத்வயத்தாலே. 'வநே வாஸ:' என்கிறத்தோடே 'ஸீதா நஷ்டா' என்ற பதத்துக்கு வாஸனை—பிராட்டியுமித்யாதி. நஷ்டா—'ணஶ அதர்ஶநே' அத்ருஷ்டையானாளென்றபடி. 'ஹதோத்விஜ:' என்றதுக்கு வாஸனை—பிராட்டிக்கித்யாதி. பெரியவுடையார்—ஸ்ரீஜடாயுமஹாராஜர். தடஸ்த்த ஶங்கையைப் பரிஹரிக்கிறார்—ராஜ்யநாஶ இத்யாதி. ராஜ்ய ப்ரம்ஶமும் வநவாஸமும் அன்று ஸுகமாகைக்கும் இன்று துக்கமாகைக்கும் ஹேது அருளிச்செய்கிறார்—ஆஶ்ரிதேத்யாதி. ஆஶ்ரிதை—பிராட்டி. 'நிர்தஹேத்' என்றதிலே, அஸம்பாவிதத்தையும் ஸம்பவிப்பிக்குமென்று பலிப்பித்து, அது இன்னதென்கிறார்—பிரியாதவித்யாதி. அதாவது—தாஹகமான அக்நியைச் சுடுமாபோலே விஶ்லேஷிப்பிக்கப் போகாத இளையபெருமாளையும் விஶ்லேஷிப்பிக்குமென்றபடி.

## ஆரண்யகாண்டம் முற்றிற்று

𑌶𑍍𑌰𑍀𑌃 ॥

# ॥ கிஷ்கிந்தாகாண்டம் ॥



1. स तां पुष्करिणीं गत्वा पद्मोत्पलझषाकुलाम् ।
रामः सौमित्रिसहितो विललापाकुलेन्द्रियः ॥ 1—1.

𑌸 𑌤𑌾𑌂 𑌪𑍁𑌷𑍍𑌕𑌰𑌿𑌣𑍀𑌂 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌪𑌦𑍍𑌮𑍋𑌤𑍍𑌪𑌲𑌝𑌷𑌾𑌕𑍁𑌲𑌾𑌮𑍍 ।
𑌰𑌾𑌮𑌃 𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑌿𑌸𑌹𑌿𑌤𑍋 𑌵𑌿𑌲𑌲𑌾𑌪𑌾𑌕𑍁𑌲𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 ॥

ப—ரை. 𑌸𑌃= அந்த, 𑌰𑌾𑌮𑌃= ராமன், 𑌪𑌦𑍍𑌮𑍋𑌤𑍍𑌪𑌲𑌝𑌷𑌾𑌕𑍁𑌲𑌾𑌮𑍍= தாமரைப் பூக்களும் கருங்குவளைப் பூக்களும் மீன்களும் நிறைந்த, 𑌤𑌾𑌮𑍍= அந்த, 𑌪𑍁𑌷𑍍𑌕𑌰𑌿𑌣𑍀𑌮𑍍= ஸரஸ்ஸை, 𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑌿𑌸𑌹𑌿𑌤𑌃= லக்ஷ்மணனோடு கூடியவனாய், 𑌗𑌤𑍍𑌵𑌾= அடைந்து, 𑌆𑌕𑍁𑌲𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃= பொறிகள் கலங்கியவனாயிருந்துகொண்டு, 𑌵𑌿𑌲𑌲𑌾𑌪= பிரலாபித்தான்.

ஈடு (திருவாய். 9-9-1) 𑌸𑌃—பிராட்டியைப் பிரிந்து நடுவே கபந்தன் கையிலகப்பட்டு நோவுபட்டு நிற்கிற நிலையைச் சொல்லுகிறது. 𑌤𑌾𑌮𑍍—இப்பிரிவும் ஆற்றாமையும் இல்லாதாரையும் அழிக்கவற்றாய்த்து. 𑌪𑍁𑌷𑍍𑌕𑌰𑌿𑌣𑍀𑌮𑍍— பரப்பு மாறப் பூத்த பொய்கைகளும் சோலைகளுமாய் ஜலக்ரீடைக்கு யோக்யமான தேசமாய்த்து. பிரிந்து தனியிருப்பார்க்குக் கண்கொண்டு காணப்போகாது. 𑌗𑌤𑍍𑌵𑌾—நினைவின்றிக்கே யிருக்கச் செய்தே, ம்ருத்யுவினுடைய ஆஸ்யத்திற் புகுவாரைப்போல வந்துகிட்டிக்கொடுநின்றார். ம்ருத்யுவாகிற புடைதானேதென்றால், 𑌪𑌦𑍍𑌮𑍋𑌤𑍍𑌪𑌲𑌝𑌷𑌾𑌕𑍁𑌲𑌾𑌮𑍍—முகத்துக்கும் கண்ணுக்கும் போலியானவற்றை உடைத்தாயிருந்தது. 'உயர்தாமரை செங்கழுநீர் மாதர்கள் வாண்முகமும் கண்ணுமேந்தும்' என்னக்கடவதிறே. 𑌰𑌾𑌮𑌃— பிறர்கூப்பீடு தவிர்த்துப் போந்தவராய்த்து. 𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑌿𑌸𑌹𑌿𑌤𑌃—'𑌰𑌾𑌘𑌵𑌸𑍍𑌯...ணை' என்று ஏதேனுமளவிலும் கூட நின்று நோக்கிக்கொண்டு

போந்தவரும் முன்னாக; ஆறு இழியுமவன் தெப்பம் முன்னாக இழியுமாபோலே. விஹகாகுலேந்த்ரிய:— அநேகலக்ஷணங்களோடேயாய்த்துக் கூப்பிட்டது.

அரும்—பிறர்கூப்பீடித்யாதிக்கு 'ரமயதீதி ராம:' என்று கருத்து. 'ஆகுலேந்த்ரிய:' என்றதுக்கு அர்த்தம்—அனேகலக்ஷணங்களோடே என்றது.

२. मयूरस्य वने नूनं रक्षसा न हृता प्रिया ।
तस्मान्नृत्यति रम्येषु वनेषु सह कान्तया ॥ 1—40.

மயூரஸ்ய வநே நூநம் ரக்ஷஸா ந ஹ்ருதா ப்ரியா ।
தஸ்மாந்ந்ருத்யதி ரம்யேஷு வநேஷு ஸஹ காந்தயா ॥

ப—ரை. வநே = காட்டில், மயூரஸ்ய = மயிலின், ப்ரியா = ப்ரியையான ஸ்த்ரீ, ரக்ஷஸா = ராக்ஷஸனால் (ராவணனால்) ந ஹ்ருதா = அபஹரிக்கப்படவில்லை. நூநம் = திண்ணம். தஸ்மாத் = ஆகையால், ரம்யேஷு = அழகிய, வநேஷு = காடுகளில், காந்தயா ஸஹ = ஸ்த்ரீயோடுகூடி, ந்ருத்யதி = ஆடுகிறது.

பெ-வ்யா. (பெரிய திருமொழி. 3. 6. I.) இந்த மயில்களிருந்தவிடத்தில் வந்திலனோ அப்பையல் என்கிறார். இருவராயிருப்பாரெல்லாரையும் தனியாக்கினானென்றேயாயிற்று இருப்பது.

ஈடு. (தி-வாய். 10. 3. 1) மயூரஸ்ய—இருவராயிருப்பாரெல்லாரையும் பிரித்தானென்றேயிருக்கிறார். மயிலினுடைய பெண்டாட்டியை ராவணன் கொண்டுபோய்த்திலனோ! வநே—திருவயோத்தியிலே வந்து பிரித்தானல்லனே, போக(ஸௌம)த்துக்கு ஏகாந்தமான காட்டிலேயிறே. ரக்ஷஸா ந ஹ்ருதா ப்ரியா—நீர்மைகேடனான அப்படுகுலைக்காரனால் பிரிக்கப்படாததிது ஒன்றுமேயாகாதே.

३. पद्मकेसरसंसृष्टो वृक्षान्तरविनिस्सृतः ।
निश्वास इव सीताया वाति वायुर्मनोहरः ॥ 1—71.

பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டோ வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத꞉ ।
நிஶ்வாஸ இவ ஸீதாயா வாதி வாயுர்மநோஹர꞉ ॥

ப-ரை. பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட꞉ = தாமரைப்பூக்களின் தாதுகளோடு சேர்ந்ததும், வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத꞉ = மரங்களின் நடுவிலிருந்து புறப்பட்டதும், ஸீதாயா꞉ நிஶ்வாஸ꞉ இவ = ஸீதையின் மூச்சுக்காற்றைப்போல, மநோஹர꞉ = மனதைக்கவருகின்றதுமான, வாயு꞉ = காற்று, வாதி = வீசுகிறது.

பெ-வ்யா. (பெரிய திருமொழி. 5. 3. 1) தூராலன அம்ஶத்தைக் கழித்து பூத்தன்னிலும் ஸம்ஸர்க்கத்துக்கு (ஸம்ஸ்ருஷ்ட) மேற்பட ஆழ இழியுமதன்றிக்கேயிருக்கை. வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத꞉—வெய்யிற்படப்பொறாத செல்வாலே சோலைக்குள்ளிட்டாய்த்து வழி போந்தது.

அரும். பத்மேத்யாதி—'பத்மஸம்ஸ்ருஷ்ட꞉' என்னாதே கேஸரபதப்ரயோகத்தாலும் அதிலும் 'ஸம்ஸ்ப்ருஷ்ட꞉' என்னாதே ஸம்ஸர்க்கமாத்ரம் சொன்னதாலும், பாஹ்யதளஸம்பந்தமின்றிக்கே (பாஹ்யதளஸம்பந்த) கேஸரங்களிலும் உள்ளில் தூள்படியும்படி ஸம்பந்தியாதே வந்ததென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார்— தூராலித்யாதி. தூரால்=ரிஜீஷம், அஸாரமென்றபடி. செல்வாலே=செல்வத்தாலே.

4. पद्मसौगन्धिकवहं शिवं शोकविनाशनम् ।
धन्या लक्ष्मण सेवन्ते पम्पोपवनमारुतम् ॥ 1—105

பத்மஸௌகந்திகவஹம் ஶிவம் ஶோகவிநாஶநம் ।
தந்யா லக்ஷ்மண ஸேவந்தே பம்போபவநமாருதம் ।

ப—ரை. லக்ஷ்மண = ஏ லக்ஷ்மணா, பத்மஸௌகந்திகவஹம் = தாமரைப் பூக்களுடையவும் செங்கழுநீர் பூக்களுடையவும் வாஸனையைக் கொண்டுவருகிறதும், ஶிவம் = மங்களகரமாயும், ஶோகவிநாஶநம் = துக்கத்தை நீக்குவதாயுமிருக்கிற, பம்போபவநமாருதம் = பம்பாஸரஸ்ஸின் கரையிலுள்ள பூங்காவுகளினின்றுவரும் காற்றை, தந்யா꞉ = பாக்கியவான்கள், ஸேவந்தே = அநுபவிக்கிறார்கள்.

பெ-வ்யா. (நாச்சியார் திருமொழி. 8. 2.) வதூஸௌகந்திகவஹ:—கலம்பகஞ்சூடுவாரைப்போலே. ஶிவ:—இதின்தன்னை நன்மையுடையாரொருவருமில்லை. இதுக்கு நன்மை என்னென்னில்—ஶோகவிநாஶந:—நம்மைசித்ரவத(ய)ம்பண்ணுது; சோகம் மறுவலிடாதபடி பண்ணும்போலேயிராநின்றது. யந்த்ராஃ—தனமுடையாராயிருப்பார் க்ஷாமத்துக்கு அஞ்சார்களிறே. ஸேவதே—அஞ்சாமையேய யன்றிக்கே, இத்தை அநுபவிக்கைக்கு ஏகாந்தமான ஸ்தலம் தேடாநிற்பர்கள். வடவாநல:—'ஆகரத்தில்நெருப்பு' என்னுமாபோலே.

ஈடு. (தி-வாய். 1,4. 7) வதூஸௌகந்திகவஹ:— கலம்பகம் சூடுவாரைப்போலே, தாமரையோடை செங்கழுநீரோடைகளிலே சென்று புக்கு, பூவிலிழியில் அதில் வெக்கைதட்டும், என்று மேலெழநின்று அரிமிதியான பரிமளத்தைக்கொய்துகொண்டுவாராநின்றது. ஶிவ:—கலபபற்றுப்பசுந்தென்றலாயிராநின்றது. அதாவது—புறம்பே சிலர்க்கு உடம்புகொடுத்துச் சுணங்கழியாதே தாய்த்தலைத்தென்றலாயிருக்கை. ஶோகவிநாஶந:—நம்மை இனி ப்ராணனோடே வைத்து நலியாதுபோலேஇருந்தது. யந்த்ராஃ—காற்று வாரா நின்றதென்றால், ஏகாந்தஸ்தலம் தேடிப்படுக்கை படுக்கிறவர்களும் சிலரே. ஶிக்ஷண ஸேவதே—இது எப்போதோ வருவதென்றிருப்பர்கள். வடவாநல:—'ஆகரத்தில் நெருப்பு' என்னுமாபோலே.

அரும். ஸௌகந்திகம்=செங்கழுநீர். கலம்பகம்=நாநாபுஷ்பங்கள்தொடுத்த நாநாவர்ணமாலை. 'அரிமிதியான' என்றது சாடு. அரியாலே வண்டாலே மிதிக்கப்பட்ட பரிமளம் என்று ஸ்வபாவார்த்தம். அரியை மிதித்த நெல் என்று சாடு. அதுபோலே ஶ்லாக்யமான பரிமளமென்றபடி. கொய்துகொண்டு=சுற்றிக்கொண்டு. ஶிவம்=ஶாந்தம். சுணங்கு, அழியாதே=தன்னதிஶயம் குன்றாதே. தாய்=ப்ரதமத்திலேயுண்டாம், தலைத்தென்றல்=ஶ்லாக்யமானதென்றல். ஶோகவிநாஶநம் என்றது முடிந்தால் ஶோகமில்லாமையாலே; முடித்துவிடுமென்றபடி. வர்த்தமாநத்துக்கு அர்த்தம்—இதெப்போதோ வித்யாதி. இதுக்கு ஸேவிதாம்ஶத்தில் பர்யாப்தியில்நோக்கு. ஆகரத்தில் நெருப்பு=படபாநலம். (வைஶ்வாநரம்)

5. शक्रचापनिभे चापे गृहीत्वा शत्रुसूदने । 3—9

ஶக்ரசாபநிபே சாபே க்ருஹீத்வா ஶத்ருஸூதநே ।

ப—ரை. ஶக்ரசாபநிபே = இந்திரன் வில்லுக்கொப்பானவைகளும், ஶத்ருஸூதநே = சத்ருக்களைக் கொல்லுபவைகளுமான, சாபே = வில்லுகளை, க்ருஹீத்வா = பிடித்துக்கொண்டு (நிற்கின்ற நீங்கள் யாவர்?)

பெ.—வ்யா. (பெரியதிருமொழி. 1. 2. 1.) உகப்பாரோடு உகவாதாரோடு வாசியற இரண்டுதிறத்தாரையும் அழிக்குமாயிற்று. ஶக்ரசாபநிபே இத்யாதி—இந்த்ரதனுஸ்ஸுபோலே அநுகூலர்க்கு வைத்த கண்மாறாதே கண்டுகொண்டிருக்கவேண்டும்படி தர்ஶநீயமாயிருக்கும். க்ருஹீத்வா—விற்பிடித்த பிடியிலே ப்ரதிகூலர் முடிந்துபோம்படியாயிருக்கும், அநுகூலரை அழகாலே அழியச்செய்யும்; ப்ரதிகூலரை அம்பாலே அழியச்செய்யும்.

அரும். 'சாபே க்ருஹீத்வா' என்றது—ஆயுதமாகையாலே விரோதிநிரஸநம் அர்த்தலப்யமாயிருக்கவும், 'சத்ருநாஶநே' என்று விஶேஷித்ததுக்கும், 'ஶக்ரசாபநிபே' என்று வர்ணிக்கைக்கும் ரிஷி கொண்டாடுகிறானென்று தாத்பர்யமருளிச்செய்கிறார்—உகப்பாரித்யாதி. ஶக்ரசாபநிபங்களான சாபங்களை சத்ருநாஶகமாம்படி க்ருஹீத்வா என்று அர்த்தம் திருவுள்ளம் பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார்—விற்பிடித்த இத்யாதி. இங்கு அநுகூலரையித்யாதி த்ருஷ்டாந்தார்த்தம்.

பெ.—வ்யா (பெரியதிருமொழி. 8. 1. 1. ) இந்த்ரதனுஸ்ஸுபோலே எங்களுக்கு ஶத்ருவான வாலியை நிரஸிக்கைக்குப் பரிகரமுமாயிருந்தது. அநுகூலர்க்கு வைத்தகண் வாங்காதே கண்டுகொண்டிருக்கவேண்டும்படியாய், ப்ரதிகூலர்பிடித்த பிடியிலே மண்ணுண்ணும்படியாயிருக்கும். அதன்றிக்கே, சாபே—வில்வலிக்கும்படியை நினைத்தால் 'ஸர்வ ஶாகாம்ருகாணாம் விதிதோ' என்னும்படியாயிருக்கும். அழகுக்கு உறுப்பாயிருக்கும் அநுகூலர்க்கு.

அரும். எடுத்த ப்ரமாணத்துக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார்—இந்த்ரேத்யாதி. கேவலம் வில்லும் கையுமாயிருக்கையே அழகாயிருக்கும்படி

யாக ஒரு தாத்பர்யமருளிச் செய்து, வில்லேரிட்டுப் பிடித்தபிடியாகத் தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார்—அநுகூலர்க்கித்யாதி.

6 आयताश्च सुवृत्ताश्च बाहवः परिघोपमाः ।
सर्वभूषणभूषार्हाः किमर्थं न विभूषिताः ॥ 3. 15.

ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச பாஹவ: பரிகோபமா: ।
ஸர்வபூஷணபூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா: ॥

ப—ரை. ஆயதா:= நீண்டவைகளும், ஸுவ்ருத்தா: ச= உருண்டவைகளும், பரிகோபமா:= இரும்புலக்கைகளுக்கு ஒப்பானவைகளும், ஸர்வபூஷணபூஷார்ஹா:= ஸகலஆபரணங்களாலும் அலங்கரிக்கப்படத்தக்கவைகளுமான, பாஹவ:= கைகள், கிமர்த்தம்= ஏன், ந விபூஷிதா:= அலங்கரிக்கப்படவில்லை.

பெ—வ்யா. (திருவிருத்தம் 44) ஆயதா:— திருவடி வந்த கார்யத்தை மறந்து கவிபாடத்தொடங்கினான்; வந்த கார்யம் முடிந்ததென்று அறிந்தான் அத்தோள்களைக் கண்டபோதே. ஆயதா:—ஆஜாநுபாஹு, திருமுழந்தாளளவும் நீண்டு பின்னையும் முடியாதிருக்கை. பாஹவ:—'ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:' என்கிறபடியே. ஸர்வபூஷண பூஷார்ஹா:— அழகிழந்து கிடக்கிற ஆபரணங்களை அலங்கரியாதொழிகிறதென்? கிமர்த்தம் ந விபூஷிதா:—இவ்வாபரணங்களின் எழிலைக் கழற்றியிட்டு வைக்கிறதென்? ராஜாக்கள் வெற்றிலை விலக்குதல் பால்குடியோமென்னுதல் செய்வார்கள், 'இன்ன கோட்டையழித்தாலன்றி' என்று திரிவாரைப்போலே. ஒன்றுமறியாதே காட்டிலே திரியக்கடவ குரங்குகளுக்கும் அநுபவிக்கும்படி பெருக்காறுபோலே இவ்வெறும் புறத்திலழகைக் கொள்ளையூட்டிக் கொள்ளுகிறதென்?

அரும்—'பரிகோபமா:' என்றதுக்குத் தாத்பர்யம்—வந்தகார்யம் என்று. 'பாஹவ:' என்ற பஹுவசநத்துக்குத் தாத்பர்யம்—' ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:' என்று. அதாவது—இளையபெருமாள் இவர்க்கு அவயவபூதராகையாலே இளையபெருமாள் தோளையும் கூட்டி யருளிச்செய்கிறாரென்றபடி.

ஸர்வபூஷணங்களையும் பூஷிக்க அர்ஹங்களென்கிற அர்த்தத்தை அருளிச் செய்கிறார்—அழகிழந்தித்யாதி. ஸர்வபூஷணாநி பூஷயிதும் அர்ஹா: என்று வ்யுத்பத்தி கண்டுகொள்வது. ஆபரணங்கள் திருத்தோள்களோடே கூடி யிருந்தால் அழகு பெற்றிருக்கும், பிரிந்தால் அழகழிந்து கிடக்குமென்றப டி. 'கிமர்த்தம் ந விபூஷிதா:' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்—ராஜாக்கள் வெற்றிலை விலக்குதல், பால் குடியோமென்னுதல் செய்வார்கள், இன்ன கோட்டை அழித்தாலன்றி என்றிருக்குமாபோலே, சிஷிகள் விரோதிக ளைப் போக்கினலொழிய ஆபரணங்களை அணியவொண்ணாது என்று இரு க்கிறதோ என்னுதல், அதவா திர்யக்கான என்னை வஶீகரிக்கைக்கு ஆபர ணங்களாலே ஆச்சாதி( ஆச்சாதி )யாதே அழகெல்லாம் காட்டவேணுமெ ன்றோ என்னுதல். இவ்விரண்டையுமருளிச் செய்கிறார்—ராஜாக்களித்யாதி. ராவணவதம் பண்ணுமளவோ, எங்களை அநுபவிப்பிக்கைக்காகவோ? எது நிமித்தமாகப் பூணுதிருக்கிறதென்றபடி.

७. नानृग्वेदविनीतस्य नायजुर्वेदधारिणः ।
नासामवेदविदुषः शक्यमेवं प्रभाषितुम् ॥ 3. 29

நாந்ருக்3வேத3விநீதஸ்ய நாயஜுர்வேத3தா4ரிண: ।
நாஸாமவேத3விது3ஷ: ஶக்யமேவம் ப்ரபா4ஷிதும் ॥

ப-ரை. அந்ருக்3வேத3விநீதஸ்ய = ரிக்குவேதத்தில் பயிற்சி பெருதவனுக்கு, ஏவம் = இம்மாதிரி, ப்ரபா4ஷிதும் = அழகாய்ப் பேச, ந ஶக்யம் = முடியாது. அயஜுர்வேத3தா4ரிண: = எஜுர் வேதத்தை நெஞ்சுள் நிறுத்தாதவனுக்கு, ஏவம் ப்ரபா4ஷிதும் ந ஶக்யம் = இவ்வாறு அழகாகப் பேச முடியாது. அஸாமவேத3 விது3ஷ: = ஸாமவேதமறியாதவனுக்கு, ஏவம் ப்ரபா4ஷிதும் ந ஶக்யம் = இவ்வண்ணம் அழகாய்ப் பேச முடியாது.

பெ-வ்யா. (பெரியதிருமொழி. ௩. 1. 1.) நாந்ருக்3வேத3வி நீதஸ்ய—அநுஷ்டேயார்த்தப்ரகாஶகமான ரிக்வேதம் ஶிக்ஷிதனானவனுக்கல்லது இப்படி வார்த்தை சொல்லவொண்ணாது. நாயஜுர்வேத3தா4ரிண:—யஜுர்வேதம் பாடதாரண(வாயோரணம்)ந்தானே அரிது; அத்தைத்தரித்தவனுக்கல்லது இவ்வார்த்தை சொல்லவொண்ணாது. நாஸாமவேத3விது3ஷ:—ஸாமவேதம் கான

(ஞாந)விஶேஷங்களறிய அரிது; அதறிந்தவனுக்கல்லது இப்படி வார்த்தை சொல்ல முடியாது ஶக்யமேவம் வ்யாஹர்தும்—இத்தை எல்லாவற்றையும் அதி(சயி)கரித்தவனுக்கல்லது நம்முன்னே இப்படி வார்த்தை சொல்லலாமோ?

8. अहमस्यावरो भ्राता गुणैर्दास्यमुपागतः ॥ 4. II.

அஹமஸ்யாவரோ ப்⁴ராதா கு³ணைர்தா³ஸ்யமுபாக³த: ॥

பதவுரை. அஹம் = நான், அஸ்ய = இவருக்கு, அவர: = பின்பிறந்த, ப்⁴ராதா = ஸஹோதரன், கு³ணை: = குணங்களாலே (குணங்களுக்கீடுபட்டு) தா³ஸ்யம் = தாஸனாயிருக்குமவை, உபாக³த: = அடைந்தவன்.

ஈடு. (திருவாய் 1. 1. 1.) இளையபெருமாளை 'நீர் இவர்க்கு என்ன ஆவீர்' என்ன, 'பெருமாளுமொருபடி நினைத்திருப்பர், நானுமொருபடி நினைத்திருப்பேன்' என்றார். 'அவர் நினைத்திருக்கும்படி என்? நீர் நினைத்திருக்கும்படி என்? என்ன, 'அவர் தன் பின் பிறந்தவனென்றிருப்பர்; நான் அவர் குணங்களுக்குத் தோற்று அடியேனாயிருப்பன்' என்றாரிறே.

அரும். 'நீரிவர்க்கென்னாவீரென்ன' என்றதுக்கு 'ராஜ்யாத்ப்ரஷ்டேந வநே வஸ்தும் மயா ஸார்த்தமிஹாகத:. பார்யயா ச மஹாதேஜாஸ்ஸீதயாநுகதோ வஶீ' என்கிறபடியே, பித்ருவசநத்தாலே அவர் வந்தார், பார்யையாகையாலே பிராட்டி வந்தாள், இரண்டுநிமித்தமுமின்றிக்கேயிருக்க, 'மயா ஸார்த்தம்' என்று நீர் வந்தவிதுக்கு நிமித்தபூத ஸம்பந்தமேதென்று தாத்பர்யம். ப்ராத்ருத்வமாவது—தோள்தீண்டியான ஆகாரம். தாஸத்வமாவது—க்ரயவிக்ரயார்ஹத்வம். ஒருவனுக்கே விஷயத்தைக்குறித்து இந்த உத்கர்ஷாபகர்ஷரூப ப்ராத்ருத்வ தாஸத்வபுத்திகள் விருத்தங்களாகையாலே பிந்நபுத்த்யதீநங்களாக அருளிச்செய்கிறார்— 'பெருமாளுமித்யாதி. ஏதந்நியாமகம்—யதி ப்ரீதிர் மஹாராஜ யத்யநுக்ராஹ்யதா மயி' என்றது. ப்ரீதி ப்ராத்ருத்வ நிபந்தநம். அநுக்ராஹ்யதை தாஸத்வ நிபந்தநம். 'அஸ்ய அவரோ ப்ராதா அஹம் குணை: தாஸ்யம் உபாகத:' என்று ஶப்தநிர்வாஹம் என்று பிள்ளை அருளிச்செய்வர்.

9. लोकनाथः पुरा भूत्वा सुग्रीवं नाथमिच्छति। 4—18.
லோகநாத²: புரா பூ⁴த்வா ஸுக்³ரீவம் நாத²மிச்ச²தி।

ப—ரை. புரா= முன்பு, லோகநாத²:= உலகத்திற்கு நாதனாய், பூ⁴த்வா= இருந்துவிட்டு(இப்பொழுது) ஸுக்³ரீவம்= ஸுக்ரீவனை, நாத²ம்= நாதனாக, இச்ச²தி= விரும்புகிறார்.

பெ-வ்யா. (நாச்சியார் திருமொழி 11-6) லோகநாத²: புராபூ⁴த்வா—லோகநாதனை விது மஹாராஜர் பக்கல் பாரதந்த்ர்யத்துக்கு குருகுலவாஸப்பண்ணினபடி. இப்பாரதந்த்ர்யம் குணமாகைக்கு வேண்டும் ஸ்வாதந்த்ர்யமேயாய்த்து உள்ளது. எளியவன் தாழநின்றால் அது குணமாகாதிறே. இச்ச²தி—எல்லாரும் தந்தாமுக்கு இல்லாத்ததை ஆசைப்படுமித்தனையிறே.

10. निवासवृक्षः साधूनामापन्नानां परा गतिः।
आर्तानां संश्रयश्चैव यशसश्चैकभाजनम्॥ 15. 19.

நிவாஸவ்ருக்ஷ: ஸாதூ⁴நாமாபந்நாநாம் பரா க³தி:।
ஆர்தாநாம் ஸம்ஶ்ரயஶ்சைவ யஶஸஶ்சைகபா⁴ஜநம்॥

ப—ரை. (ராமன்) ஸாதூ⁴நாம்—ஸாதுக்களுக்கு, நிவாஸவ்ருக்ஷ:— தங்கும் மரம்; ஆபந்நாநாம்—தன்னை ஶரணமாக அடைந்தவர்களுக்கு, பரா—மேலான, க³தி:— அடையவேண்டிய இடம்; அல்லது காரியத்தை நிறைவேற்றிக் கொடுக்கிறவர்; ஆர்தாநாம்— கஷ்டப்படுவோருக்கு, ஸம்ஶ்ரய: ச ஏவ— புகலிடமாயுமிருப்பவர்; யஶஸ:— கீர்த்திக்கு, ஏகபா⁴ஜநம் ச— ஒரே இருப்பிடமாயுமிருப்பவர்.

பெ-வ்யா. (திருவிருத்தம். 58.) வாலிக்கு 'ஸுக்ரீவனோடே நீ விரோதிக்கை கார்யமல்ல காண். அங்கதப்பெருமாள் காட்டிலே விளையாடப்போனவிடத்திலே, அவனுக்கு ஓர் அபாஶ்ரயமுண்டாகக் கேட்டுவந்து சொன்னான் காண்' என்ன, 'அபாஶ்ரயமாகிறவர்தாம் ஆர்?' என்ன, பெருமாளென்றாள். ஆனால் அவர்பின்னை

நமக்கு அபாஸ்ரயமாகமாட்டாரோ’ என்ன, சொல்லுகிறாள்— நிவாஸவ்ருக்ஷ: ஸாதூநாம்—இந்நிழலிலே ஒதுங்குவோமென்பார்க்கு நிழலாய்க் காண் இருப்பது. பூவாயும் பழமாயும் நிழலாயும் தான் வெய்யிலைச் சுமந்தும் பிறர்க்கு இடம் கொடுத்தும் தன்கீழே இருந்து தன்னை அழியச்செய்ய நினைப்பார்க்கு பலப்ரத([illegible])மாயும் இவையெல்லாம் உண்டிறே அதுக்கு. நான் தான் அவர்க்கு ஏதேனும் அநிஷ்டமுண்டோ செய்தது? நமக்கு ஒதுங்க நிழலாகத் தட்டென்! என்ன—ஆபந்நாநாம் பரா கதி:—ஒதுங்கோமென்னுமை போராது காண். ஆபந்நராகவும் வேணும் காண். நான்தான் ஆபந்நனன்றோ, உடன்பிறந்தவன் ஶத்ருவாம்படியன்றோ நம்முடைய நிலை’ என்ன—ஆர்த்தாநாம்—ஆபந்நராயிருக்கவே அமையாது காண்; ஆபத்தை இசையவும் வேணும் காண். நமக்கு ஒரு ரக்ஷகன் வேணுமென்றிருக்கவேணும் காண் என்ன, ‘இவர் அவனுக்கே புகலாய் நின்றாராகில் நமக்குமிப்படியிருப்பான் ஒரு அபாஸ்ரயத்தைத் தேடிக்கொள்ளுகிறோம்’ என்ன, யஶஸஶ்சைக பாஜநம்—இனி இங்ஙனிருப்பதொரு நிழலில்லைகாண் ஒதுங்க. நாலுவகையாலே மூன்று அதிகாரிகளை ஸ்ரீகீதையிலே சொல்லிற்றிறே. அவர்களைச்சொல்லுகிறது இதில். ஒரு ஸ்த்ரீவசனமாயிருக்க, இதுக்கு இத்தனை கருத்து உண்டாகவற்றோவென்னில், வேதோபப்ருஂஹணார்த்தமாக ப்ரவ்ருத்தமான ப்ரபந்தமாகையாலே. கோல்விழுக்காட்டாலே அவையும் ஸம்பவிக்குமிறே. ‘ஏகபக்திர்விஶிஷ்யதே’ என்கிற ஜ்ஞாநியைச்சொல்லுகிறதாய், முந்துற ஸம்ஸாரத்திலே நொந்து ப்ரக்ருதி ஸம்பந்தத்தை அறுத்துக்கொள்ளவேணுமென்றிருக்கிற ஆத்மப்ராப்திகாமனையாய், அநந்தரம் ப்ரஷ்டைச்வர்ய(ஐஶ்வர்ய)காமனையாய், இது ப்ரத(ம)மாக ஐச்வர்யத்தைப் பெறவிருக்குமவனுக்கும் உபலக்ஷணமாயிருக்கிறது.

அநும்—இது தாரை வாலியைக் குறித்துச் சொல்லுகிற வார்த்தை. ‘வாஸவ்ருக்ஷ:’ என்னாதே, ‘நி’ என்கிற உபஸர்க்கத்தாலே தா[யா]ரகபோஷகபோக்ய(போக்ய)ங்களுக்கு அவ்வருகு போகவொட்டாத மரமென்று தோன்று

மென்று அவற்றை அருளிச்செய்கிறார்—பூவாயுமித்யாதி. பூ—போக்யம், பழம்-தாரகம், நிழல்-போஷகம். வ்ருக்ஷபதத்தாலே பலித்ததென்னவுமாம். அழியச்செய்கை=கல்லையெறிகை. தார்ஷ்டாந்திகத்தில் 'நீ எனக்கும் பிள்ளையாகவேணும், யுத்தம்பண்ணி எங்களை ரக்ஷிக்கவேணும்' என்றாலும், தன்னை அழியமாறி ரக்ஷிக்கையைச்சொல்லுகிறது. ஒதுங்கோமென்னுமை= ஒதுங்கவில்லை என்று சொல்லாமை. அதவா, ஒதுங்குவோமென்ற மாத்ரம் போராதென்றபடி. தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார்—நாலுவகையாலேயித்யாதி. 'ஸாதூநாம்' என்று ஜ்ஞாநியையும், 'ஆபந்நாநாம்' என்று கேவலரையும், 'ஆர்த்தர்நாம்' என்று த்விவித(த்விவித)மான ஐஶ்வர்யார்த்திகளையும் சொல்லுகிறது.

11 अवष्टभ्य च तिष्ठन्तं ददर्श धनुरूर्जितम् ।
रामं रामानुजं चैव भर्तुश्चैवानुजं शुभा ॥ 19. 26.

அவஷ்டப்ய ச திஷ்டந்தம் ததர்ஶ தநுரூர்ஜிதம் ।
ராமம் ராமாநுஜம் சைவ பர்துஶ்சைவாநுஜம் ஶுபா ॥

ப-ரை. ஊர்ஜிதம் = கம்பீரமான், தநு: = வில்லை, அவஷ்டப்ய = பிடித்துக்கொண்டு (வில்லை ஊன்றி அதில் சாய்ந்துகொண்டு) திஷ்டந்தம் = நிற்கின்ற, ராமம் ச = ராமனையும், ராமாநுஜம் ச ஏவ = லக்ஷ்மணனையும், பர்து: = தன்பர்த்தாவின், அநுஜம் ச ஏவ = தம்பியாகிய ஸுக்ரீவனையும், ஶுபா = நல்லெண்ணமுள்ள தாரை, ததர்ஶ = கண்டாள்.

ஈடு (தி-வாய். 5. 10. 6.) வாலிவதம்பண்ணிக் கையும் வில்லுமாய்க் கொண்டு வென்றிபுனைந்து நின்ற பெருமாளையும், அவரை இடுவித்துக் கொல்லுவித்த தம்பியாரையும், இருவரையும் அநுவர்த்தித்து முடிசூடவிருக்கிற மஹாராஜரையும் கண்ட இவள், நமக்கு ஶத்ருக்கள் என்றிருமே ஶுபஹ்ருதயை ஆனாள் அவர் பக்கல் சாங்கத்தாலே. இனித்தான் தண்ணீர் குடிக்கக் கல்லின ஏரியிலே கல்லைக் கட்டிக்கொண்டு விழுந்து முடிந்துபோவாரைப்போலே ஆஸுர ப்ரக்ருதியன்னவாறே முடிந்துபோனான் வாலி. இவர் செய்த குற்றமுண்டோ வென்றிருந்தாள். அவர் தம்முயிர்நிலையிலே நலிந்தாரை விட்டு வைப்பாரோ.

அரும்—அவரை இடுவித்துக் கொல்லுகையாவது—புருஷகாரபூதராயிருக்கை. சாங்கம்=பக்ஷபாதமும், வில்லும். கீழ்க் கையும் வில்லுமான அழகைக் கண்டு சாங்கத்தாலே ஸுபஹ்ருதயை ஆனுளென்று அருளிச்செய்து, ஆஸ்ரித பக்ஷபாத குணஸந்தானத்தாலே ஸுபஹ்ருதயை ஆனுளென்று பாவாந்தரம்—இனித்தானித்யாதி.

ஈடு. (தி-வாய். 6. 9. 3.) தன்பர்த்தாவைக்கொன்ற பெருமாளை 'தப்பச்செய்தீரே' என்கையன்றிக்கே, இவாது குற்றமுண்டோ. தம்மை ஆஸ்ரயித்தவர்கள்விரோதிபோக்கத்தவிர்வர்களோ. இவனும் அநுகூலித்தானுகில் ரக்ஷியாரோ. தண்ணீர்குடிக்கக் கல்லின ஏரியிலே தலைகீழதாக விழுந்து சாவாரைப்போலே தன்குற்றத்தாலே கெட்டானத்தனை கிடீரென்றுளிறே.

12. निस्वनं चक्रवाकाणां निशम्य सहचारिणाम् ।
पुण्डरीकपलाशाक्षी कथमेषा भविष्यति ॥ 30. 10.

நிஸ்வநம் சக்ரவாகாணாம் நிஸம்ய ஸஹசாரிணாம் ।
புண்டரீகபலாஸாக்ஷீ கதமேஷா பவிஷ்யதி ॥

ப—ரை. புண்டரீகபலாஸாக்ஷீ = தாமரை யிதழ்போன்றகண்ணையுடைய, ஏஷா = இந்த ஸீதை, ஸஹசாரிணாம் = கூட ஸஞ்சரிக்கின்ற (பிரியாத) சக்ரவாகாணாம் = சக்ரவாகப்பறவைகளுடைய (ஆண்பெண்களுடைய) நிஸ்வநம் = தொனியை, நிஸம்ய = கேட்டு, கதம் பவிஷ்யதி = எப்படியிருக்கப்போகிருளோ.

பெ-வ்யா. (திருவிருத்தம் 51.) நிஸ்வநம் சக்ரவாகாணாம்—பிரிவிலேயாகையாலே அவற்றின்பேச்சு அஸஹ்யமானபடி. ஸஹசாரிணாம்—பூர்வாவஸ்த்தையில் அவற்றைப்போலே அகலிகதாமும். புண்டரீகபலாஸாக்ஷீ—இவள்போலே அவற்றின் ஸப்தம் செவிவழியே குளிக்கப் புக்கவாறே வெளுக்கவிழித்த விழியிருந்தபடி.

அரும். 'பூர்வாவஸ்த்தையில்' என்றது வ்யாக்யாதாவின் ஈடுபாடு. 'புண்டரீகம் விதாம்போஜம்' என்றத்தை உட்கொண்டு அருளிச்செய்கிருர்—செவீத்யாதி.

13. कृतापराधस्य हि ते नान्यत्पश्याम्यहं क्षमम् ।
अन्तरेणाञ्जलिं बद्ध्वा लक्ष्मणस्य प्रसादनात् ॥ 32. 17.

க்ருதாபராதஸ்ய ஹி தே நாந்யத்பஶ்யாம்யஹம் க்ஷமம் ।
அந்தரேணாஞ்ஜலிம் பத்த்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத் ॥

ப-ரை. க்ருதாபராதஸ்ய = குற்றம் செய்த, தே ஹி = உனக்கோ, அஞ்ஜலிம் பத்த்வா = கைகூப்பிக்கொண்டு, லக்ஷ்மணஸ்ய = லக்ஷ்மணனை, ப்ரஸாதநாத் அந்தரேண = நன்மைப்படுத்திக்கொள்வதைத்தவிர்த்து, அந்யத் = வேறொன்றை, க்ஷமம் = யுக்தமாக, அஹம் = நான், ந பஶ்யாமி = காணவில்லை (நினைக்கவில்லை.)

ஈடு. (தி. வாய். 1. 1. 5.) இளையபெருமாளுடைய ஜ்யாகோ (கொ)ஷத்தைக் கேட்டு மஹாராஜர் கழுத்தில் மாலையை அறுத்துப் பொகட்டுக் காபேயமாய்ச் சிலவ்யாபாரங்களைப்பண்ணி அருகேநின்ற திருவடியைப்பார்த்து 'இவ்வளவில் நமக்குச் செய்யப்படுவது என்?' என்ன, 'அபராதகாலத்திலே அநுதாபம் பிறந்து மீண்டோமாய் எளியன சில செய்கிறோமல்லோம். தீரக்கழிய அபராதம் பண்ணினபின்பு இனி ஓரஞ்ஜலி நேராமல் போகாது' என்றானிறே,

14. सा प्रस्खलन्ती मदविह्वलाक्षी प्रलम्बकाञ्चीगुणहेमसूत्रा ।
सलक्षणा लक्ष्मणसंनिधानं जगाम तारा नमिताङ्गयष्टिः ॥ 33. 38.

ஸா ப்ரஸ்கலந்தீ மதவிஹ்வலாக்ஷீ ப்ரலம்பகாஞ்சீகுணஹேமஸூத்ரா । ஸலக்ஷணா லக்ஷ்மணஸம்நிதாநம் ஜகாம தாரா நமிதாங்கயஷ்டி: ॥

ப-ரை. ஸா = அந்த, தாரா = தாரையானவள், ப்ரஸ்கலந்தீ = கால் தடுமாறினவளாய், மதவிஹ்வலாக்ஷீ = மதத்தால் சுழல்கின்ற கண்ணையுடையவளாய், ப்ரலம்பகாஞ்சீகுணஹேமஸூத்ரா = நழுவித் தொங்குகின்ற அரைநூல்மாலையின் தங்க வடங்

களையுடையவளாய், ஸலக்ஷணா = லக்ஷணமுள்ளவளாய், நமிதாங்கயஷ்டி: = சரிந்த அவயவங்களையுடையவளாய், லக்ஷ்மணஸந்நிதாநம் = லக்ஷ்மணனின் ஸமீபத்தை, ஜகாம = அடைந்தாள்.

ஈடு.(தி-வாய் I.4.3.) ஸா—ஒரு கலவியும் பிரிவும் வேண்டாத படியான நடையழகையுடையவள். ப்ரஸ்கலந்தீ—ஸம்ஶ்லேஷத்தாலுண்டான துவட்சியாலே தடுமாறி அடிமேலடியாக இட்டுவந்தாள். மதவிஹ்வலாக்ஷீ—மதுபானாதிகளாலே தழுதழுத்த நோக்கையுடையவளாயிருந்தாள். ப்ரலம்பகாஞ்சீகுணஹேமஸூத்ரா—அரைநூல்வடம் இழுப்புண்டு வரும்படி படுக்கையில் கிடந்தபடியே பேணாதேவந்தாள். ஸலக்ஷணா—ஸம்போகசிஹ்னங்கள் காணலாம்படி வந்தாள். லக்ஷ்மணஸந்நிதாநம் ஜகாம—'தாய்க்கு ஒளிப்பதுண்டோ' என்று புறப்பட்டு வந்தாள். தாரா—தாரையானவள். 'இளையபெருமாள் சிவிட்கு எத்தாலேயாற்றலாம்' என்று மஹாராஜரும் திருவடியுமாக விசாரித்து, 'வேறொன்றாலாற்றுமதல்ல; தாரையை விட்டாற்றவேணும்' என்று தாரையை வரவிட்டார்கள். நமிதாங்கயஷ்டி:—உருகுபதத்திலே வளைந்தவை நிமிர்க்கவொண்ணாதாப்போலே இத்துவட்சி நிரூபகமிவளுக்கென்று தோற்றும்படியிருந்தாள்.

அரும். ஒரு கலவியுமித்யாதிக்கு பாவம்—கலவியாலுண்டான அழகேயன்றிக்கே வெறும்புறத்திலும் ஆகர்ஷகமான நடையழகையுடையவளென்றபடி. பிரிவும் வேண்டாதபடி என்றது—வார்த்தைப்பாடு. தழுதழுத்த=கலங்கின. ஸம்போகசிஹ்னங்களோடே பரபுருஷஸமீபத்திலே வரலாமோ என்ன—தாய்க்கித்யாதி. 'லக்ஷ்மணஸந்நிதானம்' என்று சொன்ன வால்மீகிக்கு இதிறே கருத்தென்று திருவுள்ளம். 'தாரா ஜகாம' என்று ஸ்த்ரீக்கு ஸ்வாதந்த்ர்யம் வரலாமோ என்ன—இளையபெருமாளித்யாதி. இங்கு ரஸோக்தி. சிவிட்கு=கோபமும், உஷ்ணமும், சுளுக்கும். தாரை=தைலதா(யா)ரை சாடுவில். உருகுபதம்=ம்ருதுபக்வம். துவட்சி=நம்ரதை.

15. किं कोपमूलं मनुजेन्द्रपुत्र कस्ते न संतिष्ठति वाङ्निदेशे। 33.41

கிம் கோபமூலம் மநுஜேந்த்ரபுத்ர கஸ்தே ந ஸந்திஷ்டதி வாங்நிதேசே ।

ப-ரை. ராஜபுத்ர — ராஜகுமாரனாகிய லக்ஷ்மணா, (தே — உமக்கு,) கோபகாரணம் — கோபம் வரக்காரணம், கிம் — என்ன? தே — உம்முடைய, வாக்யநிதேசே — வாயுத்தரவில், க: — எவன், ந ஸம்திஷ்டதி — நிற்கிறதில்லை.

ஈடு. (தி-வாய். 1-4-7.) கிம் கோபகாரணம்—ராஜபுத்ரர்களை நாலுமாஸம் மின்னுக்கும் இடிக்கும் இறையாக்கி தாங்கள் போக (ஹோம) ப்ரவணராயிருந்தவற்றை யொன்றையும் புத்தி பண்ணாதே, உம்முடைய கோபத்துககு அடியென்ன என்றானிறே அவர்கள் பொறையை நினைத்திருந்த கனத்தாலே. ராஜபுத்ர —அறுபதினாயிரமாண்டு, செய்தார் செய்த குற்றங்களையும் பொறுத்துச் சேரவிட்டு ஆண்டுகொண்டு போந்தான் உங்கள் தமப்பனார். அவன் வயிற்றிலே பிறந்து குற்றம் செய்தோமென்று தலையறுக்கவந்து நின்றீர் நீர். அழகியதாயிருந்தது உம்முடைய போக்கு. கஸ்தே ந ஸம்திஷ்டதி வாக்யநிதேசே—ஶாஸ்த்ரவஶ்யமன்றிக்கே கண்டதிலே கடுக சாபலத்தைப் பண்ணி மீளமாட்டாத திர்யக்குகளை நீரே 'இழந்த போகங்களை புஜிப்பது' என்று சேர்த்துவிட்டு, நீர் சொல்லிற்று செய்தனவென்று தலையறுக்கவந்து நின்றீர். இப்படி சொல்லலாம்படியிறே இவர் பொறை இருப்பது.

அரும். போக்கு—வ்யாபாரம். ப்ரத்யுத ப்ரீதிமூலமே உள்ளதென்கிறுள்—கஸ்தே இத்யாதி. ப்ரதிஜ்ஞாகாலாதிக்ரமத்திலும் 'கஸ்தே' என்றதுக்கு கருத்தென்னென்ன—ஶாஸ்த்ரேத்யாதி. காலாதிக்ரமம் உம்முடைய நியமனத்தாலே வந்ததென்றபடி.

கிஷ்கிந்தாகாண்டம் முற்றிற்று



॥ ஸ்ரீ: ॥

# ॥ ஸுந்தரகாண்டம் ॥



1. अव्यक्तरेखामिव चन्द्ररेखां पांसुप्रदिग्धामिव हेमरेखाम् ।
क्षतप्ररूढामिव बाणरेखां वायुप्रभिन्नामिव मेघरेखाम् ॥ 5. 26.

அவ்யக்தரேகாமிவ சந்த்ரரேகாம் பாம்ஸுப்ரதிக்தாமிவ ஹேமரேகாம் । க்ஷதப்ரரூடாமிவ பாணரேகாம் வாயுப்ரபின்னாமிவ மேகரேகாம் ॥

ப—ரை. அவ்யக்தரேகாம் = ஒளிமங்கியிருக்கிற, சந்த்ரரேகாம் இவ = சந்திரக்கலையைப் போன்றவளும், பாம்ஸுப்ரதிக்தாம் = புழுதிபடிந்த, ஹேமரேகாம் இவ = தங்கசலாகையைப் போன்றவளும், க்ஷதப்ரரூடாம் = காயம்பட்டவிடத்தில் சதை வளர்ந்து மேல்புறம் மூடிப்போன, பாணரேகாம் இவ = அம்பு பாய்ந்து கீறியவழியைப்போன்றவளும், வாயுப்ரபின்னாம் = காற்றினால் துண்டாடப்பட்ட, மேகரேகாம் இவ = மேகவரிசையைப்போன்றவளுமான, (ஸீதாம் = ஸீதையை, அபஶ்யத் = ஹநுமான் கண்டான்.)

ஈடு. (தி—வாய்—2. 1. 6. ) அவ்யக்தரேகாமிவ சந்த்ரரேகாம்—போய்த் தேய்ந்தற்றபடிக்கும் வைவர்ண்யத்துக்கும் நித(ர்)ஶநமாகச் சொல்லுகிறது. பாம்ஸுப்ரதிக்தாமிவ ஹேமரேகாம்—'நற்சரக்குக்கு வந்த அழுக்கு' என்று தோற்றவிருந்தாள். க்ஷதப்ரரூடாமிவ பாணரேகாம்—அம்புவாய் உள்ளே கிடக்கப் புறம்பே ஸமாதாநம் பண்ணினாற் போலே 'அகவாயில் இழவு பெரிது' என்று தோற்றவிருந்தாள். வாயுப்ரஹதாமிவ மேகரேகாம்—பெருங்காற்றாலே சிதறஅடியுண்டமேகஶகலம்போலேஇருந்தாள்.

அரும்.போய்த்தேய்ந்தற்றவென்றது--மிகவும் தேய்ந்தற்றவென்றபடி. 'சந்த்ரலேகாம்' என்பது க்ஷீணனாய் கலாமாத்ராவஶிஷ்டனான சந்த்ரனைச் சொல்லிற்றிறே. சந்த்ரலேகை என்று தோன்றுகிறதில்லை வைவர்ண்ய

த்தாலே என்றபடி. மேகவிசேஷஸம்ஸர்க்காதிகளாலே காதாசித்கமாக விவர்ணமாகத்தோற்றுமிறே. க்ஷதேத்யாதி. க்ஷதே ஸதி ப்ரரூடாம் பாணலேகாம் என்றபடி. க்ஷதமென்பது க்ஷதஸாதனமான அம்புத்தாரையைச் சொல்லிற்று என்றாக்கி, அம்புவாய் உள்ளேகிடக்கவென்கிறார். பாணலேகை= அம்புபட்டவடு. அன்றிக்கே, க்ஷதமென்று அம்புபட்ட வ்ரணமென்றுமாம். இந்த பக்ஷத்தில் அம்புவாயென்றது அம்புபட்டவ்ரணமென்றபடி. அம்புவாய் உள்ளே கிடக்க, ப்ரரூடமாய் மேலே ஸமாதானம் பண்ணப்பட்ட, பாணலேகை உண்டு பாணம் போனவழி என்றபடி. உபரி த்வசா ஸமாஹிதபாணவ்ரணவத் இத்யர்த்த:. அத்ர க்ஷதஶப்தேந ராவணோக்ததுர்வசநசதாயாத வ்யஸநம் உச்யதே. 'தீயினாற்சுட்ட புண்ணுறுமாறாதே நாவினாற்சுட்ட வடு' இதி வதந்தி. வாயுவித்யாதி. வாயுஸ்தாநீயோ ராவண:, மேகஸ்தாநீய: ஸீதாவிசிஷ்டோ ராம:. பெருங்காற்றாலேயித்யாதி. 'பெருமாளுடைய திருமேனியிற் பிரிக்கப்பட்ட ஏகதேஶம்' என்று தோற்றவிருந்தாளென்றபடி.

2· बभूव बुद्धिस्तु हरीश्वरस्य यदीदृशी राघवधर्मपत्नी ।
इमा यथा राक्षसराजभार्याः सुजातमस्येति हि साधुबुद्धेः॥ 9, 13.

பபூவ புத்திஸ்து ஹரீஶ்வரஸ்ய யதீத்ருஶீ ராகவ
தர்மபத்நீ । இமா யதா ராக்ஷஸராஜபார்யா: ஸு
ஜாதமஸ்யேதி ஹி ஸாதுபுத்தே: ॥

ப—ரை. இமா:= இந்த, ராக்ஷஸராஜபார்யா:= ராவணனுடைய பத்நிகள், யதா= எப்படி, (இருக்கிறார்களோ) ஈத்ருஶீ= இப்படிப்பட்டவளாக, ராகவதர்மபத்நீ= ஸீதை, யதி= இருந்தால், அஸ்ய= இந்த ராவணனுக்கு, ஸுஜாதம் ஹி= க்ஷேமமன்றோ, இதி= என்று, ஸாதுபுத்தே:= நற்புத்தியுள்ள, ஹரீஶ்வரஸ்ய= ஹநுமானுக்கு, புத்தி: து= எண்ணமும், பபூவ= உண்டாயிற்று.

ஈடு (தி—வாய். 2. 9. 10) பபூவபுத்திஸ்து ஹரீஶ்வரஸ்ய—ராவணனும் ஸ்த்ரீகளுமாயிருக்கிற இருப்பைக் கண்டவாறே, தானுமொரு ஸமுதாயத்துக்குக் கடவனாகையாலே இங்ஙனேயிருப்பதொரு புத்தி பிறந்தது. யதீத்ருஶீ த்ருஷ்டி—மையல், தா

னும் ஸ்த்ரீகளுமாயிருக்கிற இருப்பைப் பெருமாளும் பிராட்டியுமாயிருக்க ஸம்வதி(ஷி)த்தானாகில், இந்த ஐச்வர்யம் குலையாதிருக்கலாயிற்று கிடீர். ஸாபராதேஷ்வபி:– 'சத்ருக்களுக்கும் நன்மை வேணும்' என்றிருக்கும் புத்தியையுடையவனுக்கு.

அரும். ஹரீச்வரஸப்த துஸப்தயோ: அர்த்தமாஹ——ராவணனுமித்யாதி. துஸப்த: சார்த்தே.

3. सपङ्कामनलङ्कारां विपद्मामिव पद्मिनीम् ॥ 15. 20·

ஸபங்காமநலங்காராம் விபத்மாமிவ பத்மிநீம் ॥

ப–ரை. ஸபங்காம் = அழுக்குப்படிந்தவளும், அநலங்காராம் = அலங்காரமற்றவளும், விபத்மாம் = தாமரைப்பூக்களில்லாத, பத்மிநீம் இவ = தாமரைப் பொய்கையைப்போன்றவளுமாகிய (ஸீதையை ஹநுமான் கண்டான்)

ஈடு ( தி–வாய். 2. I. 6. ) ஸபங்காம்——பூமியில் நின்றும் தோற்றினபோதுபோலேயிருந்தாள். அநலங்காராம்——அத்தைகை அழித்து ஒப்பிக்குமவர் அஸந்நிதியாலே ஒப்பனையழிந்திருந்தாள். விபத்மாமிவ பத்மிநீம்– 'பெருமாள் வந்தாலும் இவ்வாச்ரயத்தை உண்டாக்கவொண்ணாது' என்னும்படி முதலிலே தாமரை குடிபோன பொய்கைபோலே இருந்தாள்.

அரும். லங்கையிலேயிருந்தபோது பெருமாளைப் பிரிந்து திருமேனியெல்லாம் புழுதி படிந்து, அதுக்கு மேலே கண்ணநீருமாய், நனைந்தவிடமும் நனையாதவிடமுமாயிருக்கையாலே 'ஸபங்காம்' என்று விவக்ஷித்து, அதுக்கு த்ருஷ்டாந்தம்——பூமியிலித்யாதி. 'அபத்மாம்' என்று சொல்லாமல், 'விபத்மாம்' என்கையாலே விசேஷண க(ந)தாநி பத்மாநி யஸ்யா: ஸா என்று வ்யுத்பத்தியைக் கருதிச் சொல்லுகிறார்——பெருமாளித்யாதி. இவ்வாச்ரயத்தை இத்யாதி——கடாதிபதார்த்தங்களைப்போலே 'இதுவுமொரு ஸத்தாயோகி பதார்த்தமுண்டு' என்னும்படியாகிலும் பண்ணவொண்ணாதபடி சென்றற்றிருந்தாளென்றபடி. இவ்வர்த்தம் த்ருஷ்டாந்தத்தாலே தோற்றுகிறது. 'ஸபங்காம், விபத்மாம்' என்கையாலே நீர்வற்றினமை தோன்றுகிறதிறே. அத்தாலே ஓடையினுடைய ஸ்வரூபமிழந்தமை தோன்றுகிறதிறே. நீரோடே கூடின நிம்நப்ரதேசமிறே ஓடையாகிறது.

4. दुष्करं कृतवान् रामो हीनो यदनया प्रभुः ।
धारयत्यात्मनो देहं न दुःखेनावसीदति ॥ 15 52.

து³ஷ்கரம் க்ருதவாந் ராமோ ஹீநோ யத³நயா ப்ரபு⁴: ।
தா⁴ரயத்யாத்மநோ தே³ஹம் ந து³:கே²நாவஸீத³தி ॥

ப-ரை. ராம:= ராமன், து³ஷ்கரம்= செய்யமுடியாத(செய்யத்தகாத) காரியத்தை, க்ருதவாந்= செய்தவராகிறார். யத்= யாதொருகாரணத்தால் (ஏனெனில்) ப்ரபு⁴:= ப்ரபுவாகிய, ராமன், அநயா ஹீந: (ஸந்) = இவளைவிட்டுப் பிரிந்தவராயிருந்தும், ஆத்மந:= தன்னுடைய, தே³ஹம்= ஶரீரத்தை, தா⁴ரயதி= தரித்துக்கொண்டிருக்கிறாரோ, து³:கே²ந= துயரத்தால், ந அவஸீத³தி= இளைத்துமுடியவில்லையோ.

ஈடு. (தி-வாய். 2. 4. 2.) து³ஷ்கரம் க்ருதவாந் ராம:—இவளைப்பிரிந்து ஸமாதா (யா)நம்பண்ணியிருந்த பெருமாள் சால அரிதாகச் செய்தார். ஹீநோ யத³நயா—இவளைப் பிரிந்து தேஹத்தைத் தரித்திருந்தாரென்பது யாதொன்று, அது சால வரிதாகச் செய்தார். ப்ரபு⁴:—ஆனை குதிரை ஏறவும் நாடாளவும் கற்றாரித்தனை. ப்ரணயதா (யா) ரையில் புதியதுண்டிலர். மால்யவானில் பெருமாளிருந்தபோது மேகத(ஷ)ர்ஶநத்திலே பட்டபாட்டைக் கண்டு ‹வஸிஷ்டஶிஷ்யன் ஒரு ஸ்த்ரீநிமித்தமாக இப்படி படுவதே!' என்று க(ஹ)ர்ஹித்துச் சிரித்திருந்தான் விரக்தனாகையாலே, இப்போது இவளைப் பிரிந்து தேஹத்தைத் தரித்துக்கொண்டிருப்பதே' என்கிறானாயிற்று விஶேஷஜ்ஞனாகையாலே. தா⁴ரயத்யாத்மநோ தே³ஹம்—இதுதேனும் இரவலுடம்போ சுமந்துகொண்டிருக்கைக்கு. போகா (ஹோமா)யதநமன்றோ, துக்காயதனமோ இது. பிரிந்தால் ‹க்ரமத்திலே கூடுகிறோம்' என்று தரித்திருக்கவல்லளல்லளே

அரும். விஶ்லேஷமே துர்கட (து³ர்க⁴டம்) மென்கிற கருத்தாலே சொல்லுகிறார்—இவளை இத்யாதி. இருந்து=தரித்திருந்து. 'ப்ரபு: ராம: அநயா ஹீந: ஸந் ஆத்மநோ தேஹம் தாரயதீதி யத், தத்துஷ்கரம் க்ருதவான்›

என்ற அன்வயத்தை முன்னிட்டுக் கருத்து—இவளையித்யாதி. 'தாரயதி' என்றதிலே நோக்கு. 'தெய்வம்செய்த பிரிவுக்கு அவர் என்செய்வர்' என்றிருக்கையாலே 'ஹீந:' என்று குற்றம் சொல்லுகிறானல்லன். 'தாரயதி' என்று குற்றம் சொல்லுகிறானென்றபடி. ப்ரணயேத்யாதி—இத்தனை நாளும் 'ப்ரணயி' என்று ப்ர(ஊ)மித்திருந்தோம். ப்ரணயிகள்படியன்றிக்கே பிரிந்து தரித்திருக்கையாலே ப்ரணயி அல்லர்; கேவலம் ப்ரபு என்றபடி. புதியதுண்டிலர்=ஏகதேஶம் அநுபவித்திலர்; புதியதுண்கை=ஏகதேஶாநுபவம். 'ஏவம் ஸீதாம் ததா—' என்கிற மேல்ஶ்லோகத்தில் ததா (ஷா)' என்கிறதிலே நோக்காக பாவம்—மால்யவானித்யாதி. இப்போது இவளைக்கண்டு இப்படி சொல்லுகையாலே இவளைக் காணாமையாலே மால்யவானிலே பெருமாளை கர்ஹித்தது அர்த்தஸித்தம். 'மமாபிவ்யதி(ஶி)தம்' என்றதே இதுக்கு நியாமகம். 'ஆத்மந:' என்று விஶேஷித்ததுக்கு பாவம்—இதேதேனுமித்யாதி. இரவலுடம்போ=பிராட்டிக்குப்போலே பராதீனமான உடம்போ. தேஹம் என்றதுக்கு பாவம்—போகாயதனமித்யாதி. 'போகாயதனம் ஶரீரம்' என்று ஶரீரலக்ஷணம். துக்காயதனமோ=துக்கத்துக்குமாத்திரம் ஆஸ்பதமோ. ஆனால் இவர், மலையிலிருந்து விழுதல் முதலியன செய்யவேண்டுமோ என்ன—ந ஶோகேநாவஸீததி. இதுவேயிறே ப்ரணயித்வத்துக்குச் சேர்ந்தது. மற்றது ப்ரணயித்வத்துக்குக் கொற்றையாமென்று கருத்து, நிருச்ச்வாஸதைபோலே ஆகவேணுமென்று தாத்பர்யம். 'அநயா' என்றதுக்கு பாவம்—பிரிந்தாலித்யாதி.

5. एवं सीतां तदा दृष्ट्वा हृष्टः पवनसंभवः ।
जगाम मनसा रामं प्रशशंस च तं प्रभुम् ॥ 15. 53.

5, 𑌏𑌵𑌂 𑌸𑍀𑌤𑌾𑌂 𑌤𑌦𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌹𑍃𑌷𑍍𑌟𑌃 𑌪𑌵𑌨𑌸𑌂𑌭𑌵𑌃।
𑌜𑌗𑌾𑌮 𑌮𑌨𑌸𑌾 𑌰𑌾𑌮𑌂 𑌪𑍍𑌰𑌶𑌶𑌂𑌸 𑌚 𑌤𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌮𑍍 ॥

ப-ரை. 𑌏𑌵𑌮𑍍= இப்படி, 𑌸𑍀𑌤𑌾𑌮𑍍= ஸீதையை, 𑌤𑌦𑌾= அப்போது, 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾= கண்டு, 𑌹𑍃𑌷𑍍𑌟𑌃= ஸந்தோஷித்த, 𑌪𑌵𑌨𑌸𑌂𑌭𑌵𑌃= வாயுபுத்ரனான ஹநுமான், 𑌰𑌾𑌮𑌮𑍍= ராமனை, 𑌮𑌨𑌸𑌾= மனத்தால், 𑌜𑌗𑌾𑌮= அடைந்தான். (நினைத்தான்) 𑌪𑍍𑌰𑌭𑍁𑌮𑍍= ப்ரபுவாகிய, 𑌤𑌮𑍍= அந்த ராமனை, 𑌪𑍍𑌰𑌶𑌶𑌂𑌸 𑌚= புகழ்ந்தும் கொண்டான்.

ஜீயர் அரும்பதம். (தி-வாய். 2. 4. 2.) இப்படி நிந்தித்த வன்தானே அநந்தரத்திலே கொண்டாடத்துடங்கினான்—ஏவமி

த்ராதி. ஜநவ்ழ — க்ஷணகாலவிஶ்லேஷாயோக்யமான வஸ்துவாக. ஹ்ருஷ்டா ராமோ ஜநகஸுதாம் — இப்படி அவளைப்பிரிந்த பெருமாள் ப்ராணனை தரித்திருந்தது நம்முடைய பாக்யபலமிறே என்று ஹ்ருஷ்டரானனென்றபடி. ராமழ — இப்படிப்பட்ட தசையிலும் தம்மை நோக்கிவைத்து நம்முடைய மநஸ்ஸை ரஞ்ஜிப்பிப்பதே என்று புத்தி பண்ணினானென்றபடி. பவநஸுஹவ: — தம்முடைய தமப்பன் பண்ணின உபகாரத்தை ஸ்மரித்தானாயிற்று. ப்ராணவாயு முகேந விடாமலிருந்தவவனிறே உபகாரகன். ப்ர ஶஶம்ஸ ச தம் ப்ரபும் — இப்படி அவன் தரித்திருந்ததுக்கு நிபந்தநம் (நிபந்தநம்) ப்ரபுத்வமிறே என்று ப்ரபுத்வத்தைக் கொண்டாடத் தொடங்கினான். தழ — ப்ரபுத்வத்தின் பெருமை இருந்தபடி என்றானென்றதாயிற்று.

6. त्रैलोक्यराज्यं सकलं सीताया नाप्नुयात्कलाम् । 16. 14.

த்ரைலோக்யராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத்கலாம்।

பதவுரை. ஸகலம் = ஸமஸ்தமான, த்ரைலோக்யராஜ்யம் = மூன்றுலகராஜ்யமும், ஸீதாயா: = ஸீதையினுடைய, கலாம் = ஒரு அம்ஶத்தை. நாப்நுயாத் = அடையமாட்டாது (ஒரு அம்ஶத்துக்கு ஒப்பாகாது)

ஈடு. (தி-வாய். 6-2-6) மூன்று லோகத்தையும், அத்தோடே விஶபதவாச்யனானவன் தன்னையும் கூட ஒரு தட்டாக்கினால் பிராட்டியுடைய ஒரு கலாமாத்ரத்துக்கு இடைநிற்கமாட்டாது

7. सर्वान्भोगान्परित्यज्य भर्तृस्नेहबलात्कृता ।
अचिन्तयित्वा दुःखानि प्रविष्टा निर्जनं वनम् ॥ 16. 19.

ஸர்வாந்போகாந்பரித்யஜ்ய பர்த்ருஸ்நேஹபலாத்க்ருதா।
அசிந்தயித்வா து:கானி ப்ரவிஷ்டா நிர்ஜநம் வநம் ॥

பதவுரை. (ஸீதை) பர்த்ருஸ்நேஹபலாத்க்ருதா = பர்த்தாவிடத்திலுள்ள ப்ரீதியால் பலமாகத் தூண்டப்பட்டவளாய், ஸர்வா

நு ஹொமாநு = எல்லாபோகங்களையும், வரித்ஜ = விட்டுவிட்டு, டுஃவாநி = துக்கங்களை, அவிஜயிதா = நினையாமல், நிஜநஂ = ஏகாந்தமான, வநஂ = காட்டை, ப்ரவிஷ்டா = அடைந்தாள்.

ஈடு. (தி-வாய். 6. 7 ப்ரவேசம்.) ஸவாநு ஹொமாநு வரித்ஜ—தான் பண்டு விரும்பியிருக்குமவற்றோடு பெற்றவர்களோடு வாசியறப் பொகட்டுப்போனாள். வரித்ஜ—மீண்டுமிவற்றிலே நசை பண்ணுமென்று தோற்றாதபடி விட்டாள். ஹதஸ்நெஹ ஸவாத்ஸ்யதா—ஒரு விஷயத்தில் ஸ்நேஹமானது எல்லாவற்றையும் விடப்பண்ணுமாகாதே. ஸ்வவசத்தாலே போனாளென்று கிடீர். அவிஜயித்வா டுஃவாநி—விட்டவற்றை நினையாவிட்டால், போய்ப் புகுகிறவிடத்தில் மிறுக்கைத் தான் நினையாநின்றாளோ. இவள் பெருமாளையொழியத் தன்னைக் காணில்றே துக்காநுஸந்தா(நா)நம் பண்ணவல்லளாவது. ப்ரவிஷ்டா நிஜநம் வநம்—போகத்துக்கு ஏகாந்தஸ்தலம் என்னுமதுவே கிடீரிவள் நெஞ்சில் பட்டது.

அரும்—ஸர்வஸ்வத்துக்கு ஸங்கோசமில்லாமையாலே பாவம்—தானித்யாதி. உபஸர்க்கார்த்தம்—மீண்டுமித்யாதி. மிறுக்கை—துக்கத்தை. நிர்ஜநம் என்றதுக்குக் கருத்து—போகத்துக்கித்யாதி.

8. नैषा पश्यति राक्षस्यो नेमान्पुष्पफलद्रुमान् ।
एकस्थहृदया नूनं राममेवानुपश्यति ॥ 16. 25.

நைஷா பஶ்யதி ராக்ஷஸ்யோ நேமாநு புஷ்பஃபலத்ருமாநு । ஏகஸ்தஹ்ருதயா நூநம் ராமமேவாநுபஶ்யதி ॥

ப—ரை. ஏஷா = இந்த ஸீதை, ராக்ஷஸ்யஃ = ராக்ஷஸிகளை, ந பஶ்யதி = காணுகிறதில்லை. இமாநு = இந்த, புஷ்பஃபலத்ருமாநு = பூவும் பழமுமுள்ள மரங்களையும், ந பஶ்யதி = காணுகிறதில்லை ஏகஸ்தஹ்ருதயா = ஓரேவிடத்தில் நிறுத்திய மனத்தையுடையவளாய், ராமம் ஏவ = ராமனையே, நூநம் = நிச்சயமாய், அநுபஶ்யதி = காண்கிறாள்.

ஈடு. (தி-வாய். 5. 5. 5.) தேநேஷா வஸ்த்ருதீத்யாதி—ராக்ஷஸீ த(ஜ)ர்ஶநத்தோடு புஷ்பபலத்ருமதர்ஶநத்தோடு வாசியற்றிருக்கிறது காணுமிவளுக்கு. ஸகஸ்ரேஷு த்யாதி—அருகிருந்தவர்களையும் பாராளாயிற்று.

அரும்—க்ரூர ராக்ஷஸிகளோடே போக்யமான புஷ்பாதிகளை ஸஹபடித்ததுக்கு பாவம்— ராக்ஷஸீ தர்ஶநத்தோடித்யாதி. அதாவது— தானும் பெருமாளும் கூட புஷ்பாபசயம் பண்ணுகிறதுக்கு ஸ்மாரகமாய்க்கொண்டு ப்ரதிகூலங்களாகையாலே இவையும் பாத(பா்ய)கமென்றபடி.

9. इमामसितकेशान्तां शतपत्रनिभेक्षणाम् ।
सुखार्हां दुःखितां दृष्ट्वा ममापि व्यथितं मनः ॥ 16. 28

இமாமஸிதகேஶாந்தாம் ஶதபத்ர நிபேக்ஷணாம் ।
ஸுகார்ஹாம் து:கிதாம் த்ருஷ்ட்வா மமாபி வ்யதிதம் மந: ॥

ப—ரை. அஸிதகேஶாந்தாம் = கருத்த கூந்தல் நுனியுள்ளவளும், ஶதபத்ர நிபேக்ஷணாம் = தாமரைப்பூபோன்ற கண்ணுடையவளும், ஸுகார்ஹாம் = ஸுகத்திற்குரியவளுமாகிய, இமாம் = இந்த ஸீதையை, து:கிதாம் = துக்கப்படுகிறவளாக, த்ருஷ்ட்வா = கண்டு, மமாபி = என்னுடையவும், மந: = மனம், வ்யதிதம் = வருந்துகிறது.

ஈடு. (தி-வாய். 5. 9. 1.) இமாமஸிதகேஶாந்தாம்—மைவண்ண நறுங்குஞ்சியையுடையவர்க்கும் பேணத்தகும் குழலையுடையவள் கிடீர். ஶதபத்ர நிபேக்ஷணாம்—'கமலபத்ராக்ஷ:' என்கிற கண்களாலே கண்டுகொண்டிருக்கத் தக்க கருங்கண்ணையுடையவள் கிடீர். ஸுகார்ஹாம்—அவர் மடியிலே இருக்கத்தகுமவள். து:கிதாம் த்ருஷ்ட்வா—இவ்விருப்பு இருக்கத்தகாதவளைக் கண்டு. மமாபி வ்யதிதம் மந:—ஶோகஹர்ஷங்களுக்கு அழியாத என்னுடைய நெஞ்சையும் வருத்திற்றுக் கிடீர்.

அரும்—பேணத்தகும்=ஆசைப்படத்தகும். ஶதபத்ரநிபமென்றது தர்ஶநீயதைப் பற்றவாதல், நெய்தலாதல். மடியிலேயிருக்க என்றவிடத்தில் 'தவாங்கே ஸமுபாவிஶம்' என்றத்தை நினைப்பது.

10. हिमहतनलिनीव नष्टशोभा व्यसनपरम्परयातिपीड्यमाना ।
सहचररहितेव चक्रवाकी जनकसुता कृपणां दशां प्रपन्ना ॥ 16. 30.

ஹிமஹதநலிநீவ நஷ்டஶோபா வ்யஸநபரம்பரயா அதிபீட்யமாநா ! ஸஹசரரஹிதேவ சக்ரவாகீ ஜநகஸுதா க்ருபணாம் தஶாம் ப்ரபந்நா ॥

ப—ரை. ஜநகஸுதா = ஸீதை, ஹிமஹதநலிநீவ = பனியால் தாக்கப்பட்ட தாமரைப் பொய்கையைப் போல, நஷ்டஶோபா = ஶோபை இழந்தவளாய், வ்யஸநபரம்பரயா = துக்க பரம்பரையால், அதிபீட்யமாநா = மிகவும் பீடிக்கப்பட்டவளாய், ஸஹசரரஹிதா = கணவனைப் பிரிந்த, சக்ரவாகீஇவ = பெண் சக்ரவாகப்பக்ஷியைப் போலெ, க்ருபணாம் = அங்கலாய்க்கத் தக்க, தஶாம் = நிலைமையை, ப்ரபந்நா = அடைந்தாள்.

ஈடு (தி-வாய்.6.2.ப்ரவேஶம்) ஹிமஹதநலிநீவ நஷ்டஶோபா— பன்னிரண்டாண்டு தண்ணீர்த்துரும்பறக் கலந்துபோந்த இவளுக்கு வந்தேறியான பிரிவிறே, அத்தாலே அழகழிந்திருந்தாள், வ்யஸநபரம்பரயா—பிரிவேபாதி கலவியும் வந்து கழியப் பெற்றதில்லை. அதிபீட்யமாநா— ஆஶ்ரயத்தினளவல்லாதபடியாயிருக்கை. ஸஹசரரஹிதேவ சக்ரவாகீ— வருமளவும் உணர்ந்து பொறுத்திருக்கமாட்டாதிருக்கை. அவற்றின்படி அங்ஙனேயிறே. ஜநகஸுதா—'இவை வரும்' என்று வளரப்பெற்றதில்லை. க்ருபணாம் தஶாம் ப்ரபந்நா—கீழ்ச்சொன்ன இவையொன்றும் ஒப்பாகமாட்டாது; சில சொல்லிற்றுமித்தனை.

அரும்—ஹிமஹதமாவதற்கு முன்பு தாமரையோடை நன்றாயிருந்தவோபாதி, இவளும் திருவயோத்யையிலிருக்கிற நாள் பன்னிரண்டு ஸம்வத்ஸரமும் ஒருவிக்நம் அறக் கலந்தாளென்று 'நஷ்டஶோபா' என்றதுக்கு பாவம் அருளிச்செய்கிறார்—பன்னிரண்டித்யாதி. தண்ணீர்த்துரும்பற என்றது 'ஸமா த்வாதஶ (தத்ராஹம்)' என்கிறவிடத்தில் அத்யந்த ஸம்யோகவிஹித த்விதீயையைப்பற்ற. கீழ்ச்சொன்ன இவை—நளிநீ சக்ரவாகிகள்.

11. दहन्तीमिव निश्वासैर्वृक्षान्पल्लवधारिणः ॥ 17. 29.

தஹந்தீமிவ நிஶ்வாஸைர்வ்ருக்ஷாந் பல்லவதாரிண: ॥

ப—ரை. பல்லவதாரிண: = தளிர்களைத் தாங்கிநிற்கின்ற, வ்ருக்ஷாந் = மரங்களை, நிஶ்வாஸை: = பெருமூச்சுக்களால், தஹந்தீம் இவ = கொளுத்துகிறவள் போலிருக்கிற (ஸீதையைக்கண்டு ஹநுமான் ஸந்தோஷத்தை அடைந்தான்.)

பெ—வ்யா. (திருநெடுந்தாண்டகம். 12) திருவடி லௌகிகாக்நியாலே ஊரைச் சுட்டான், இவள் விரஹாக்நியாலே அசோகவநிகையைச் சுட்டாள்.

ஈடு. (தி—வாய். 7. 2. 2.) நெடுமூச்சாலே தன்பகை அறுக்கப் பாராநின்றாள். பல்லவதாரிகளாயிருக்கை அப்போதிவளுக்குப் பகையிறே. ஒருபடிப்பட நின்று நலிகிறபடியிறே அவை. ராக்ஷஸிகள் உறங்கும்போதும் உண்டிறே, உருவ இப்படியே நிற்கிறவித்தனை அவை.

அரும்—நிஶ்வாஸங்களாலே வ்ருக்ஷங்களை தஹிப்பாளென்னென்ன—நெடுமூச்சாலே யித்யாதி. பகையாவது—வ்ருக்ஷங்கள். 'தாரிண:' என்கிற வர்த்தமானத்துக்கு பாவமாதல், 'தாரிண:' என்றதுக்கு தாச்சீல்யே இநிப்ரத்யமாக்கி பாவமாதல்—ராக்ஷஸிகளித்யாதி.

12 मित्रमौपयिकं कर्तुं रामः स्थानं परीप्सता ।
वधं चानिच्छता घोरं त्वयासौ पुरुषर्षभः ॥ 21. 19.

மித்ரமௌபயிகம் கர்த்தும் ராம: ஸ்தாநம் பரீப்ஸதா ।
வதம் சாநிச்சதா கோரம் த்வயாஸௌ புருஷர்ஷப: ॥

ப—ரை ஸ்தாநம் = ஸ்திதியை, பரீப்ஸதா = விரும்புகிறவனும், கோரம் = கொடுமையான, வதம் = வதத்தை, அநிச்சதா ச = விரும்பாதவனுமான, த்வயா = உன்னால், புருஷர்ஷப: = புருஷ சிரேஷ்டரான, அஸௌ = இந்த, ராம: = ராமன், மித்ரம் = நண்பனாக, கர்த்தும் = செய்துகொள்ள, ஔபயிகம் = தகுதியானவர்.

பெ—வ்யா. (பெருமாள் திருமொழி. 5. 5.) அன்று கண்டாப்போலே கையும் வில்லுமாய் நிற்பர். அவனுக்கு அச்சத்தாலே, தமக்கு உருவு வெளிப்பாட்டாலே முன்னே நிற்பர், தீரக்கழிய அபராதம் செய்த எனக்கு அவர் க்ருபை பண்ணுவரோ என்று அவனுக்கு நினைவாகக் கொண்டு, த்வயாஸௌ புருஷர்ஷப:—நீ அநுகூலனாய் ஓரடி வர நின்றால் அத்தையே நினைத்து நீ பண்ணின அபராதமெல்லாம் புத்தி பண்ணுவரோ; அவர் புருஷோத்தமர்காண்.

ஈடு. (தி-வாய் 3 6. ப்ரவேசம்) மித்ரமௌபயிகம் கர்த்தும் ராம:—'பெருமாளை நீ ஶரணம் புகு' என்றால் அப்பையால் அது தனக்கு எளிவரவாக நினைத்திருக்குமே; அதுக்காகத் தோழமை கொள் என்கிறார். தங்களைச் சரணம் புக்காரை தங்களிற்காட்டில் குறைய நினைப்பதில்லையே இவர்கள். 'மித்ரபாவேந' என்றும், 'மித்ரமௌபயிகம் கர்த்தும்' என்னுமிறே இருவர் படியும். ஸ்தாநம் பரீப்ஸதா—வழியடிப்பார்க்கும் தரையிலே கால் பாவி நின்று வழியடிக்கவேணுமே. உனக்கு ஓரிருப்பிடம் வேண்டியிருந்ததாகிலும் அவரைப் பற்றவேணுங்காண். எளிமையாக எதிரிகாலிலே குனிந்து இவ்விருப்பு இருப்பதில் பட்டுப்போக அமையுமென்றிருந்தாயோ—வதம் சாநிச்சதா கோரம்—அப்படி உன்னை நற்குலைப்பட விடுவரோ. உன்னை வைத்து உன் முன்னே உன் ஸந்தானஜாதரை ஹிம்ஸித்துப் பின்னை உன்னை சித்ரவதம் பண்ணுகையாகிற இவ்வதத்தை இச்சித்ததில்லையேயாகிலும் அவரைப் பற்றவேணும் காண். கோரம்—உன்னிலே இருந்தபடியால் விசேஷித்து உனக்கு அவரைப் பற்றவேணும். அஸௌ—உருவெளிப்பாட்டாலே முன்னிலையாயிருக்குமிறே இவளுக்கு. அவனுக்குந் தானே மாயாம்ருகத்தின் 'பின்னே போகிறபோது கண்டகாட்சியாலே அச்சத்தாலே எப்போதும் முன்னிலையாயிருப்பரிறே. புருஷர்ஷப:—'நான் பண்ணின அபகாரத்துக்கு என்னை அவர் கைக்கொள்ளுவரோ' என்றிருக்கவேண்டா, இவற்றை ஒன்றாக நினைத்திரார் காண். அஸௌ புருஷர்ஷப: ராம: த்வயா மித்ரம் கர்த்தும் ஔபயிகம்.

அரும்— பரிஹாராந்தரம்— தங்களையித்யாதி. பையல்= க்ஷுத்ரன். எளிவரவாக=லகுதரமாக. 'ராகவம் ஶரணம் கத:' என்றவனையிறே, 'தாஸ பாவேந' என்னாதே 'மித்ரபாவேந' என்றது. 'பரபுரார்தந:' என்றத்தைப் ப ற்ற—உனக்கோரிருப்பிடமித்யாதி. எளிமையாக=லகுவாக. உருவெளிப் பாடு=ஜ்ஞாந வைஶத்யம் (ஓ௱௰).

ஈடு. (தி-வாய். 8. 1. 1.) ஸீதௌபயிகஃ—ராவணன் பி ராட்டி திருமுன்பே நின்று சிலவற்றை ஜல்பிக்கப் புக்கவாறே, ப்ர ஜை நலிந்ததென்னத் தாய் சீறுளிறே ஜநநியான முறையாலே, அவன் அநர்த்தங் கண்டு ஹிதமருளிச் செய்கிறாள். 'அவர் திரு வடிகளிலே ஶரணம் புகு' என்றால், அவன் தாழ்வாக நினைத்து இசையானென்னுமத்தாலே தோழமை கொள்ளென்கிறாள். அ வர் 'ஸீதா ஸாம்வந' என்பர். இவள் 'ஸீதௌபயிகஃ' என்னும். அவ்வருகு போனாலும் பரமஸாம்யாபத்தியிறே கொடுப்பது. எனக்கு ஶத்ருவாயிருப்பாரோடு உறவு பண்ணவேண்டுகிறதெ ன்னென்னுமே— ஸ்தாநம் பரீப்ஸதா—கெடுவாய், வழிபறிப்பார் க்கும் தறையிலே கால் பாவிநின்று கொள்ளவேணுமே. உன் கு டியிருப்பை ஆசைப் பட்டாயாகில் இத்தனையும் செய்யவேணும். எனக்கு ஒரு குடியிருப்பு வேணுமோ ? ஆகாஶ சாரிகளாயன் றோ நாங்களிருப்பது என்று அவனுக்கு நினைவாக—வதம் சாநி ச்சதா—அவரம்புகள் ஆகாஶத்திலே நடவாதோ. வொரஃ—உன் னைச் சிங்கவிளக்கெரித்துக் கொல்லாதே நற்குலையாகக் கொல்லு ம் போதும் அவரைப் பற்றவேணும் காண். க்வயா—பல சொல்லி என் ? உனக்கு அவர் வேணும். ஃவெஸ—அவர்படி உனக்குத் தோற்றுகிறதில்லையோ? உருவு வெளிப்பாட்டாலே முன்னிலே இவ ளுக்கு; அச்சத்தாலே முன்னிலையாகத் தோற்றுமவனுக்கு. தீரக் கழிய அபராதம் பண்ணி நிற்கிற என்னைக் கைக்கொள்ளுவரோ என்ன— புருஷர்ஷபஃ— நீ செய்தவற்றை ஒன்றாக நினைத் திருப்பாரொருவரல்லர், புருஷோத்தமர் காண்.

அரும்—சிங்கவிளக்கெரிக்கை— தலையிலே சாணியை வைத்து விளக் கேற்றுகை, வாலிலே பந்தம் கட்டி யெரிக்கையும்.

13. ख्यातः प्राज्ञः कृतज्ञश्च सानुक्रोशश्च राघवः ।
सद्वृत्तो निरनुक्रोशः शङ्के मद्भाग्यसङ्क्षयात् ॥ 26. 13.

க்யாத꞉ ப்ராஜ்ஞ꞉ க்ருதஜ்ஞஶ்ச ஸாநுக்ரோஶஶ்ச ராகவ꞉ ।
ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோஶ꞉ ஶங்கே மத்பாக்யஸங்க்ஷயாத் ॥

ப—ரை. ப்ராஜ்ஞ꞉ = புத்திமானாகவும், க்ருதஜ்ஞஶ்ச = நன்றி அறிவுள்ளவராகவும், ஸாநுக்ரோஶஶ்ச = தயையுள்ளவராகவும், ஸத்வ்ருத்த꞉ = நன்னடத்தை யுள்ளவராகவும், க்யாத꞉ = பிரஸித்தி பெற்ற, ராகவ꞉ = ராமன், மத்பாக்யஸங்க்ஷயாத் = எனது பாக்கியக் குறைவினால், நிரநுக்ரோஶ꞉ = கிருபை யில்லாதவராக, (இருக்கிறாரென்று) ஶங்கே = ஸந்தேஹிக்கிறேன்.

ஈடு. (தி—வாய். 8. 1. ப்ரவேஶம்) ப்ராஜ்ஞ꞉—தம்மாலே அபிமதம் பெற இருப்பார் அறிவிற்குறைவால் இழக்கவேண்டாதபடி தம்மளவையும் அவர்களளவையும் அறிகைக்கீடான அறிவுடையவர். க்ருதஜ்ஞஶ்ச—கிட்டுமவன் தன் பக்கல் வைமுக்யம் (வ்ய) பண்ணுமது தவிர்ந்து ஓடிவர நின்ற வெல்லையுமறிவர். ஸாநுக்ரோஶஶ்ச—அறிவுகொண்டு காரியம் கொள்ளவுமறியாதே யிருக்குமவர்களுக்கு அவர்களிழவை அநுஸந்தித்து ஐயோ என்றிரங்குமவராயிருப்பர். ராகவ꞉—இது இவர் தம்மைத் தோற்றிவந்ததல்ல, குடிப்பிறப்பாலே. ஸத்வ்ருத்த꞉—பரஸம்ருத்த்யேகப்ரயோஜநராயிருப்பர். க்யாத꞉—இப்படி எதிரிகள் கோஷ்டி (கோஷ்டி)யிலும் ப்ரஸித்தர். நிரநுக்ரோஶ꞉ ஶங்கே— இக்குணங்களையுடைய பெருமானை இத்தலையில் எனக்கு முகங்காட்டக் காணாமையாலே, இக்குணங்களொன்றுமில்லாத ந்ருஶம்ஸரோபாதியாக ஶங்கியா நின்றேன். அவர்க்கு இக்குணங்களுண்டாகாதொழியாதிறே. மத்பாக்யஸங்க்ஷயாத்— என்னுடைய பாக்யஹாநியாலேயாமித்தனையிறே.

14. पक्षी च शाखानिलयः प्रहृष्टः पुनःपुनश्चोत्तमसान्त्ववादी ।
सुस्वागतां वाचमुदीरयानः पुनःपुनश्चोदयतीव हृष्टः ॥ 27. 62.

பக்ஷீ ச ஶாகாநிலய꞉ ப்ரஹ்ருஷ்ட꞉ புந꞉புநஶ்சோத்தமஸாந்த்வவாதீ ।
ஸுஸ்வாகதாம் வாசமுதீரயாந꞉ புந꞉புநஶ்சோதயதீவ ஹ்ருஷ்ட꞉ ॥

ப—ரை. ஶாகா நிலய: = கிளையிலிருக்கின்ற, பக்ஷீ ச = பக்ஷியும், ஸு ஹ்ருஷ்ட: = மிக்க ஸந்தோஷமுள்ளதாய், புந: புந = மறுபடியும் மறுபடியும், உத்தம ஸாந்த்வவாதீ = சிறந்த நல்லவார்த்தைகளைப் பேசுகிறதாய், ஸுஸ்வாகதாம் = அழகியநல்வரவைத்தெரிவிக்கின்ற, வாசம் = வார்த்தையை, உதீரயாந: = கூறுகிறதாய், ஹ்ருஷ்ட: = மயிர்க்கூச்சலெடுத்ததாய் இருந்துகொண்டு, புந: புந: = அடிக்கடி, சோதயதி இவ = (என்னை) தூண்டுகிறதுபோலும்.

ஈடு. (தி-வாய். 6. 2. ப்ரவேஶம்) பக்ஷீ ச—பக்ஷியானது சிறகை விரித்தது. ஶாகா நிலய:—உலர்ந்த கொம்பிலன்றிக்கே, பசுமையையுடைத்தான பணையிலே இருந்தது. வ்ருக்ஷத்தை வலமாக வந்து, தழைத்த பணையிலே நற்றரிக்கவிருந்தது. ஸு ஹ்ருஷ்ட:—அங்குள்ள பலாதிகளை புஜிக்கையாலுண்டான ஹர்ஷம் வடிவிலே தோற்றும்படியிருந்தது. புந: புநஶ்சோத்தமஸாந்த்வவாதீ—மேண்மேலன நல்வார்த்தைகள் சொல்லத் துடங்கிற்று. அதுக்கு மேலே, ஸுஸ்வாகதாம் வாசமுதீரயாந:—இவ்வளவல்ல கிடாய் அத்தலை பட்டது என்று சொல்லுமாபோலேயிருந்தது. புந: புநஶ்சோதயதீவ—வரவு நிஶ்சிதமானபின்பு, குளித்தல் ஒப்பித்தல் செய்யாதிருக்கிறது என்னென்று சொல்லுமாபோலேயிருந்தது. ஹ்ருஷ்ட:—வந்தால் பிறக்கும் வேறுபாடு தோற்ற உடம்பு மயிரெறிந்திருந்தது.

அநும். அண்டஜமென்னுதே 'பக்ஷீ' என்றதுக்கு பாவம்—சிறகைவிரித்தென்று. காஷ்ட்ட நிலய: என்னுதே 'ஶாகாநிலய:' என்றதுக்கு பாவம்—உலர்ந்த வித்யாதி. நன்னிமித்தமாகையாலே ததுபயுக்தத்தையுங் கூட்டிக்கொண்டு 'நிலய:' என்கிற பதத்துக்கு பாவம்—வ்ருக்ஷத்தையித்யாதி. உத்தமஸாந்த்வவாதியாகையாவது—பெருமாள் சீக்கிரத்திலே வருகிறாரென்கை. ஸாந்த்வவாதீ இவ உதீரயாந: இவ என்று இவ ஶப்தத்தை மேழிற்பதங்களிலுங்கூட்டுவது.

15. हा राम हा लक्ष्मण हा सुमित्रे हा राममातः सह मे जनन्या ।
एषा विपद्याम्यहमल्पभाग्या महार्णवे नौरिव मूढवाता ॥ 28. 8.

ஹா ராம ஹா லக்ஷ்மண ஹா ஸுமித்ரே ஹா ராமமா-
தஃ ஸஹ மே ஜநந்யா । ஸைஷா விநஶ்யாம்யஹமல்பபா-
க்யா மஹார்ணவே நௌரிவ மூட₄வாதா ॥

ப—ரை. ஹா ராம = ஐயோ ராமா, ஹா லக்ஷ்மண = ஐயோ லக்ஷ்மணா, ஹா ஸுமித்ரே = ஐயோ ஸுமித்ரே, மே ஜநந்யா ஸஹ = என் தாயோடுகூட, ஹா ராமமாதஃ = ஐயோ ராமனைப்பெற்ற தாயாகிய கௌஸல்யையாரே, அல்பபாக்₃யா = பாக்கியம் குறைந்த, ஸைஷா அஹம் = இந்த நான், மஹார்ணவே = பெருங்கடலில், மூட₄வாதா = சுழற்காற்றில்பட்ட, நௌஃ இவ = ஓடம்போல, விநஶ்யாமி = நசிக்கின்றேன்.

பெ—வ்யா. (திருநெடுந்தாண்டகம். 16) ஹா ராம என்று போக்யவஸ்துவை நினையா, ஹா லக்ஷ்மண என்று புஜிப்பாரை நினையா, ஹா ஸுமித்ரே என்று நிமித்தபூதரை நினையாக் கூப்பிட்டாளிறே.

16. अनन्यदैवत्वमियं क्षमा च भूमौ च शय्या नियमश्च धर्मे ।
पतिव्रतात्वं विफलं ममेदं कृतं कृतघ्नेष्विव मानुषाणाम् ॥ 28. 12.

அநந்யதை₃வத்வமியம் க்ஷமா ச பூ₄மௌ ச ஶய்யா நிய-
மஶ்ச த₄ர்மே । பதிவ்ரதாத்வம் விப₂லம் மமேத₃ம் க்ருதம் .
க்ருதக்₄நேஷ்விவ மாநுஷாணாம் ॥

ப—ரை. மம = என்னுடைய, (இத₃ம் = இந்த) அநந்யதை₃-வத்வம் = இவரையேதெய்வமாக நினைத்திருத்தலும், இயம் = இந்த, க்ஷமா ச = பொறுமையும், (இயம் = இந்த,) பூ₄மௌ ஶய்யா ச = தரையில் படுக்கையும், (இயம் = இந்த,) த₄ர்மே = தர்மத்தில், நியமஃ ச = உறுதியும், இத₃ம் = இந்த, பதிவ்ரதாத்வம் = பதிவ்ரதைத்தன்மையும், மாநுஷாணாம் = மனிதர்களுக்குள், க்ருதக்₄நேஷு = நன்றியறிவில்லாதவர்கள் விஷயத்தில், க்ருதம் இவ = செய்யப்பட்ட காரியம் போல, விப₂லம் = பயனற்றது.

௭௫. (தி-வாய். 4-6-10) அநந்யதைவத்வம் — ‘வேறே ஒரு ஆஶ்ரயத்தை உண்டு அது ரக்ஷிக்கிறது’ என்று நினைக்க விரகில்லை கிடீரெனக்கு. ‘ஸஹவைதேஹ்யா’ என்று பெரிய பெருமாள் திருவடிகளில் இவர் புகும்போதும் இவர்க்கு எடுத்துக்கைநீட்டப் புகுமத்தனை போக்கி, பெரியபெருமாள் தாமுத்தேஶ்யமாகப் புக்கறியேன். இயம் ச ஶோகே — ராவணனுடைய ஜல்பங்களையும் ராக்ஷஸிகளுடைய தர்ஜநபர்த்ஸநங்களையும் பொறுத்திருந்ததும் ‘அவரது ஒரு இன்சொல் கேட்கலாம்’ என்று கிடீர். ஶுஶ்ரூஷைவ ஶயநா — இத்தரைக்கிடை கிடந்ததும் ‘தவாங்கே ஸமுபாவிஶம்’ என்கிறபடியே ‘அவர்மடியிலிருப்பு ஒருகால் வாய்த்திக்குமோ’ என்னுமத்தாலே கிடீர். நியஶ்ய யஶ்சேஷ — ‘ரக்ஷகத்வதர்மம் அவர்தலையிலே’ என்னுமத்தாலே கிடீர் நானிருந்தது; ‘ந்யஸ்தோ தண்டு ஶ்ரீமான்வ ஹஸ்த ஹஸ்தாஹாநிதேஜஸா’ என்றதும் அவரைப் பார்த்து. வதிஷ்ய தாமஸ்யோ — ‘வத தஸ்ய மம் ஶேஷ’ என்று அவருடைய வ்ரதமொழிய, எனக்கு என்ன ஒரு ஸங்கல்பத்தை உண்டாக்கி இவற்றை அழிக்க நினைத்திலேன்கிடீர். விஹஸ்யா ஶேஷேஷு — தப்பாதவையும் தப்பிற்றன ஆர்க்குப்போலே என்னில், ஶாநாநுஷாணாம் க்ருதவேஷு க்ருதஜ்ஞ — ‘க்ருதாநம்ஶாநாஷாம் ச்ரேந்’ என்று அவர்க்குமுண்டிறே மனிச்சு; அவரை ஒழிந்தார்திறத்துச் செய்தவற்றேருபாதியாய்விழுந்தது. தப்பாதது தப்பிற்று. அதுக்கு அடி என்னென்னில், ஶேஷேஷு — அவர்பக்கல் குறையில்லை; அதுக்கு இலக்கு நானுகையாலே.

அநும் — விஶ்லேஷ வேளையிலே ‘நான் தேவதாந்தரப்ரவணையல்லேன்’ என்று சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் — வேறேயித்யாதி. எடுத்துக்கை நீட்டுகை = பரிசர்யை பண்ணுகை. இவற்றை = உக்தங்களை. பகவத்வ்யதிரிக்தரெல்லாரும் க்ருதக்நரன்றோ, மாநுஷேஷு என்ன வமையாதோ, ‘க்ருதக்நேஷு’ என்று விஶேஷிக்கிறதென்னென்ன — ‘ஆத்மாநமித்யாதி. அதாவது — ‘மாநுஷாணாம்’ என்ற ஶப்தம் ஸாமான்யமாகையாலே ‘ஆத்மாநம் மாநுஷம் மன்யே’ என்ற பெருமாளுக்கும் மநுஷ்யத்வமுண்டானாலும் ‘க்யா (ஞா) த: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞஶ்ச’ என்று இவர் க்ருதஜ்ஞராகையாலே ‘மாநுஷாணாம் மத்யே க்ருதக்நேஷு’ என்று இவரைவிசேஷித்து, இவரையொழிந்தார்திறத்துப்பண்ணின உபகாரம்

போல என்றபடி. க்ருதஜ்ஞே ராமே க்ருதமபி ஸர்வம் க்ருதக்னேஷு க்ருதமிவ மத்தோஷவசேந விதத(ய)ம் அப(ஹ)வதிதி பாவ: அதுக்கு—பலியாமைக்கு.

17. विषस्य दाता न हि मेऽस्ति कश्चिच्छस्त्रस्य वा वेश्मनि राक्षसस्य ॥ 28. 16.

விஷஸ்ய தாதா ந ஹி மேஸ்தி கச்சிச்சஸ்த்ரஸ்ய வா வேச்மநி ராக்ஷஸஸ்ய ।

ப—ரை. ராக்ஷஸஸ்ய = ராவணனுடைய, வேச்மநி = வீட்டில், மே = எனக்கு, விஷஸ்ய = விஷத்தையாவது, சஸ்த்ரஸ்ய வா = ஆயுதத்தையாவது, தாதா = கொடுக்கின்றவனாக, கச்சித் யாதொருவனும், ந அஸ்தி ஹி = இல்லையே.

ஈடு, (தி—வாய் 5—4 ப்ரவேசம்) விஷஸ்ய தாதா— இத்தனை நற்சரக்குத் தரும் உதாரரை இவ்வூரில் கிடைக்குமோ. மே—உண்டானால்தான் எனக்கு இது ஸம்பவிக்குமோ? சஸ்த்ரஸ்யவா—விஷம்போலே சிறிது நின்று கொல்லுமதின்றியே கடுக முடிக்கும் சஸ்த்ரத்தைத்தான் தருவாருண்டோ. வேச்மநி ராக்ஷஸஸ்ய—பிரித்துவைத்து உயிர்க்கொலையாக நலிகிறவனுடைய ஊரிலே, நற்குலைக்குப் பரிகரமானத்தைத்தான் தருவாருண்டோ.

அரும். 'இது ஸம்பவிக்குமோ' என்றது —தாதா (தாதா) வுண்டாகிலும் பாபியான எனக்குத்தாரார் என்னுதல், எனக்குப்பலியாதென்னுதல்.

18. नगोत्तमं पुष्पितमाससाद । 28. 17.

நகோத்தமம் புஷ்பிதமாஸஸாத ।

ப—ரை. (ஸீதை) புஷ்பிதம் = பூத்திருக்கிற, நகோத்தமம் = சிறந்த பர்வதத்தை, ஆஸஸாத = அடைந்தாள்.

பெ—வ்யா. (பெரியதிருமொழி. 3. 6. 1) எரிகிற நெருப்பைச் சென்று கிட்டுவாரைப்போலே; ஓங்கிய பாப்படங்களும் புஷ்பமேயாய்க் கிடக்கை. ஆஸஸாத—தன் ஜீவநத்திலே நைராச்யம் விளைந்தமை தோற்றியிருக்கிறது.

பெ—வ்யா. (நாச்சியார் திருமொழி 9. 5.) நதோத்ஸம் வர்ஷி சஸாஸவஸாத்—ஆற்றுமை கரைபுரண்டால் தீப்பாய ஒருப்படுமாபோலே. 'அஸோநுவர்ஷஹேது ஸோநு' என்னும்படியிறே இவளுக்கு இருக்கிறது.

19. तथागतां तां व्यथितामनिन्दितां व्यपेतहर्षां परिदीनमानसाम् ।
शुभां निमित्तानि शुभानि भेजिरे नरं श्रिया जुष्टमिवोपजीविनः॥ 29.1.

ததாகதாம் தாம் வ்யதிதாமநிந்திதாம் வ்யபேதஹர்ஷாம் பரிதீநமாநஸாம் । ஶுபாம் நிமித்தாநி ஶுபாநி பேஜிரே நரம் ஶ்ரியா ஜுஷ்டமிவோபஜீவிந: ॥

ப—ரை. ததாகதாம் = அவ்வித நிலைமைக்கு வந்தவளும், வ்யதிதாம் = வருத்தப்படுகிறவளும், அநிந்திதாம் = குற்றமற்றவளும், வ்யபேதஹர்ஷாம் = ஸந்தோஷம் நீங்கியவளும், பரிதீநமாநஸாம் = மனத்தளர்ச்சி யடைந்தவளும், ஶுபாம் = மங்களமானவளுமான, தாம் = அந்த ஸீதையை, ஶ்ரியா—லக்ஷ்மியால், ஜுஷ்டம் = அடையப்பட்ட, நரம் = மனிதனை, உபஜீவிந: இவ—அண்டி நிற்பவர்கள்போல, ஶுபாநி = மங்களங்களான, நிமித்தாநி = சகுனங்கள், பேஜிரே = அடைந்தன.

ஈடு. (தி-வாய் 6-2. ப்ரவேசப்) ததாகதாம்—'ஸத்த்வம் உபஸ்தாஸ்யம் வ்' என்று கொண்டு ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே உள்ளபடியெல்லாம் தோற்றக்கடவதாகப் பெற்றுடையனை ரிஷிக்குப் பாசுரமிட்டுச் சொல்லவொண்ணுதபடியிருக்கிறபடி. தாம்—தர்மிக்கு மேற்பட அவ்வருகொன்றின்றிக்கேயிருக்கை. வ்யதிதாம்— கீழ்ச்சொன்னவை ப்ரக்ருதியாய், வ்யஸனமுள்ளது மேலே என்று தோற்றும்படியாயிருந்தாள். 'ஸோ ஆஹஸ ததாஹம்' என்று பன்னிரண்டாண்டு கலந்து பிரிந்த இவளுக்கு அதொன்றும் தோற்றாதே, துக்கத்தையிட்டு நிரூபிக்கவேண்டும்படியாயிருந்தாள். அநிந்திதாம்— அத்தலையைப் பிரிந்தாலிருக்கக்கடவபடியேயிருந்தாள். இப்படியிராதவன்று நிந்திதையேயாகாதே. வ்யபேதஹர்ஷாம்—ஹர்ஷம் குடிபுகுந்து போயிற்று' என்று தெரியு

தாயிருக்கை. பரிதீநமாநஸாம்—ஹர்ஷம் வந்தாலும் ஆஶ்ரயமின்றிக்கேயிருக்கை. ஶுபாம்—மண்திண்ணவந்த நகடுபோலன்றிறே குணாதிகவிஷயத்தைப் பிரிந்தாலிருக்கும்படி. கடலேறிவடிந்தாப்போலேயிருக்கிற அவ்விருப்புதனக்கே ஆலத்திவழிக்கவேண்டும்படியிருக்கை. நிமித்தாநி ஶுபாநி பேஜிரே—நிமித்தங்களானவை இத்தலைக்கு நன்மை சொல்லித் தந்தாம் ஸ்வரூபம் பெற்றன. நரம் ஶ்ரியா ஜுஷ்டமிவோபஜீவிந:— ஸாக்ஷாத் லக்ஷ்மிக்குக் கிஞ்சித்கரித்து ஸ்வரூபம்பெற்றன. என்போலவென்னில், அர்த்திகளாயிருப்பார் உதாரர்பக்கலிலே சென்று தந்தாம் ப்ரயோஜநம் பெற்று ஹ்ருஷ்டராமாபோலே. இப்படியாயிருந்தன நிமித்தங்களிவை.

அநும். 'ததாகதாம்' வாசாமகோசரமான தசையை அடைந்தவளென்றபடி. 'தாம்' என்றது ஸ்வரூபமாத்ரவாசி. 'வ்யதிதாம்' என்றதுக்கு ஆதிகர்மணிக்தப்ரத்யயமாய், வ்யஸநோபக்ரமத்தைச் சொல்லுகிறதென்றர்த்தமருளிச் செய்கிறார்—கீழித்யாதி. ப்ரக்ருதி—ஸ்வஸ்ததஶா. நிரூபகமாக பாவாந்தரம்—ஸமா இத்யாதி. உபஸர்க்கார்த்தம்—ஹர்ஷமித்யாதி. மண்ணித்யாதி. 'குர்வதீம் ப்ரபயா தேவீம் ஸர்வா விதிமிரா திஶ:' என்பது இங்கு அநுஸந்தேயம். நகடு—வைவர்ண்யமும், சோபையும், வ்யாதியும். 'ஶுபாநி நிமித்தாநி பேஜிரே' என்றந்வயித்தர்த்தம்—நிமித்தங்களானவையித்யாதி. 'பஜஸேவாயாம்' என்கிற தாத்வர்த்தத்தாலும், உபமாநத்தாலும்— ஸ்வரூபம் பெற்றனவென்றது. இப்படி அந்வயியாதே, நிமித்தங்களானவை ஶுபத்வங்களை அடைந்தன என்று கொள்ளுமளவில், 'ததாகதாம்' இத்யாதிகாரகங்களுக்கு அந்வயமின்றிக்கேயொழியும். ஆகையாலே ஏவம்பூதாம் 'ப்ராப்ய' என்று அத்யாஹரித்து யோஜிக்கவேணும். இப்படியும் ஒருருவிலே அருளிச்செய்தார்.

२०. सा तिर्यगूर्ध्वं च तथाप्यधस्तान्निरीक्षमाणा तमचिन्त्यबुद्धिम् ।
ददर्श पिङ्गाधिपतेरमात्यं वातात्मजं सूर्यमिवोदयस्थम् ॥ 31. 19.

ஸா திர்யகூர்த்வம் ச ததாப்யதஸ்தாந்நிரீக்ஷமாணா தமசிந்த்யபுத்திம் । ததர்ஶ பிங்காதிபதேரமாத்யம் வாதாத்மஜம் ஸூர்யமிவோதயஸ்தம் ॥

ப—ரை, ஸா = அந்த ஸீதை, திர்யக் = குறுக்காகவும், ஊர்த்வம் ச = உயரத்திலும், ததா = அவ்வாறு, அப்யதஸ்தாத் =

ஷீழிலும், நிரீக்ஷமாணா (ஸதீ) = பார்த்தவளாய், அவிஜ்ஞேயஸு ஸிம் = அறியமுடியாதபடி புத்தியின் ஆழமுள்ளவனும், வித்யாதிபதேः = வானரராஜனுகிய ஸுக்ரீவனுக்கு, அமாத்யம் = மந்திரியும், வாதாத்மஜம் = வாயுபுத்ரனுமாகிய, தம் = அந்த ஹனுமானை, உதயஸ்தம் = உதயகிரியிலுள்ள, ஸூர்யம் இவ = ஸூர்யனைப்போல, ததர்ஶ = கண்டாள்.

ஈடு. (தி-வாய் 2-4-1) ஸா தியக்மூர்த்வம் ததாவ்யபஸ்யத் — நினைவின்றிக்கேயிருக்கச்செய்தே வாராத்திருநாமம் செவிப்பட்டவாறே, விலங்கப் பார்ப்பது, மேலே பார்ப்பது, கீழே பார்ப்பதானள். கீழ்ப் பார்த்ததுக்குக் கருத்தென்னென்னில், 'பூமியைப் பிளந்துகொண்டு புறப்பட்டு ஒருவன் திருநாமம் சொல்ல ஸம்பாவனை உண்டாகில், அல்லாத திக்குகளிலுமுள்ளது' என்று பார்த்தாள். அன்றிக்கே, மாஸோபவாஸிகள் 'சோறு' என்றவாறே அலமாக்குமாபோலே பார்த்தாளென்னுதல். அங்ஙனன்றிக்கே, ஶிம்ஶுபாவ்ருக்ஷத்தை எங்குமொக்கப் பார்த்தாளென்னுதல். தமவிஜ்ஞேயஸிம் ததர்ஶ — அவன் வடிவு காண்பதற்கு முன்னே அகவாயை ஆயிற்று பரிச்சேதித்தது — 'இந்நிலததிலே புகுந்து இடங்கொண்டு நாமிருந்தவிடம் துருவி நிலைகுத்தவல்ல நெஞ்சையுடையவனன்றோ' என்று. வித்யாதிபதேரமாத்யம் — 'இவன் ஸ்வதந்த்ரனல்லன், ராஜகார்யமிவன் கையிலே உண்டு' என்றறிந்தாள். வாதாத்மஜம் — பெருமாளுக்கு ப்ராணங்களைக் கொடுக்கைபாலே 'இவன் ஸர்வர்க்கும் பிராணஹேதுவான வாயுபுத்ரன்' என்று தோற்றவிருந்தான். ஸூர்யமிவோதயஸ்தம் — லங்கையிலும் கிழக்கு வெளுக்க அடியிட்டது. 'பெருமாளாகிற ஆதித்யோதயத்துக்கு அருணோதயம்' என்னலாம்படி இருந்தான். ஆகையிறே லங்கை நாலுமதிலுக்கு நடுவு 'ஹரி ஹரி' என்ரபடியே இருக்கிறது.

அரும். விலங்கப்பார்ப்பது — இலங்கையைச்சுற்றும் பார்ப்பது. பூமியையித்யாதி. அயோக்யதாபுத்தி எங்குமுள்ளபடியாலும், ஶப்தம் ஶ்ரவிக்கையாலும் எங்கும் பார்த்தாளென்றபடி. அலமாப்பு — அதிக்லேஶம். அலமாக்

குமாப்போலே— தடமொருமாப்போலே. துருவி நிலைகுத்துகை— தேடி நி க்ஷேபமுள்ளவிடத்திலே குத்துகை. களவுபோன வஸ்துவை அடையாள மறிந்து பிடிக்கையாதல். இவனித்யாதி. ஸ்வதந்த்ரனாகில் இந்த அதிஸங்க ட ஸ்தலத்திலே வருவனோ பாதந்த்ரனாகையாலே, ஸ்வாமிதண்டபயத்தா லே வந்தான் என்று தாத்பர்யம். ராஜகார்யமித்யாதி. 'அமாத்யன்' என்று அறிகைக்கு ஹேதுவில்லாமையாலே இதுவே கருத்து. ஸூர்யஶப்தம் அருணவாசி. லங்கையிலுமென்பது ரஸோக்தி. 'ஶ்ரஜாலாம்ஶுமான் ஶூர:கபே ராமதிவாகர:' என்பது இங்கு அநுஸந்தேயம். உதயஸ்த்தம் ஸூர்யம் இவ வாதாத்மஜம் தத்ர்ஶ—உதயஸ்த்தனை அருணனை ஆதித் யோதய ஸூசகமாகக் காணுமாப்போலே, இவனையும் ராமோதய ஸூசக மாகக் கண்டாளென்றபடி. ஆகையிறே என்பது ரஸோக்தி. ஹரி—குரங் கு. அருணோதயவேளையிலே ஹரிஶப்தஶ்ரவணமும் உண்டே என்றபடி.

२१· किमर्थं तव नेत्राभ्यां वारि स्रवति शोकजम् ।
पुण्डरीकपलाशाभ्यां विप्रकीर्णमिवोदकम् ॥ 33. 4.

கிமர்த்தம் தவ நேத்ராப்யாம் வாரி ஸ்ரவதி ஶோகஜம் ।
புண்டரீகபலாஶாப்யாம் விப்ரகீர்ணமிவோதகம் ॥

ப—ரை. புண்டரீகபலாஶாப்யாம் = தாமரையிதழ்களி லிருந்து, விப்ரகீர்ணம் = உதிருகிற, உதகம் இவ = ஜலத்தைப் போல, தவ = உம்முடைய, நேத்ராப்யாம் = கண்களிலிருந்து, ஶோகஜம் - துக்கத்தாலுண்டான, வாரி = ஜலம், கிமர்த்தம் = எதற்காக, ஸ்ரவதி = பெருகுகிறது.

ஈடு. (தி-வாய்-2-4-1.) கிமர்த்தம் தவ நேத்ராப்யாம் வாரி ஸ்ரவதி ஶோகஜம்—'ஆநந்தாஶ்ருவுக்கு யோக்யமான கண்களா லே ஶோகாஶ்ரு ப்ரவஹிக்கிறது ஆர்குடி வேரற' என்று பட்ட ருளிச்செய்யும்படி. அன்றிக்கே, பிள்ளான் 'ஆரை சேதநராக்கக் கொண்டு' என்று பணிக்கும். புண்டரீகபலாஶாப்யாம் விப்ரகீர்ணமிவோதகம்—பாவியேன், இவ்வரவு உடைய பெருமான் வரவாய்க் காணப் பெற்றதில்லை.

அரும். 'ஶோகஜம்' என்றதிலே சோக்காக பட்டர் நிர்வாஹம்—ஆநந் தாஶ்ருவுக்கித்யாதி. 'கிமர்த்தம் நேத்ராப்யாம் வாரி ஸ்ரவதி' என்று ப்ர ஶ்நம் பூர்ணமாகையாலே, 'தவ நேத்ராப்யாம் ஶோகஜம்' என்றதுக்கு பா

வம்—உன்னுடைய கண்ணுக்கிது யோக்யமோ? ஆநந்தாஶ்ருவன்றோ யோக்யம் என்றிறே தோற்றுகிறதென்று கருத்து. ஆர்குடி—ராவணன்குடி வேர்பறியவோ, 'அபிஶாசமராக்ஷஸம்' என்று அவர்களெல்லார்குடியும் வேர்பறியவோ என்றபடி. 'புண்டரீக பலாஶாப்யாம்' என்றதிலே நோக்காகப் பிள்ளான் நிர்வாஹம். சேதநன் = போக்தா, ஆருடைய போகார்த்தமென்றபடி. இந்த யோஜனையில் கிம் க்ஷேபே. தாமரையிதழிலே முத்துபட்டாற்போலேயிருக்கிற இந்த ஸௌந்தர்யத்தை அநுபவிக்கைக்கு அர்ஹரான பெருமாள் அருகே யின்றிக்கேயிருக்க, இதுக்கு ப்ரயோஜநம் என்னென்றபடி. பிள்ளான் நிர்வாஹமே உத்தரார்த்தத்துக்குச் சேர்ந்திருப்பது என்னுமிடம் தோற்ற, உத்தரார்த்தம் எடுத்தது. இவ்வரவு—நான் வந்தவரவு. உடைய—ப்ராப்தரான.

22. स्नुषा दशरथस्याहं शत्रुसैन्यप्रतापिनः ॥ 33. 16.

𑌸𑍍𑌨𑍁𑌷𑌾 𑌦𑌶𑌰𑌥𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌶𑌤𑍍𑌰𑍁𑌸𑍈𑌨𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌿𑌨𑌃 ॥

ப—ரை. 𑌅𑌹𑌂 = நான், 𑌶𑌤𑍍𑌰𑍁𑌸𑍈𑌨𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌿𑌨𑌃 = பகைவர்களின் ஸைந்யத்தைத் தவிக்கச்செய்கின்ற, 𑌦𑌶𑌰𑌥𑌸𑍍𑌯 = தசரதருக்கு, 𑌸𑍍𑌨𑍁𑌷𑌾 = நாட்டுப்பெண்.

ஈடு (தி-வாய். 5-3-6.) 𑌸𑍍𑌨𑍁𑌷𑌾𑌦𑌶𑌰𑌥𑌸𑍍𑌯𑌾𑌹𑌂—பிராட்டி தனக்குப் பேற்றுக்குடலாக நினைத்திருப்பது 'சக்ரவர்த்தி மருமகள்' என்னுமித்தையே காணும். 𑌶𑌤𑍍𑌰𑍁𑌸𑍈𑌨𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌿𑌨𑌃—எங்கள் மாமனார் உண்டாகில் எனக்கு இவ்விருப்பு இருக்கவேணுமோ? ஶத்ருக்களும் ஜீவிக்க, ஜீவித்தவரோ அவர்.

23. समा द्वादश तत्राहं राघवस्य निवेशने ।
भुञ्जाना मानुषान् भोगान् सर्वकामसमृद्धिनी ॥ 33. 18.

𑌸𑌮𑌾 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶 𑌤𑌤𑍍𑌰𑌾𑌹𑌂 𑌰𑌾𑌘𑌵𑌸𑍍𑌯 𑌨𑌿𑌵𑍇𑌶𑌨𑍇 ।
𑌭𑍁𑌞𑍍𑌜𑌾𑌨𑌾 𑌮𑌾𑌨𑍁𑌷𑌾𑌨𑍍 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌿𑌨𑍀 ॥

ப—ரை 𑌅𑌹𑌂 = நான், 𑌤𑌤𑍍𑌰 = அங்கு, 𑌰𑌾𑌘𑌵𑌸𑍍𑌯 = ராமனுடைய, 𑌨𑌿𑌵𑍇𑌶𑌨𑍇 = க்ருஹத்தில், 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶 𑌸𑌮𑌾𑌃 = பன்னிரண்டு வருஷங்கள்முடிய, 𑌮𑌾𑌨𑍁𑌷𑌾𑌨𑍍 = மனிதர்களுக்குரிய, 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 = போகங்களை, 𑌭𑍁𑌞𑍍𑌜𑌾𑌨𑌾 (𑌸𑌤𑍀) = அநுபவித்தவளாய்க்கொண்டு, 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌿𑌨𑍀 = எல்லாவிதவிருப்பமும் பூர்த்தியடையப் பெற்றவளாய், (𑌆𑌸𑌂 = ஆயிருந்தேன்)

ஈடு (தி-வாய். 7. 3. ப்ரவேசம்) ஸமா த்வாதஸ தத்ராஹம்— இப்போது காதா(டா)சித்கதர்ஶநங்கூட அரிதாம்படியிருக்கிற நான், முன்பு சிரகாலம் அவரோடே அநுபவிக்கப்பெற்றேன் காண். ராகவஸ்ய நிவேஸநே—— எங்கள் மாமனாருடைய மாளிகையிலே அவர் தண்ணீர்த் துரும்பு அறுத்துத்தர நெடுங்காலம் அநுபவித்தேன். புஞ்ஜாநா மாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ —— 'ஸர்வாந் காமாந்' என்கிறபடியே எல்லாமநுபவிக்கப் பெற்றேன், அப்படியுமன்றிறேயிங்கு. 'பஹவோ ந்ருப கல்யாண குணா:' என்று குணங்கள் இரட்டித்தவிடமிறே இது.

அநும். 'ஸமா த்வாதஸ' என்று அத்யந்தஸம்யோகே த்விதீயை. அதனால் ப(ஹ)லிதம்—தண்ணீரித்யாதி. தண்ணீர்த்துரும்பு=ப்ரதிபந்தகம். ஸர்வகாமஸம்ருத்திநீ அபவம்— ஸமஸ்தகல்யாணகுணாநுபவத்தாலும் பூர்ணையானேனென்றபடி. 'ஸர்வாந் காமாந்' என்றது பரத்வத்திலேயன்றோ, இங்குண்டோவென்ன— அப்படியுமித்யாதி. இங்கு= ராமாவதாரத்தில். ப்ரமாணம் ஏதென்ன— பஹவ இத்யாதி.

24. प्रागेव तु महाभागः सौमित्रिर्मित्रनन्दनः ।
पूर्वजस्यानुयात्रार्थे द्रुमचीरैरलंकृतः ॥ 33-29

ப்ராகேவ து மஹாபாக: ஸௌமித்ரிர்மித்ரநந்தந: ।
பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத: ॥

ப—ரை. மஹாபாக:= மஹாபாக்கியவானும், மித்ரநந்தந:= நண்பர்களை மகிழ்விப்பவருமான, ஸௌமித்ரி: து = லக்ஷ்மணரோ, பூர்வஜஸ்ய = தமையனாருடைய, அநுயாத்ரார்த்தே = பின்னோடு செல்வதற்காக, ப்ராக் ஏவ = முன்னதாகவே, த்ருமசீரை: = மரவுரிகளாலே, அலங்க்ருத: = அலங்கரிக்கப்பட்டார்.

'பெ—வ்யா. (பெரியதிருவந்தாதி.1) ப்ராகேவ து மஹாபாக:— பெருமாளுக்கு மரவுரி கொடுத்தன்றோ இளையபெருமாளுக்குக் கொடுத்தது; இவரை 'ப்ராகே(மே)வ' என்பானென்னென்னில், தீப்தமக்நிமரண்யம் வா யதி ராம: ப்ரவேக்ஷ்யதி। ப்ரவிஷ்டம் தத்ர மாம் தேவி' என்று இளையபெருமாளுக்கிருக்கும் படியாலே சொல்

விற்று. பெருமாள் 'பித்ருவசநபரிபாலநம் பண்ணவேணும்'என்று மரவுரி சாத்தினார்; அவர் உடுக்கப் புகுகிறாரென்று உடுத்தவர்படி; அது வேறொன்றன்றோவென்கிறது. ஸஹாஸாமீ:— 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி'என்று ப்ரதிஜ்ஞைபண்ணினபடியே எல்லாவடிமையுஞ்செய்யலாம்படி திருவபிஷேகவிக்நம் பிறக்க பாக்யம் பண்ணினவர். ஸௌமித்ரி:—'ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய'என்றுசொன்னவள்வயிற்றிலே பிறந்தவர். இதந்நநு:— 'பெருமாளைப் பிரியாதே அடிமைசெய்யவேணும்'என்ற அநுகூலவர்க்கமெல்லாம் நாம் செய்யப் பெற்றிலோமேயாகிலும் இளையபெருமாள் எல்லாவடிமையுஞ்செய்யப்பெற்றாரிறே' என்று அநுகூலவர்க்கத்தை உகப்பிக்குமவர். வல்கலவஸநாத்ரயேணு த்ரமீமீரைவ்ம்ஸ்ரு:— பெருமாள்பின்னே ஸேவித்துப் போகைக்காக மரவுரி சாத்தி அத்தாலே அலங்க்ருதரானவர். பெருமாள் அபிஷேகம் தவிருகைக்கு மரவுரி சாத்தினார். இவர் கைங்கர்யஸாம்ராஜ்யத்துக்கு முடிசூடுகைக்கு மரவுரி சாத்தினார்.

அரும். தீப்தமித்யாதி. ப்ரவேசிப்பாராகில் என்று பவிஷ்யத்தாகவும், அங்கே ப்ரவேசித்தவனாக அறி என்று பூதமாகவும் சொன்ன இளைய பெருமாள் இனைவைப் பற்ற என்றபடி. 'து' ஶப்தார்த்தம் — பெருமாளித்யாதி. தாபஸவேஷமாக மரவுரி சாத்துகை அலங்காரமாமோ வென்ன—பெருமாளபிஷேகமித்யாதி.

25. स्वप्नेऽपि यद्यहं वीरं राघवं सहलक्ष्मणम् ।
पश्येयं यदि जीवेयं स्वप्नोऽपि मम मत्सरी ॥ 34-21

ஸ்வப்நேऽபி யத்யஹம் வீரம் ராகவம் ஸஹலக்ஷ்மணம் ।
பஶ்யேயம் யதி ஜீவேயம் ஸ்வப்நோऽபி மம மத்ஸரீ ॥

ப—ரை' அஹம் = நான், வீரம் = சூரனான, ஸஹலக்ஷ்மணம் = லக்ஷ்மணனோடு கூடிய, ராகவம் = ராமனை, ஸ்வப்நேऽபி = ஸ்வப்நத்திலாவது, பஶ்யேயம் யதி = பார்ப்பேனாகில், ஜீவேயம் = பிழைப்பேன். ஸ்வப்நோऽபி = ஸ்வப்நமும், மம = எனக்கு, மத்ஸரீ = விரோதி.

பெ—வ்யா. (நாச்சியார் திருமொழி. 6–1– ப்ரவேசம்) ஸ்வப்நேঽபி யத்³யஹம் வீரம்— ஸ்வப்நத்திலே கண்டாலும் துக்கநிவர்த்தகராக்கவல்லராய்த்து. ராகவம் ஸஹலக்ஷ்மணம்— பிரிகிறபோது இருவரையும் கூடப்பிரிகையாலே, காணுமிடத்திலும் இருவரையுங்கூடக் காணவேணுமென்றிறே ஆசைப்படுவது. அப்போது இருவரும் பிரிகையாலே, தங்களில் கூடினார்களோ இல்லையோ என்னும் அதிஶங்கை பண்ணியிருக்குமே. பஶ்யேயம் யதி³ ஜீவேயம் ஸ்வப்நேநாபி ததஸ்தத꞉—என்னவஸ்தை அறிந்து முகம் காட்டாமைக்கு அவரேயன்றிக்கே இதுவும் என்னை நலியவேணுமோ.

26. रामः कमलपत्राक्षः सर्वसत्त्वमनोहरः ।
रूपदाक्षिण्यसंपन्नः प्रसूतो जनकात्मजे ॥ 35-8.

ராம꞉ கமலபத்ராக்ஷ꞉ ஸர்வஸத்த்வமநோஹர꞉ ।
ரூபதா³க்ஷிண்யஸம்பந்ந꞉ ப்ரஸூதோ ஜநகாத்மஜே ॥

ப—ரை. ஜநகாத்மஜே = ஏ ஸீதாய், ராம꞉ = ராமன், கமலபத்ராக்ஷ꞉ = தாமரையிதழ்போன்ற கண்களையுடையவராய், ஸர்வஸத்த்வமநோஹர꞉ = எல்லாப்ராணிகளுடைய மனதுக்கும் இனியராய், ரூபதா³க்ஷிண்யஸம்பந்ந꞉ = ரூபம் தாக்ஷிண்யம் இவைகள் நிரம்பியவராய், ப்ரஸூத꞉ = பிறந்தவர்.

ஈடு. (தி-வாய்-2-2-5.) ராம꞉— ஸர்வாங்கஸுந்தரராயிருக்கை. கமலபத்ராக்ஷ꞉— அதிலே ஒரு சுழியாயிற்று அமிழ்ந்துவார்க்கு வேண்டுவது. அக்கண்ணழகுக்கு எல்லை என்னென்னில், ஸர்வஸத்த்வமநோஹர꞉—திர்யக்ஜாதியாய்ப் பணையோடு பணை தத்தித் திரிகிற என்னெஞ்சையும் அபஹரித்ததன்றோ. ரூபதா³க்ஷிண்யஸம்பந்ந꞉ ப்ரஸூத꞉—தேஹகுணங்களாலும் ஆத்மகுணங்களாலும் குறையற்று, அதுதான் ஔத்பத்திகமாயிருக்கும். ஜநகாத்மஜே—— 'அறவிஞ்சச் சொன்னாய், இனி இங்ஙன் சொல்லலாவாருண்டோ இல்லையோ' என்று பிராட்டிக்குக் கருத்தாக—ஜநகாத்மஜே_ பின்னை உம்மைச்சொல்லலாம், நீருமுண்டு.

அநும்.—ரமயதீதி ராம: என்று கருதி—ஸர்வாங்கேத்யாதி. அதிலே—ஸௌந்தர்யத்திலே. திர்யகித்யாதி. இதனால் ஸர்வஸத்வமனோஹரதை அநுமேயை என்று கருத்து. பணை—கிளை. தத்தி—குதித்து. 'ஸம்பந்ந:' என்கையாலே— குறையற்றென்றது. 'ஸம்பந்ந: ஸங் ப்ரஸூத;' என்கையாலே ஔத்பத்திகமென்றது. ரூபமென்பது தேஹகுணங்களுக்கும், தாக்ஷிண்யமென்பது ஆத்மகுணங்களுக்கும் உபலக்ஷணம். அறவிஞ்ச = மிகவுமதிகமாக. அடியே துடங்கி அவளை அபிமுகீகரித்துச் சொல்லாநிற்க, அநபேக்ஷிதமான ஸம்போதநத்துக்கு இதுவே கருத்தென்று தாத்பர்யம். உம்மைப் பெற்றவனேயிறே ஜநகனென்றபடி.

27 स श्रुत्वा वानरेन्द्रस्तु लक्ष्मणेनेरितं वचः ।
तदासीन्निष्प्रभोऽत्यर्थं राहुग्रस्त इवांशुमान् ॥ 35-36.

ஸ ஶ்ருத்வா வாநரேந்த்ரஸ்து லக்ஷ்மணேநேரிதம் வச: ।
ததாஸீந்நிஷ்ப்ரபோऽத்யர்த²ம் ராஹுக்³ரஸ்த இவாம்ஶுமாந் ॥

ப—ரை, ஸ: = அந்த, வாநரேந்த்ர: து = ஸுக்ரீவனோ, லக்ஷ்மணேந = லக்ஷ்மணனால், ஈரிதம் = சொல்லப்பட்ட, வச: = வார்த்தையை, ஶ்ருத்வா = கேட்டு, ராஹுக்³ரஸ்த: = ராகு விழுங்கிய, அம்ஶுமாந் இவ = ஸூர்யனைப்போலே, ததா = அப்போது, அத்யர்த²ம் = மிகவும், நிஷ்ப்ரப⁴: = ஒளியிழந்தவனாய், ஆஸீத் = ஆனான்.

ஈடு. (தி—வாய்.5-3-2.) ததாஸீதித்யாதி— 'பெருமாளும் பிராட்டியுமானவிருப்பிலே பிரிவு விளைந்தது' என்று இளையபெருமாள் மஹாராஜர்க்கு அறிவிக்க, அவ்வார்த்தை செவிப்பட,பெருமாள் திருமேனியில் வைவர்ண்யம் இவருடம்பிலே மாறிற்றாயிற்று. அத்யர்த²ம் நிஷ்ப்ரப⁴:—பிராட்டியைப் பிரிகையாலுண்டான ஆற்றாமையிறே பெருமாளுக்குள்ளது. இவர்தம்முடைய ஆற்றாமையைக் காண்கையாலும், பிராட்டியும் தாமுமாகச் சேரவிருக்கக் காணப் பெறாமையாலும் இவர்க்கவ்வளவன்றிக்கே மிக்கிருக்குமிறே. அபிதேய (அஷியெய) வசநமாயிற்று அர்த்தஸ்பர்ஶம். அத்யர்த்தமாவது— அபிதேயமல்லவென்கிறது.'

அரும். மாறிற்றாயிற்று=இங்குமுண்டாயிற்றென்றபடி. இவர்தம்முடைய=பெருமாளுடைய. தாமுமாக= பெருமாளுமாக. அபிதேயேத்யாதி. அத்யர்த்தம் வாசாமகோசரமாம்படி. வைவர்ண்யமாகிற அர்த்தம் வாக்குக்கு அவிஷயமாம்படியென்றபடி. இங்கு 'அதி'ஶப்தம் நஞர்த்தகம்.

## 28. रामसुग्रीवयोरैक्यं देव्येवं समजायत । 35-52.

ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத॥

ப—ரை. தேவி = ஸீதாதேவியாலே, ராமஸுக்ரீவயோ: = ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும், ஐக்யம் = ஒற்றுமை, ஏவம் = இம்மாதிரி, ஸமஜாயத = உண்டாயிற்று.

ஈடு. (தி-வாய் 5-9-5) 'வாநராணாம் நராணாம் ச கதமாஸீத் ஸமாகம:' குருகுலவாஸம் பண்ணாத திர்யக்குகளுக்கும் வஸிஷ்டசிஷ்யர்களான ராஜபுத்ரர்களுக்கும் இதொரு சேர்த்தி உண்டானதெங்ஙனே ஶாஸ்த்ரவஶ்யரிறே குருகுலவாஸத்துக்கு யோக்யர். மேல் இதுக்கு அடிசொல்லுகிறாள்—ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத—தங்களையுமறியாதே எங்களையுமறியாதே இங்ஙனே விழுந்து கொடுநிற்கக் கண்டோமித்தனை. அதாவது—இளையபெருமாள் கையும் வில்லுமாய் உணர்ந்துகொண்டு நின்று நோக்கக் கடவ அந்தப்புர கார்யத்துக்கு அடியேன் வரும்படியன்றோ அவர்கள் ஸங்கத(ஸம்ஹத)ரானபடி. இளையபெருமாள் அடிமையில்தப்பி நின்றவளவுக்கும் திருவடியைக் கொண்டு இழையிடவேண்டும்படியாகவிறே அவர் நிலவரானபடி. இளையபெருமாள் பொகிற்கையிறே பிரியவேண்டிற்று. ஏவம் ஸமஜாயத— தங்களளவிலும் பெருக்கப் பார்த்தார்கள். ஐஶ்வர்யம் அவனுக்குக் காடுபடும்படியிறே பார்த்தது.

அரும். இதுக்கடி என்றது ஸமாகமத்துக்கு அடியான 'ஏவம் ஸமஜாத்'என்ற நிர்ஹேதுகத்வமென்றபடி. 'ஏவம் ஸமஜாயத' என்றதுக்குமூன்று பாவம். தங்களையுமித்யாதி வாக்யத்வயம் முந்தினது. அதாவது—அந்தப்புரகார்யத்துக்குஅடியேன் வரும்படியன்றோஸங்கதரானபடிஎன்றுகருத்து. தங்களையுமித்யாதிக்கு— தங்கள் பெருமையையும் எங்கள் சிறுமையும் பாரா

தே அசிந்திதமாகச் சேரவிழுந்ததென்றபடி. அடியேன்— 'மத்த: ப்ரத்யவர:கஶ்சிந்நாஸ்தி ஸுக்ரீவஸந்நிதௌ' என்கிறபடியே எல்லாரிலும் தாழ்ந்தனான். இரண்டாம் பாவம்— இளையபெருமாளித்யாதி. அதாவது— ப்ராதாவான இளையபெருமாளுடைய அபராதத்தையும் க்ஷமிப்பிக்கும்படி என்று கருத்து. நிலவர்-அந்தரங்கர் மூன்றும் பாவம் — தங்களளவிலுமித்யாதி. அதாவது— தங்களுடைய ஐஶ்வர்யத்தைப் பற்றவும் அதிகமான ஐஶ்வர்யத்தை உடையராம்படி என்று கருத்து. காடுபடும்படி என்றது— ஸம்ருத்தமாம்படி யென்னுதல், காட்டுக்கெல்லாம் அதிபதியாம்படியென்னுதல். 'ஸுக்ரீவமகரோத் பதிம்' என்னக் கடவதிறே.

२९. गृहीत्वा प्रेक्षमाणा सा भर्तुः करविभूषणम् ।
भर्तारमिव संप्राप्ता जानकी मुदिताभवत् ॥ 36·4

க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா பர்த்து: கரவிபூஷணம்।
பர்த்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜாநகீ முதிதாபவத் ॥

ப—உரை. ஸா = அந்த, ஜாநகீ = ஸீதை, பர்த்து: = பர்த்தாவினுடைய, கரவிபூஷணம் = மோதிரத்தை, க்ருஹீத்வா = வாங்கி, ப்ரேக்ஷமாணா (ஸதீ) = பார்த்தவளாய்க்கொண்டு, பர்த்தாரம் = பர்த்தாவை, ஸம்ப்ராப்தா இவ = அடைந்தவள்போல, முதிதா = ஸந்தோஷமுள்ளவளாக, அபவத் = ஆனாள்.

வெ—வ்யா, (திருநெடுந்தாண்டகப்–15) பிராட்டி பெருமாளை ப்ரத்யபி(ஸி)ஜ்ஞாப்ரத்யக்ஷரூபத்தாலே அநுபவித்தாளிறே. க்ருஹீத்வா— தேஶாந்தரம்போன பந்துக்களைக் கண்டாற்போலே மேல் விழுந்தாள். ப்ரேக்ஷமாணா— வைத்த கண் மாறாதே பார்த்துக்கொண்டிருந்தாள். ஸா— இவன் வரவை ராவணன் வரவாக ஶங்கித்தவள்கிடீர் இப்படி மேல் விழுந்தாளென்கிறான். பர்த்து: கரவிபூஷணம்— அடியில், தன்னைக் கைப்பிடிக்கிறபோது தன் கையிலுறுத்தின மோதிரத்தை, அங்ஙனன்றியே, தானும் அவரும் ஸம்ஶ்லேஷிக்கும்போது போகத்தின் மிகுதியாலே ப்ரணய ரோஷம் தலையெடுத்து ஒருவரையொருவர் முகம் பாராதே ஊடியிருப்பார்கள், அப்போது இருவரையும்சேர்த்த மோதிரமென்னுதல். அதாவது— அப்போது நேர்முகம் பார்க்கையும் வார்த்தை

சொல்லுகையும் இருவருக்கும் அபேக்ஷிதமாயிருக்கும்; வேறு சேர்ப்பாரில்லையாகையாலே கையில் திருவாழிமோதிரத்தைக் கழற்றி பெருமாள் தரையிலே விழவிடுவர். அப்போது தான் 'அம்மோதிரத்தை விழவிட்டீர்காணும்' என்னும் வார்த்தையை உண்டாக்கின மோதிரமாகையாலே க(வ)டகமான மோதிரமென்கிறது. ப⁴ர்தாரமிவ ஸம்ப்ராப்தா — திருவாழி மோதிரத்தைக் கண்டவாறே பெருமாள் கையை நினைத்தாள். அதுக்கு ஆ. ரயமான தோளையும் அதுக்காச்ரயமான வடிவையும் நினைத்தாள். ஸந்நிதி (யி)யில் அவரைத் தழுவிக்கொள்ளுமாபோலே திருவாழிமோதிரத்தைத் தழுவிக் கொண்டாள். ப⁴ர்தாரமிவ — அவள் பெருமாளாகவே தழுவிக் கொண்டாள். இவன் பர்த்தாவைப்போலே என்கிறான். ஜாநகீ முதி³தா(அ)ப⁴வத் — ஸ்ரீ ஜநகராஜன் திருமகள் உகவாநின்றாள். உத(ூ)ர்க்கத்தில் என்னாய் விழப்புகுகிறதோ என்று பீ(ஹீ)தனாகிறான் ரிஷி.

ஈடு. (தி-வாய்- 6-2. ப்ரவேசம்) க்³ருஹீத்வா ப்ரேக்ஷமாணா — 'ராவணன் மாயையாலே வந்ததோ' என்னும் பயத்தாலே முற்படக் கண்வைக்க மாட்டாதேயிருந்தாள்; 'அத்தலையாலே வந்தது' என்று தெளிந்தபின்பு கண்மாற வைக்கை அரிதாம்படியிருந்தாள். ஸா ப்ரேக்ஷமாணா — 'வஸ்து ஷெவி' என்று கொண்டு முன்பு பார்வைக்கு க்ருஷி பண்ணவேண்டும்படியிருந்தாள், தானே கண் மாறவைக்கைக்கு க்ருஷிபண்ணவேண்டும்படியாயிருந்தாள். ப⁴ர்து꞉ கரவிபூ⁴ஷணம் — முதல்கைபிடிக்கிறபோது உடுத்தின படியை நினைத்தாள். கரவிபூ⁴ஷணம் — அணி மிகு தாமரைக்கையிறே. ஆபரணத்துக்கு ஆபரணம் காணும். ப⁴ர்தாரமிவ — இவன் இத்தைத் திருக்கையிலே கொடுத்தவாறே, இத்தோடே சேர்ந்த விரலையும் தோளையும்நினைத்தாள்; அந்நினைவு தான், தான் இக்கரையிலாளாகவும்அவர் அக்கரையிலாராகவும், கடல் இடையிலே கிடக்கிறதாகவும், அறிந்திலள்; ஒரு படுக்கையிலே கூடவிருந்ததாக நினைத்தாள். ஒரு சூது சதுரங்கங்களிலே தோற்றுத் தன் கையிலிருந்ததாக நினைத்தாள். 'இவ' என்கிறான் ரிஷி ஜநநீஸமாதி(யி)யாலே.

இவளுணர்ந்தால் என்படக்கடவனென்று. ஜாநகீ—ஶோகஹர்ஷங்களுக்கு இளையாத குடியிலே பிறந்தவள். மஹிதாஹவஸ்—ஹ்ருஷ்டையானுள்.

அரும். வர்த்தமானநிர்த்தேஶத்திலே கோக்காக பாவம்— ராவணனித்யாதி- 'ஸா' என்பதிலே நோக்காக பாவம்—பஶ்யேத்யாதி. பூஷணம் என்றே 'விபூஷணம்' என்கையாலே ஆபரணபூதமான காத்துக்கும் ஆபரணமென்கிறார்— அணியித்யாதி- 'க்ருஹீத்வா பர்த்தாரம் ஸம்ப்ராப்தா' என்று அந்வயம். பாவநாப்ரகர்ஷத்தாலே பர்த்தாவை ஸம்ஶ்லேஷித்ததாகவும் கூடவிருப்பதாகவும் நினைத்தால் மோதிரம் தன்கையில் வருவானென்னென்ன— ஒருசூதித்யாதி. 'இவ' என்பதர்க்கு இரண்டு தாத்பர்யம். முந்தினது—தாயாருடைய ஸம்ஶ்லேஷப்ரகாரத்தை ஸ்ப்புடீகரிக்கவொண்ணாதென்று நினைத்து 'இவ' என்கிறன் என்று. இரண்டாம் பாவம்—இவளித்யாதி. அதாவது— இந்த பாவனை குலைந்தால் 'இவர்களரியும்படியிருந்தோமோ' என்று லஜ்ஜித்து நோவுபடப் புகுகிறளோ என்றபடி. 'இவளுணர்ந்தால்' இத்யாதிவாக்யம் வ்யாக்யாதாவின் ஈடுபாடாதல்.

30. ततः सा ह्रीमती बाला भर्तुः संदेशहर्षिता ।
परितुष्टा विशालाक्षी ( प्रियं कृत्वा ) प्राशंसत महाकपिम् ॥36 6.

ததஃ ஸா ஹ்ரீமதீ பாலா பர்த்துஃ ஸந்தேஶஹர்ஷிதா ।
பரிதுஷ்டா ப்ரியம் க்ருத்வா ப்ராஶம்ஸத மஹாகபிம் ॥

ப—ரை ததஃ = பிறகு, ஹ்ரீமதீ = லஜ்ஜையுள்ளவளும், பாலா = பாலையும், பர்த்துஃ = பர்த்தாவின், ஸந்தேஶஹர்ஷிதா = தூதுவார்த்தையால் மகிழ்விக்கப்பட்டவளுமான, ஸா = அந்த ஸீதை, ப்ரியம் = ப்ரியமான ஸம்மானத்தை, க்ருத்வா = செய்துவிட்டு, பரிதுஷ்டா = ஸந்தோஷமுள்ளவளாய், மஹாகபிம் = பெரிய வாநரமான ஹநுமானை, ப்ராஶம்ஸத = புகழ்ந்தாள்,

பெ—வ்யா. (பெரியதிருமொழி.3-6-1.) ததஃ ஸா— திருவடி ராமவ்ருத்தாந்தத்தைச் சொல்லக் கேட்டவநந்தரம்உளளானள். ஹ்ரீமதீ— 'ஸதி யதிமுனி யஹ்யாஸ்த்விஹ ந்யாயேந' இதி ந்யாயேந ஸத்தை உண்டாகா, உண்டாமது உண்டாயிற்று. பாலா— ஹர்ஷம் பொறுக்கவொண்ணாதவளாயிற்று. பர்த்துஃ ஸந்தேஶஹர்ஷிதா—ரக்ஷகரான அவர்வார்த்தை கேட்டு ஹ்ருஷ்டையானாள். பரி

தூஷ்டா— அந்த ஹர்ஷம் புறவெள்ளமிட்டபடி. விஶாலாக்ஷீ ப்ராஶம்ஸத்— ஏத்தத் துடங்கினாள். லோகவிஸ்— கடலைவற்ற இறைக்கக் கோலுவாரைப்போலே.

31. कुशली यदि काकुत्स्थः किं नु सागरमेखलाम् ।
महीं दहति कोपेन युगान्ताग्निरिवोत्थितः ॥ 36—13.
குஶலீ யதி காகுத்ஸ்த: கிம் நு ஸாகரமேகலாம்।
மஹீம் தஹதி கோபேந யுகாந்தாக்நிரிவோத்தித:॥

ப—ரை. காகுத்ஸ்த:= ககுத்ஸ்த வம்ஶத்தில் பிறந்த ராமன், குஶலீ யதி= க்ஷேமத்துடனிருப்பதாயிருந்தால், கோபேந= கோபத்தால், யுகாந்தாக்நி: இவ= ப்ரளயகாலத்தீயைப் போல, உத்தித:= கிளம்பினவராய், ஸாகரமேகலாம் =ஸமுத்திரத்தை அரைநூண்மாலையாக உடைய, மஹீம்= பூமியை, தஹதி கிம் நு= கொளுத்துகிறாரா (கொளுத்தவில்லையே)

ஈடு. (தி—வாய் 6. 2. ப்ரவேசம்) காகுத்ஸ்த:— பரபரிப(ஹ)வம் பொறுத குடியிலன்றோ தாம் பிறந்தது. ‘பிறர்க்கு வந்தவை பரிஹரிக்குமத்தனையல்லது, தமக்கு வந்தது பரிஹரிக்கலாகாது’ என்றிருக்கிறாரோ. கிம் நு ஸாகரமேகலாம் மஹீம் தஹதி— ‘த்ரவத்ரவ்ய (த்ரவ த்ரவ்ய) த்துக்கு ஓரம்பும், கடின (கடிந) த்ரவ்யத்துக்கு ஓரம்பும் வேணும்’ என்றிருக்கிறாரோ. கடலில் நீரே நெய்யாக எரிக்கவல்ல அம்புடையவரன்றோ. ஒக்கக் கைபிடித்தவர்களாகிலும் பரிவட்டம் பேணியிருக்கும்படி வைத்தாரிறே, ராஜாக்களுக்கு பூமியும் ஸ்த்ரீபேர்லேயிறே. ஈஶ்வரர்கள் ஸ்ருஷ்டித்தபடி கிடப்பது இவர்கண் சிவக்குமளவுமாகாதே.

அரும். கடலித்யாதி— இப்படியிருக்க தாம் தஹியாதிருந்தது என் பக்கல் ஸ்நேஹமில்லாமை என்று கருத்து. ‘மேகலாம்’ என்றதுக்கு ஹார்த்தபாவம்— ஒக்க இத்யாதி. ஈச்வரர்களான ப்ரஹ்மாதிகள் ஸ்ருஷ்டித்ததை இவர் அழிக்கப்போமோ என்ன—ஈச்வரர்களித்யாதி. இது ‘கோபேந’ என்றதுக்கு பாவம். தஹதி கிம் நு—தஹியாரோ. தஹியாமையாலே ப்ரணயித்வமில்லை என்றபடி. அன்றிக்கே, ஈச்வரஸத்தை உண்டானால் ஜக

த்தை தவறியாரோ. ஆஶ்ரிதபரிபவம் பொறுப்பரோ வென்னுதல்—'த்வயி ஜீவத்யபி' இத்யாதிவத்.

32. न चास्य माता न पिता न चान्यः स्नेहाद्विशिष्टोऽस्ति मया समो वा।
तावत्त्वहं दूत जिजीविषेयं यावत्प्रवृत्तिं शृणुयां प्रियस्य ॥ 36-30

ந சாஸ்ய மாதா ந பிதா ந சாந்ய: ஸ்நேஹாத்விஶிஷ்டோ(அ)ஸ்தி மயா ஸமோ வா । தாவத்த்வஹம் தூத ஜிஜீவிஷேயம் யாவத்ப்ரவ்ருத்திம் ஶ்ருணுயாம் ப்ரியஸ்ய ॥

ப—ரை. அஸ்ய = இந்த ராமனுக்கு, ஸ்நேஹாத் = ஸ்நேஹத்தால், விஶிஷ்ட: = (என்னைவிட) மேற்பட்டவனாகவாவது, மயா ஸமோ வா = என்னோடு துல்யனாகவாவது, அந்ய: ச = வேறொருவனும், ந = இல்லை. மாதா ச = தாயாரும், ந = (இவ்வாறு) இல்லை, பிதா = தகப்பனாரும், ந = (இவ்விதம்) இல்லை, தூத = ஏ தூதனே, தாவத் து = அவ்வளவுவரையிலுமே, அஹம் = நான், ஜிஜீவிஷேயம் = உயிருடனிருக்க விரும்புகிறேன். யாவத் = எவ்வளவுக்குள், ப்ரியஸ்ய = ப்ரியனான ராமனுடைய, ப்ரவ்ருத்திம் = வார்த்தையை, ஶ்ருணுயாம் = கேட்பேனோ.

ஈடு (தி—வாய். 5-4-3) நசாஸ்ய மாதா—பிராட்டி திருவடியைக் கண்டவநந்தரம், பெருமாள் பக்கல் ப்ரணயரோஷத்தாலே 'இவன் அவர்வரவிட்ட ஆள்' என்று சீறிச் சிலவார்த்தை அருளிச்செய்ய, 'தேவரீரெழுந்தருளியிருந்தவிடம் தெரியாமலிருந்தாரித்தனையல்லது, பாவபந்தத்திலூற்றம் போராமையோ, அறிந்தபின்பு இனித்தாழ்த்தாராகிலன்றோ குற்றமாவது' என்று அச்சிவிட்டு ஆறும்படி சில வார்த்தை விண்ணப்பம் செய்து, பின்னையுந்தான் 'அவரைப் பிரிந்து பத்துமாஸமுண்டே, இவ்வளவும் முடியாமல் தரித்திருந்ததன்றோ தேவரும்' என்று தனக்குக் கருத்தென்னுமிடம் தோற்றவிருந்தான். அதுவோ உனக்கு நினைவு. வாராய், நாட்டார்க்கு மாதாவென்றும் பிதாவென்றும் ப்ராதாவென்றும் பந்துக்களென்றும் பலதலைத்திருக்கையாலே ஸ்நேஹமானது எங்கும் பாலிபாய்ந்திருக்கும்; பெருமாள் அங்ஙனன்றிக்கே,

எல்லார்பக்கல் பண்ணும் ஸ்நேஹத்தையும் என்பக்கலிலே ஒரு மடையாகச் செய்துவைக்கையாலே, எல்லாம் செய்தாலும் கடலே அணைசெய்து விரோதிவர்க்கத்தைக் கிழங்கெடுத்து 'தண்ணீர் தண்ணீர்' என்று வருகை தவிரார். தாபார்த்தன் விடாய்ப்பட்டுப் பந்தலேறவரக்கொண்டு தண்ணீர்ச்சாலுருட்டிக் கிடந்தால் பிழையாதாப்போலே, அவரிப்படிவரக்கொண்டு நானின்றிக்கே இருப்பனோ கில் பின்னை அவரைக்கிடையாது என்று அவர்க்காக என்னை நோக்கிக்கொண்டிருந்தேன். அவரைக் கண்டபிற்றை நாள் நானிருந்தேனாகிற்காண் நீ இவ்வார்த்தை சொல்லுவதென்றருளிறே. ஊ-ஜீச- முன்பு 'வாநர'என்றாப்போலே சொல்லிப்போந்தவள், இப்போது அவர்பக்கலுண்டான சிவிட்கு இவ்வளவுமேறிப் பாய்ந்து, அவர் வரவிட வந்தவனன்றோ நீயுமென்றருளிறே.

அரும். 'பின்னையுந்தான்' என்றது வார்த்தைப்பாடு. முழுச்சொல். பலதலைத்திருக்கை—பஹுமுகமாகை. எல்லாம் செய்தாலும் = என்னைப் பிரிந்து இவ்வளவும் தாழ்த்தாலும். எத்தனைநாட்சென்றாகிலுமென்னுமாம். அவரைக்கண்டபிற்றைநாளென்றது—அவருடைய 'அநாத (ஃ) ரகர்ப்பமான வ்ருத்தியாலே என்னை உபேக்ஷிக்கைக்கு உடலான அவருடைய மானஸ வ்யாபாரத்தை அறிந்தபிற்றை நாளென்றபடி.

33. इतीव देवी वचनं महार्थं तं वानरेन्द्रं मधुरार्थमुक्त्वा ।
श्रोतुं पुनस्तस्य वचोऽभिरामं रामार्थयुक्तं विरराम रामा ॥ 36—31.

𑌇𑌤𑍀𑌵 𑌦𑍇𑌵𑍀 𑌵𑌚𑌨𑌂 𑌮𑌹𑌾𑌰𑍍𑌥𑌂 𑌤𑌂 𑌵𑌾𑌨𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌮𑌧𑍁-
𑌰𑌾𑌰𑍍𑌥𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑍁𑌂 𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌵𑌚𑍋𑌽𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌰𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌵𑌿𑌰𑌰𑌾𑌮 𑌰𑌾𑌮𑌾 ॥

ப-ரை. 𑌰𑌾𑌮𑌾 = அழகிய, 𑌦𑍇𑌵𑍀 = ஸீதாதேவி, 𑌮𑌹𑌾𑌰𑍍𑌥𑌂 = பெருப்பயனையுடையதும், 𑌮𑌧𑍁𑌰𑌾𑌰𑍍𑌥𑌂 = இனிதான பொருளோடுகூடியதுமான, 𑌵𑌚𑌨𑌂 = வார்த்தையை, 𑌇𑌤𑌿𑌇𑌵 = இதுபோல, 𑌤𑌂 𑌵𑌾𑌨𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 = அந்த வாநரஶ்ரேஷ்டனை ஹநுமானைக் குறித்து, 𑌉𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 = சொல்லிவிட்டு, 𑌰𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 = ராமப்ரயோஜனத்தோடுகூடியதும், 𑌅𑌭𑌿𑌰𑌾𑌮𑌂 = இனிதுமான, த

ஸ்ய = அந்தஹநுமானுடைய, வச꞉ = வார்த்தையை, யதா = மறுபடியும், ஶ்ரோதும் = கேழ்ப்பதற்காக, விரராம = ஓய்ந்தாள்.

ஈடு. (தி-வாய் 6. 2. 4) ஊதிய— கீழே நெடும்போது சில பாசுரமிட்டுச்சொல்லிக்கொடு போந்தான்; ப்ரணயதாரையில் ஓடும து ரிஷிகளாயிருப்பார்க்கு நிலயன்றே; இப்புடைகளிலே என்றான். தேவீ— வல்லபைகளுடைய பரிமாற்றம் கடக்க நிற்பார்க்கே யன்று, தே(ஷ)ஶிகராணவர்கள் தங்களுக்கும் தெரியாதபடியாயிருக்கை. தம் வாநரோத்தமம்— இவனோடொக்கக்கடவார் ஒருத்தருமில்லை; ஶேஷத்வத்துக்கு முடிசூடினார் மஹாராஜரேயாகிலும், பாரதந்த்ர்யத்தின் எல்லையிலே நின்றான் இவனென்கை. இவ்வளவிலே இவள் முகம் பார்த்து வார்த்தை சொல்லப் பெற்றிலரிறே அவர். மஹார்தம்— அமூமி ஏன்னு, கைவாங்கவொண்ணாத படியாயிருக்கை. உக்தா— அவனும் அவனுடையவர்களும் வாழும்படி வார்த்தை சொன்னாள். ஶ்ரோதும் வசநஸ்தஸ்ய விரராம— 'அழிந்தாரை ஆக்கவல்லன்' என்னுமிடம் கண்டாள்; தான் அழிச்ச தலை உண்டாம்படி வார்த்தை சொல்லவல்லமை கேட்கவேணுமென்றிருந்தாள். ராமப்ரயோஜநயுக்தம்— ராமப்ரயோஜனயுக்தன், தன் கார்யம் செய்து தலைக்கட்ட வல்லானொருத்தன். விரராம— நெடும்போது தான் வார்த்தை சொல்லுகையினாலும், ஸ்வாமி வார்த்தை சொல்லும்போது மேலிட்டு வார்த்தை சொல்ல வொண்ணாமையினாலும் பேசாதே யிருந்தவனுக்கு அவகாஶப்ரதானம் பண்ணினாள். ராமா—இவ்விட்டு நீட்டுகையொழிய வார்த்தை சொல்லாதே யிருக்கிற போதை யழகை அவர்தாம் காணப்பெற்றிலோம்.

அரும்: இதிவேத்யாதி. அதுக்கு ஹேது எதென்ன— தேவீ என்று பதஸங்கதி. இவள் சொன்ன வார்த்தை விரக்தனுக்கேயன்றிக்கே, உட்புகுந்த நாயகனுக்கும் தெரியாதென்கிறார்— கடக்க இத்யாதி. தேசிகர் பெருமாள். 'தம்' என்றதுக்கு பாவம்— இவனோடித்யாதி. ஶேஷத்வத்துக்கித்யாதி— மஹாராஜர்க்குப் போலே யதேஷ்ட விநியோகார்ஹத்வ மாத்ரமன்றிக்கே, யதேஷ்டவிநியுஜ்யமாநரான திருவடி வாநரேந்த்ரரென்றபடி. 'மஹார்த்தம்' என்றத்தைப் பற்ற 'அமூமியென்னு' என்றது. ஸரஸமாகையாலே நிலமன்று என்று விடப்போகாதிருக்கை என்று கருத்து. அவனும்—திருவ

டியும். அவனுடையவர்களும்=பெருமாள் மஹாராஜர் தொடக்கமானவர்க ளும். அழிந்தாரையித்யாதி தான் அழியும் ஸமயத்தில் வந்தபடியாலே இவ ன் அழிந்தாரை ஆக்கவல்லன் என்று கண்டுகொண்டாள். ஆகையாலே 'நிர் த்தயர், ஸ்வார்த்தபரர்' என்று தான் ப்ரணயரோஷத்தாலே அழித்த பெரு மாளை இவன் நிர்த்தோஷராம்படி சொல்லட்டுமென்றிருந்தாளென்று கரு த்து. ராமப்ரயோஜநம்=ராமனுகிற ப்ரயோஜநம். தன்கார்யமித்யாதி- சே ஷியானவனை ஸமாதானம் பண்ணுகை சேஷபூதனுடைய கார்யமென்றபு டி. அது 'தஸ்ய' என்றதுக்குஅர்த்தமானல் ஸ்வரஸம் என்று சொல்லுவர். வெறுமனேயிருந்ததுக்கு ப்ரயோஜநம்—நெடுமித்யாதி. இவ்விட்டு நீட்டுகை யொழிய=இவள் வார்த்தை சொல்லுகிற போதையழகைத் திருவடி சொ ல்லக் கேட்கையன்றிக்கே.

34 न त्वामिहस्थां जानीते रामः कमललोचने । 36—33

ந த்வாமிஹஸ்தாம் ஜாநீதே ராம: கமலலோசநே ।

ப—ரை. கமலலோசநே= தாமரைபோன்ற கண்களையு டைய ஸீதாதேவியே, ராம:= ராமன், த்வாம் =உம்மை, இஹஸ் தாம்- இங்கு இருப்பவராக, ந ஜாநீதே= அறியமாட்டார்.

ஈடு (தி—வாய் 10–8–9) ந த்வாமிஹஸ்தாம் ஜாநீதே— நடு வே சிலர் சொல்லும்படியாய்த்து. எழுந்தருளியிருந்த இடமறி யாமையாலே ஆறியிருந்தாரித்தனைபோக்கி, அறிந்தால் ஒரு க்ஷ ணம் ஆறியிருப்பரோ. இது தான் என்வார்த்தை கொண்டறிய வேணுமோ— கமலலோசநே— உம்முடைய கண்ணழகேயன் றோ இதில் ப்ரமாணம். ராம:— அவரை அறியாதொழிய வேணு மோ. 'ந ஜீவேயம் க்ஷணமபி விநாதாமஸிதேக்ஷணாம்' என்றி ரே அவரிருப்பது. ராம: கமலலோசநே— அவரை அறியாமை யுமில்லை உம்மை நீர் கண்ணாடிப்புறத்திலும் கண்டறியாமையுமி ல்லை. கமலலோசநே—அன்றிக்கே, ஆர் எதிராகத்தான் இக்கண் சிவப்பும் சீற்றமுமெல்லாமென்னுதல்.

அரும்—'அஸிதேக்ஷணாம் விநா' என்கையாலே உம்முடைய கமலலோ சனங்களை விட்டிருக்கவல்லரோ என்றபடி. பதத்வயத்துக்கு தந்த்ரேண பா வம்—அவரையித்யாதி. 'கமலலோசநே' என்றதுக்கு அர்த்தாந்தரம்— அன் றிக்கேயிதி. இங்கு ப்ரணய ரோஷத்தால் வந்த சிவப்பையும் சீற்றத்தையும்

சொல்லுகிறது. கமலபதத்திற்கு செந்தாமரை அர்த்தம். முந்தின வர்த்தத்துக்கு நெய்தல்போன்ற கருங்கண்ணை யுடையவள் என்று பொருள்,

35. न मांसं राघवोभुंक्ते । 36-41.

ந மாம்ஸம் ராக⁴வோ பு⁴ங்க்தே ।

ப-ரை. ராக⁴வ꞉ = ராமன், மாம்ஸம் = மாம்ஸத்தை, ந பு⁴ங்க்தே = சாப்பிடுகிறதில்லை.

பெ-வ்யா. (நாச்சியார் திருமொழி. 11. 7.) பார்த்துப் பரிந்தூட்டுமவள் போனால் இனி யார் அவனைப் பரிந்தூட்ட. மாமலர் மங்கை மண நோக்க முண்ணுனிறே. அவள் போனால் இவனுக்கு ஊணில்லையிறே.

36. अनिद्रः सततं रामः सुप्तोऽपि च नरोत्तमः ।
सीतेति मधुरां वाणीं व्याहरन् प्रतिबुध्यते ॥ 36-44.

அநித்³ர꞉ ஸததம் ராம꞉ ஸுப்தோऽபி ச நரோத்தம꞉ ।
ஸீதேதி மது⁴ராம் வாணீம் வ்யாஹரந் ப்ரதிபு³த்⁴யதே ॥

ப-ரை. ராம꞉ = ராமன், ஸததம் = எப்போதும், அநித்³ர꞉ = தூக்கமில்லாதவர். நரோத்தம꞉ = மனிதரில் சிரேஷ்டரான ராமன், ஸுப்தோऽபி ச = தூங்கினாலும், ஸீதா இதி = ஸீதை என்று, மது⁴ராம் வாணீம் = இனிதான வார்த்தையை, வ்யாஹரந் (ஸந்) = சொல்லிக்கொண்டு, ப்ரதிபு³த்⁴யதே = உணருகிறார்.

பெ-வ்யா. (நாச்சியார் திருமொழி. 5. 4.) ராம꞉ அநித்³ர꞉- செல்வப் பிள்ளைகளாயிருப்பார் பாதிப்போது நித்திரையோடேயாய்த்துப் போதுபோக்குவது. இப்படியிருக்கிற நித்ரை இல்லையாய்த்து. சிறிது போதுறங்கிச் சிறிது போதுணர்ந்து தானிருப்பாரோ என்னில், ஸததம் அநித்³ர꞉ ஸுப்தோऽபி ச— ஆனால் இதென் சொல்லிற்றுகிறதென்னில், உணர்ந்திருக்கச்செய்தே உணர்த்தி அற்றிருக்கும்படியைச் சொல்லிற்றுகிறது. ,பாரகர்த்தானுஸந்தானுபாவம் ( பராமயோ நஸம்யாகாஷாம்) இருந்தபடி.

நரோத்தம:—அபிமதவிஷயத்தைப் பிரிந்தால் இப்படி நித்ரையற்று நோவுபடுகைபோலே காணும் புருஷோத்தமத்வமாவது. 'ந வ தெந விநா நித்ராம் லஹதெ வுருஷோத்தம:.'

ஈடு. (திருவாய். 2. 4. 5.) அநித்ர: ஸததம் ராம:—நித்ரையோடே காலக்ஷேபம் பண்ணவேண்டும் செல்வுடையவர், ஸததம் அநித்ரராயிருப்பர். 'ஸுப்தோஸி வ, ஸததம் அநித்ர:' என்று வைத்து, 'ஸுப்தோஸி வ' என்கிறது பாரகர்த்தானுஸந்தானு பாவத்தைப்பற்ற. நரோத்தம:—அபிமதவிஸ்லேஷத்திலிங்ஙனேயிருக்கைபோலே புருஷோத்தமத்வமாவது.

அரும்—'அநித்ர:' என்கிறது 'ஸததம்' என்கையாலே ராத்திரியுமில்லையாய், நித்யாக்நிஹோத்ர வ்யாவ்ருத்தி. செல்வு=ஸம்பத்து. அதாவது—ரமயதீதி ராம: என்ற வ்யுத்பத்தியாலே, ஸ்வவ்யதிரிக்தரை ரமிப்பிக்குமவர்க்கு ஸ்வயம் ரமிக்கும்படியான ஸம்பத்து விதத்தமிறே. அத்தைச் சொல்லுகிறதென்கை. 'அநித்ர:' என்று வைத்து 'ஸுப்தோSபி' என்றால் வ்யாஹதமுமாய், ஸ்நேஹத்துக்குக் கொத்தையுமாயிராதோ என்ன—ஸததமித்யாதி. பராகித்யாதி. வ்யதிரிக்த பதார்த்தங்களில் கண் வையாதே, பிராட்டியையே எப்போதும் த்யாகம் பண்ணிக்கொண்டிருப்பரென்று பாவம்.

37. स मया बोधितः श्रीमान् सुखसुप्तः परंतपः । 38. 24

ஸ மயா வொயித: ஸ்ரீமாநு ஸுவஸுப்த: வரந்தவ: ।

பதவுரை. ஸுவஸுப்த:= ஸுகமாக உறங்கின, பரந்தப:= பகைவரைக் கொளுத்துகின்ற, ஸ்ரீமாநு= சீமானாகிய, ஸ:= அவர், மயா= என்னால், வொயித:= உணர்த்தப்பட்டார்.

ஈடு. (திருவாய் 5–8–1) ஸ மயாவொயித: ஸ்ரீமாநு—சுன்று கிடந்த கிடைக்கு ஆலத்திவழிக்க வேண்டும்படியாயிருக்கை. "இவர் உணரில் செய்வதென்' என்று வயிறுபிடிக்க வேண்டும்படியிருக்கை.

38. कः क्रीडति सरोषेण पञ्चवक्त्रेण भोगिना । 38—26.

க: க்ரீடதி ஸரொஷெண வஞ்வவக்ரெண ஹொகிநா ।

ப—ரை. ஸரோஷேண = கோபங்கொண்ட, பஞ்சசீர்ஷ்ணா = ஐந்து முகமுள்ள, போகிநா = பாம்போடு, க: = எவன், க்ரீடதி = விளையாடுவான்.

பெ—வ்யா. (பெரியதிருமொழி 11. 8. 8.) க: க்ரீடதி— ஆஸ்ரிதவிஷயத்திலுண்டான ஓரத்தாலே ' அவர்கள் விரோதியைப்போக்குகைக்கு நானிருந்தேனே' என்கிற போதைச் சீற்றம் தோற்றியாயிற்று வார்த்தை அருளிச்செய்யும் போதிருப்பது. க: க்ரீடதி— தோற்றரவிலே முடிக்கவல்லதொரு மஹாஸர்ப்பம் உறங்குகிறவற்றை எழுப்பி அத்தோடே போது போக்கிப் பிழைக்கப் புகுகிறவன் தான் ஆர். ஸரோஷேண—அதுக்கு ஆற்றலுண்டாகப் பெற்றிடம் ஜீவிப்பாருடைய பாக்யத்தாலே யாயிற்று. பஞ்சசீர்ஷ்ணா— கண்டவிடமெங்கும் முடிக்கைக்குப் பரிகரமாயாயிற்றிருப்பது. போகிநா—அதெல்லாம் வேணுமோ? வடிவைக் காண அமையாதோ முடிக்கைக்கு.

39. स पित्रा च परित्यक्तः सुरैश्च समहर्षिभिः ।
त्रीँल्लोकान् संपरिक्रम्य तमेव शरणं गतः ॥ 38.33.

ஸ பித்ரா ச பரித்யக்த: ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி: ।
த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் கத: ॥

ப—ரை. ஸ: = அவன், (காகாஸுரன்) பித்ரா ச = தகப்பனாலும், ஸமஹர்ஷிபி: = மஹர்ஷிகளோடுகூடிய, ஸுரை: ச = தேவர்களாலும், பரித்யக்த: (ஸந்) = கைவிடப்பட்டவனாய், த்ரீந் லோகாந் = மூன்று உலகங்களையும், ஸம்பரிக்ரம்ய = சுற்றித்திரிந்துவிட்டு, தம் ஏவ = அந்த ராமனையே, ஶரணம் = சரணமாக, கத: = அடைந்தான்.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார். (அமலனாதிபிரான். 6-ம்பாட்டு) ஸ: — பெருமாள் திருவுள்ளத்திலே தீரக்கழிய அபராதத்தைப் பண்ண, அவர் குபிதராய் ப்ரஹ்மாஸ்த்ரத்தை விட, அது பின் தொடர்ந்து கொடு திரிய 'ஆவாரார் துணை',

என்கிறபடியே ரக்ஷகாபேக்ஷையுடைய காகமானது. விதாவ
வஶித்வத:—பெற்றவர்களுக்கு பர(ஹர)மன்றே ரக்ஷிக்கை என்
று பார்த்து, இந்த்ரன்பாடே சென்றான். 'இந்த்ரோ மஹேந்த்ர: ஸு
ரநாயகோ வா த்ராதும் ந ஶக்தா யுதி ராமவத்யம்' என்கிறபடி
யே எட்டுக்கதிரும் விட்டெரிகிற பெரியமதிப்பும் தானுமானாலும்
ராமவத்ய(ஷ்ய)னை ரக்ஷிக்கை அரிதாகையாலே, 'பூதாநாம் யோ
ऽவ்யய: பிதா' என்கிறபடியே நிருபாதி(யி)கரான தாய்க்கும் த
மப்பனுக்குமாகாதே, ஸர்வபூதஸுஹ்ருத்தான அவரளவிலே
ப்ராதிகூல்யம் பண்ணி அவர்க்குவத்ய(ஷ்ய)னானவனன்றே இவன்.
இங்குப்புகுருகையாவது என். 'ஶரணாய' என்னிலோவென்று
பயப்பட்டு புத்ரமித்ரகளத்ரங்களோடே கூட எல்லாருங்காண நா
ற்சந்தியிலே குடநீர் வழித்துவிட்டான். ஸபித்ரா— மாதாபி
தாக்கள் கைவிட்டவளவிலும் இவர்களுக்கு ப்ரீத்யர்த்தமாக பந்து
வர்க்கமான தேவதைகள் கொண்டுபோய்ச் சீராட்டக்கண்டு போ
ருமே; அந்த வாஸனையாலே அவர்கள் பாடே சென்றான். 'கஸ்ய
விப்ரியம் தேவாஶ்ச ஜாதரோஷஸ்ய ஸம்யுகே' என்கிறபடியே
அபராதம் அதுவாகையாலும் பெருமாளுக்கு அஞ்சுகையாலும்
மாதாபிதாக்கள் நேராகக் கைவிட்டார்களென்றறிகையாலும் அ
வர்களும் தள்ளிக் கதவடைத்தார்கள். ஸமஹர்ஷிபி:— இந்த்ர
ன் கைவிட்ட த்ரிஶங்குவையும் அகப்படத் தங்கள் தபஸ்ஸை
அழியமாறி ரக்ஷித்து, ஆந்ருஶம்ஸ்ய ப்ரதானராயிருக்கும் ரிஷிக
ள் பாடே சென்றான். அவர்களும் வத்யஹிம்ஸையிலே பண்ணுவ
தோர் ஆந்ருஶம்ஸ்யமுண்டோ வென்று கைவிட்டார்கள். த்ரீந்
லோகாந் ஸம்பரிக்ரம்ய— தமப்பனுக்கும் செல்லும் தேசமா
கையாலே ஆரேனுமொருத்தர் ஒருகாலாகிலும் புத்திபேதம்
(ஸாக்ஷிஹேது) பிறந்து பரிக்ர(ஹ)ஹிக்கக்கூடுமோவென்று
த்ரைலோக்யத்திலும் தச்சன் கூட்டின வாசல்கள்தோறும் ஒரு
கால் புக்காப்போலே ஒம்பதின் கால் புகுந்து திரிந்தான். அங்கு
ரக்ஷகராவாரைப்பெற்றிலன். தமேவ ஶரணம் கத:—கோபித்தா
ரேயாகிலும் நாராயணத்வப்ரயுக்தமான குடற்றொடக்கு உண்

டாகையாலே, அவர்கள் முகத்திற்காட்டில் அம்பு விட்டவர் முக மே குளிர்ந்திருக்கையாலும், ‘ஸக்ருதேவ—வ்ரதம் மம’ என்றருளிச் செய்துவைக்கையாலும், அந்தச் சீறின பெருமாளே அமையுமென்று அவரையே தனக்கு உபாயமாகப்பற்றினன். ‘ஸவ்யூஹ்ய தேஹ்யஃ’ என்கிறவிடத்திலே ஸர்வஶப்தம் அஸங்குசி தோக்தியாலே, பிறரால் வரும் பயத்தையும் தன்னல்வரும் பயத் தையும் ரக்ஷகனை என்னல்வரும் பயத்தையும் போக்கி ரக்ஷிக்கக் கடவனென்றபடி.

ஈடு.(தி-வாய்-3-7.8) ஸவித்ரா வெத்ராதி—ஈஶ்வரன் தன க்குமாகாதவன்றும் தஞ்சமாவான் தானேயாயிற்று. பெருமாள் ப க்கல் பண்ணின அபகாரத்தைக்கண்டு தமப்பன் கைவிட்டான். ச காரத்தாலே தாயும் கைவிட்டாளென்கிறது. அவள் பற்று முன் னுகப் பற்றுமிவன் விடும்போது அவளும் விட்டாளாகவேணுமி றே. வாத்ஸல்யமுறைத்தவிடத்திலேயிறே முந்தற விழுவது. ஆ கையாலே அவள் காலிலே முந்தறவிழுந்தான். அவள் மையெழு தி மஞ்சள் பூசிப் புறப்பட்டு நின்றுள், இவனும் குடநீர் வழிந்து நின்றான், வநிதஸ்ச—இவன் வ்ருத்தஹாநி கண்டு ‘பண்டே விட்டிலோமோ’ என்றார்கள். ஸுஹ்ருதஶ்ச—மாதாபிதாக்கள் கை விட்டாலும் ஸஜாதீயர் விடாதே கைக்கொள்ளுவார்களாயிற்று, ‘இவர்கள் முடிய விடுகிறார்களோ’ என்னுமத்தாலே ‘அவர்களுக் கு ப்ரியம்’ என்று நினைத்து, ஸமஹர்ஷய:—அவர்கள் விட்டா லும் விடாத ஆந்ருஶம்ஸ்ய ப்ரதாநரான ரிஷிகளும் விட்டார்கள். ஆந்ருஶம்ஸ்யத்துக்கு விஷயவ்யவஸ்தை உண்டிறே. பெற்றவர்க ள் கைவிட்டால் நாட்டார்க்குப் பணியன்றிறே காக்கை நோக்கு கை. ஆகையாலே, த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய—லோகங்களி ல் திறந்து கிடந்த வாசலெல்லாம் ஒருகால் நுழைந்தாற்போலே ஒன்பதின்கால் நுழைந்தானாயிற்று, ‘ஒருகாலல்லா வொருகாலாகி லும் க்ருபை பிறக்கக் கூடுமோ’ என்று; இவன் புகப்புக, தள்ளிக் கதவை அடைத்தார்கள். தமேவ ஶரணம் கத:—தன்மேலே ப்ர ஹ்மாஸ்த்ரத்தைத் தொடுத்துக் கொண்டு நிற்கிறவர் திருவடிகளி

லே வந்து விழுந்தானாயிற்று. அதாவது— 'அரிசினத்தாலீன்ற தாயகற்றிடினும் மற்றவள் தனருள் நினைந்தேயழுங்குழவி' என்கிறபடியே அவன் திருவடிகளை யொழியப் புகலில்லாமை. இப்படி எல்லா அவஸ்தைகளிலும் விஸ்வஸநீயன் ஸர்வேஸ்வரனே. (ஸ:— நீரிலே புக்கழுந்துவாரைப் போலே தாரகரானவரே பாதக(ஸாதக) ராய் அம்பு தொடுக்கும்படி சூழ்த்துக் கொடுகின்ற அவன். 9-1 ப்ரவேஸம்.)

அரும்— ஆகாதவன்றும்— ஈஸ்வரன் தனக்கும் ப்ரதிகூலனானவன்றும். அல்லது, ஈஸ்வரன் இச்சேதநனுக்குத் தஞ்சமாகாதவன்றும். தானே— ஈஸ்வரனே சகாரம் அநுக்த ஸமுச்சயபரம்; தாயைச்சொல்லுகிறது. 'பரி' என்கிற உபஸர்க்கார்த்தம்—அவளித்யாதி. குடநீர் வழிந்து — ஸஜலகடப்ரஹாரம்பண்ணி. 'ஸுரைஸ்ச' என்ற சப்தம் ப்ராதாந்யத்திலே. காக்கை நோக்குகை—காகத்தை ரக்ஷிக்கை. சாடுவில், காக்கை குத்தாமல் ரக்ஷிக்கை என்று த்வநி. 'ஸம், பரி' என்ற உபஸர்க்கார்த்தம்—லோகங்களித்யாதி.

40 स तं निपतितं भूमौ शरण्यः शरणागतम् ।
वधार्हमपि काकुत्स्थः कृपया पर्यपालयत् ॥ 38. 34.
ஸ தம் நிபதிதம் பூமௌ ஶரண்ய: ஶரணாகதம் ।
வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத் ॥

ப—ரை. காகுத்ஸ்த:= ககுத்ஸ்த வம்ஶத்தில் பிறந்த, ஶரண்ய: = ரக்ஷகனான, ஸ:= அந்த ராமன், பூமௌ = பூமியில், நிபதிதம் = விழுந்தவனும், ஶரணாகதம் = ஶரணமடைந்தவனுமான, தம் = அந்த காகாஸுரனை, வதார்ஹம் அபி = கொல்லத்தகுந்தவனாயிருந்தும், க்ருபயா = கருணையால், பர்யபாலயத் = காப்பாற்றினார்.

ஈடு. (தி-வாய். 2. 7. 6.) காகுத்ஸ்த:—தங்களிலும் க்ருபையே விஞ்சி ரக்ஷித்துக்கொண்டு போரும் குடியிலே பிறந்தவர். வதார்ஹமான காகத்துக்கு விட்ட அம்புக்குட்படக் கண்ணழிவு பண்ணுமவரிறே.

அரும்—தங்களிலும் க்ருபையே விஞ்சி—தங்களுக்கு ஹாநி வந்தாலும் க்ருபையே விஞ்சி. வதெத்யாதி. இது ரஸோக்தி. கண்ணழிவு—விளம்பமும், கண்ணையழிக்கையும். அதுவும் க்ருபா கார்யமென்றபடி.

ஈடு. (தி-வாய், 4. 5.7.) ஸ: =ரக்ஷணமே ஸ்வரூபமாயிருக்குமவர். தம் = ப்ராதிகூல்யத்திலே முதிற நின்றவனை. நிவதிதம் ஸுவௌ— தேவத்வத்தாலே தரையில் கால் பாவாதவன் போக்கற்றுத் தறையிலே வந்து விழுந்தான். ப்ரஜை தீம்பு செய்தால் பிதா ஶிக்ஷிக்கத்தொடர்ந்தால் மாதாவின் காலிலே விழுமாபோலே காணும் இவன் பூமியிலே விழுந்தது. ஶரண்ய: = ஏதேனும் தஶையிலும் ஶரணவரணார்ஹரானவர். ஶரணாகதம்—கண்வட்டத்திலே அநந்யகதிகத்வம் தோற்ற விழுந்துள்ளவனை. வயாஸுவேபி—பெருமாள்ஸித்தாந்தத்தாலும் வதார்ஹனே. காகுத்ஸ்த:— குடிப்பிறப்பால் வந்த நீர்மையாலே ரக்ஷித்தார். குடிப்பிறப்பு தண்ட்யரை (உணு) தண்டிக்கைக்கும் உடலாயிராதோ என்னில், க்ருவயா— நாம் தொடங்கின கார்யம் ப்ரபலகர்மத்தால் தலைக்கட்ட வொண்ணாதாப்போலே, அவரும் க்ருபாபரதந்த்ரராகையாலே நினைத்தவை தலைக்கட்டமாட்டார். அவன் க்ருபை விளையும் பூகத (ஸுமத) னுறைன். அதுக்கு மேலே க்ருபை விளைந்தது. இனி அவர் எவ்வழியாலே தண்டிப்பர்.

அரும்—இரு தச்சப்தமும் ப்ரஸித்தியிலே. 'நிபதிதம்' என்றாலே அர்த்த ஸித்தமாயிருக்க, 'பூமௌ' என்று சொன்னதற்கு பாவம்—தேவத்வத்தலித்யாதி. பாவாத—வைக்கப் போகாத. கண் வட்டத்திலிதி. 'ஶரணம்' என்று க்ருஹமாய், அதாவது—இவர் கண்வட்டத்தைச் சொல்லுகிறதென்றபடி. குடியித்யாதி. ஶரணுகதனை இந்த்ரனுக்காக அஸுரர்களை நிக்ரஹித்த தயை. விளைந்தது—விளைந்தால் தண்டிப் பாரில்லையே என்று த்வநி.

41. आनृशंस्यं परो धर्मस्त्वत्त एव मया श्रुतः । 38. 41.

ஆந்ருஶம்ஸ்யம் பரோ தர்மஸ்த்வத்த ஏவ மயா ஶ்ருத: ॥

ப—ரை, ஆந்ருஶம்ஸ்யம் = பிறர்துக்கம் ஸஹியாமை, பர: தர்ம: = சிரேஷ்டமான தர்மம், (என்று) த்வத்த: ஏவ = உம்மிடமிருந்தே, மயா = என்னால், ஶ்ருத: = கேழ்க்கப்பட்டது.

பெ—வ்யா. (பெரிய திருமொழி 9. 3. 4) கலக்கிறபோது சொல்லிற்றொரு வார்த்தையுண்டு. அதாகிறது—, சிலரோடே சிலர் கலந்து பிரிந்தால் பின்னை அவர்கள் படும் வ்யஸநம் கண்டால் நான் பொறுக்கமாட்டேன் காண். இதுகாண் என் ப்ரக்ருதியிருக்கும்படி' என்றுகொண்டு சொல்லி வைத்தானாயிற்று, பிரிந்து இவள் நோவுபடும்போது 'இதுவன்றோ இவன் சொன்னது' என்றுகொண்டு ப்ரத்யபிஜ்ஞை பண்ணித் தரிக்கைக்காக. இதுதான் ஓராளின் வாயிலே இட்டுகேட்டுகையன்றிக்கே, அவர்தம் வாயாலே சொல்ல நான் என் செவியாலே கேட்டேனென்கிறாள்.

பெ—வ்யா, (நாச்சியார் திருமொழி. 5. 5.) ஸுதம் ஸ்ரவணயோ: — நீரும் நானுமாய் ஓடமேற்றிக்கூலிக்கொள்ளுமளவாயிருக்கச்செய்தே, 'தர்மங்களில் நீர் விரும்பியிருப்பதென்?' என்று கேட்டேன், 'பிறர் நோவுபடப் பொறுக்கமாட்டாத இதுவே காண் நாம் வெளிறுகழிந்த தர்மமாக நினைத்திருப்பது' என்றருளிச் செய்தீர். ஸுதம் மம ஸ்ரோத்ரக:— இதுதான் உம்முடைய ஆளான திருவடிவாயிலே இட்டுகேட்டுகையன்றிக்கே, உம்முடைய வாயாலே அருளிச்செய்ய, நான் செவியாலே கேட்டேன். 'இதுதான் பிறர்மேலே ஏறிட்டு, நீர் நம்மைப் பிரிந்து நோவுபடவிட்டீர். ஏங்காண்' என்று சொன்னாரானார் அவர் பிரிந்து நோவுபடவிட்டிருந்தானென்னுமதைப்பற்ற.

அரும். கூலிகொள்ளுகை = அநுபவம் விஞ்சினதசை. அப்போது பெருமாள் சொன்னதுக்கும் இப்போது பிராட்டி சொன்னதுக்கும் கருத்தென்னென்ன அருளிச்செய்கிறார்—இதுதானித்யாதி. பிறர்மேலே ஏறிடுகை பிறர் துக்கப்படவிட்டிரோமென்கிற வ்யாஜத்தாலே, உன்னை விட்டிரோமென்றபடி. 'இதுதான்' என்றது ஆந்ருஶம்ஸ்யத்தை.

कौसल्या लोकभर्तारं सुषुवे यं मनस्विनी ।
तं ममार्थे सुखं पृच्छ शिरसा चाभिवादय ॥ 38. 56.

கௌஸல்யா லோகபர்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ ।
தம் மமார்த்தே ஸுகம் ப்ருச்ச ஶிரஸா சாபிவாதய ॥

ப-ரை. மநஸ்வினீ = விஶாலமநஸ்ஸையுடைய, கௌஸல்யா = கௌஸல்யாதேவியார், லோகநாதம் = உலகங்களுக்கு நாத ஞை, யம் = எவனை, ஸுஷுவே = பெற்றாரோ, தம் = அவனை மமார்த்தே = என்நிமித்தமாக, ஸுகம் = ஸுகத்தை, ப்ருச்ச = கேள்; ஶிரஸா = தலையால், அபிவாதய = நமஸ்காரமும்பண்ணு.

ஈடு (தி-வாய். 5. 3, 7.) கௌஸல்யாதி—நாட்டில் ஸ்த்ரீகள் 'இங்கிருக்கும் நாளைக்கு நமக்கு ரக்ஷகனாய்ப் பின்பு நர கத்தில் புகாதபடி பரிஹரிக்கைக்கும் ஒரு பிள்ளை வேணும்' என்று நோன்பு நோற்றுப் பெறுவர்கள். அங்ஙனன்றிக்கே, எங்க ள் மாமியார் தந்நெஞ்சிலுண்டான அகலத்தாலே 'லோகத்துக்கா க ரக்ஷகனாக வல்லதொரு பிள்ளையைப் பெறவேணும்' என்று நோன்பு நோற்றுப் பெற்றார். அவர் நினைவு தப்புமோ. அந்த லோகத்துக்குள் அந்தர்ப்பூதையல்லேனோ நான். இனி, 'நாட்டி ல் ஸ்த்ரீகள் பர்த்தாக்கள் ஸமர்த்தரானபோது ஆதரித்தும், அஸ மர்த்தரானபோது உபேக்ஷித்தும் போரக் கடவர்களாயிருப்ப தொன்றுண்டு. நீர் எல்லா அவஸ்த்தையிலும் அவரை ஆதரித்து ப் போரும் கிடீர்' என்று அவர் என்னைக் குறித்து சொல்லிவிட் டார். நானுமப்படியே செய்துபோராநிற்க, கிண்ணகத்தில் குமி ழிக்கிழே சாவிபோமாபோலே, தாம் என்னுடைய ரக்ஷணத்தில் நெகிழ நின்றது அவர்நினைவு ஸங்குசிதமாகவோ என்று சொன் னேனென்று சொல்லு. மம அர்த்தே ஸுகம் ப்ருச்ச—எங்களு டைய ரக்ஷணத்துக்கு நாங்கள் ப்ரார்த்தித்துப் பெற வேண்டுவ தொன்றில்லையிறே, அதுவுமவர்நினைவாலுண்டாகையாலே. இனி, க்ரமப்ராப்திபற்றாமையாலுள்ளதிறே இப்போது படுகிறது. தாம் உளராக எங்களுடைய ரக்ஷணம் தப்பாதிறே. ஆனபின்பு தம்மு டைய உண்மையை ஆஶ்ரயிக்கையிறே இனி எங்களுக்குள்ளது. அங்குத்தைக்கு ஒரு குறைகளில்லையே என்று கேட்டேனென்று சொல்லு. ஶிரஸா அபிவாதய—நாட்டாரளவன்றிக்கே, தாம் விசேஷித்து எங்களைக் கைப்பிடிக்கையாலுண்டான வாசி நாங் கள் பெறுதபின்பு, நாட்டாரோபாதியாகிலும் பெறக்குறையில்லையி

றே. இனி நாட்டார் பெறுவது பெறப்பார்த்தால், அவர்கள் தம் பக்கல் செய்யுமத்தையும் செய்யவேணுமிறே. ஆனபின்பு, நாங் கள் எங்கள் தலையாலே தந்திருவடிகளிலே வணங்கினோமென்று நீ எனக்காக அவர் திருவடிகளிலே விழு என்றுமருளிச்செய்தார். 'இதுதான் ப்ரணயரோஷம் தலையெடுத்துச் சொல்லுகிற வார்த் தையோ, அபேக்ஷை தோற்றச்சொல்லுகிற வார்த்தையோ' என் ன, 'கீழ் திருவடி வந்தபோது ப்ரணயரோஷத்தாலே வந்த சிவி ட்குத் தோற்றச் சொன்ன வார்த்தைகளுடைய மாறும்படி குளிர அவன் வார்த்தை சொல்ல, அநந்தரம் திருவுள்ளத்திலே ஒரு ப்ர ஸாதம்(வ ஸாதம்) பிறந்து ப்ராப்தியில்லாமையால் வந்த அநவா ப்தியுங்கிடக்க அருளிச்செய்த பாசுரம்' என்றருளிச்செய்தார்.

அரும்—கெஞ்சிவிதி. 'மநஸ்விநீ' என்பதில் இசிப்ரத்யம் பூமாவில் எ ன்று கருத்து. தப்பவோ=)தப்பலாமோ. கிண்ணகம்= ப்ரவாஹம். குமி ழி= ப்ரவாஹோத்பத்தி ஸ்தாநம். அழைத்துக் கொள்ளவேணு மென்று சொல்லாதே. 'ஸுகம் ப்ருச்ச' என்று என்பானென்னென்ன— எங்களு டைய வித்யாதி. தன் பேற்றுக்குடலாக அஞ்சலி பண்ணுமது சேருமோ வென்ன க்ரமப்ராப்தியித்யாதி ஆஶாஸிக்கை= மங்களாஶாஸநம் பண் ணுகை. இத்தால் பத்நீத்வ ப்ரயுக்தமான ப்ரணய ரோஷத்தாலன்றிக்கே, 'அஹம் ஶிஷ்யா ச தாஸீ ச' என்கிறபடியே ஶேஷத்வாநு குணமாகச் சொன்னுளென்றபடி. 'ஶிரஸா அபிவாதய, ஸுகம் ச ப்ருச்ச' என்று அந் வயம் விவக்ஷிதம். இதுக்கு நியாமகம்— 'ஸுகம் ப்ருச்ச' என்றதுக்கு அ ருளிச்செய்த அர்த்தத்துக்கு அநந்தரம் 'ஶிரஸா சாபிவாதய' என்றதுக்கு இப்படி அர்த்தம் அருளிச்செய்கை அநுப பந்நமாகையால். ப்ரணய ரோஷ த்தால் சொன்னது ஶிஷ்டாசாரமாகுமோ என்ன—இதுதானித்யாதி.

43. जीवन्तीं मां यथा रामः संभावयति कीर्तिमान्।
तत्तथा हनुमन्वाच्यो वाचा धर्ममवाप्नुहि ॥ 39. 10.
ஜீவந்தீம் மாம் யதா ராம: ஸம்பாவயதி கீர்திமாந்।
தத்ததா ஹநுமந்வாச்யோ வாசா தர்மமவாப்நுஹி॥

ப—ரை. கீர்திமாந் = புகழ்படைத்த, ராம: = ராமன், ஜீவந் தீம் = பிழைத்திருக்கும், மாம் = என்னை, யதா = எப்படி, ஸம்பா வயதி = கொண்டாடுவரோ, ததா = அப்படி, தத் = அந்தவிஷய

த்தை, ஹநூமந் = ஏ ஹநுமானே, வாக்மீ = சொல்லத்தகுந்தவர். வாசா = வாயினால், யத் தர்மம் = தர்மத்தை, அவாப்நுஹி = அடையக்கடவாய்.

ஈடு. (திருவாய்-6—8 ப்ரவேசம்) பரபரிபவம் பொறுத குடிப்பிறப்புடையவரிறே. அதிலே தமக்கு வந்த அவத்யம் பரிஹரிக்கச் சொல்லவேண்டாவே. கடலை யணைசெய்து ராவணாதிகளை நிரஸித்துத் தாம் வரக்கொள்ள, இத்தலை வெறுந்தறையாய்க் கிடவாமே செய்ய நினைத்தாராகில், ஏற்கவே பரிஹரித்துத் தம்புகழை நோக்கிக்கொள்ளச் சொல்லென்று சொன்னாளிறே.

44. शरैस्तु संकुलां कृत्वा लङ्कां परपुरार्दनः ।
मां नयेद्यदि काकुत्स्थस्तत्तस्य सदृशं भवेत् ॥ 39. 30.

ஶரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபுரார்தந: । மாம் நயேத்யதி காகுத்ஸ்தஸ்தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத் ॥

ப—ரை. பரபுரார்தந: = பகைவர் பட்டணத்தை அழிப்பவரான, காகுத்ஸ்த: = ராமன், லங்காம் = லங்கையை, ஶரை: து = பாணங்களாலேயே, ஸங்குலாம் = நிறைந்ததாக, க்ருத்வா = செய்துவிட்டு, மாம் = என்னை, நயேத் யதி = அழைத்துக்கொண்டுபோவாரேயாகில், தத் = அது, தஸ்ய = அவருக்கு, ஸத்ருஶம் = உசிதமாக, பவேத் = ஆகும்.

ஈடு (திருவாய். 5. 4. 7.) ஶரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம்— திருவடி பிராட்டியை 'பெருமாள் பாடேற இனி எழுந்தருள வமையாதோ' என்ன, ராக்ஷஸ ஸங்குலையான வித்தை ராமஶரஸங்குலையாக்கிக் காண் நாம் போவது, வேற்று மனிசர் முகத்திலே விழித்துப் போகவோ. பரபுரார்தந:— அவரோடே விரோதித்து இதுக்கு முன்பு ஜீவித்துப் போந்ததுமொரு படைவீடுண்டோ. மாம் நயேத்யதி— 'நயாமி பரமாம் கதிம்' என்கிறவர் இரண்டு வார்த்தை சொல்லுவரோ. காகுத்ஸ்த:—இர

த்ராதிகள்விரோதிகளையும் போக்குங்குடியிலே பிறந்தவர் ஸ்வ கார்யத்தில் சோர நிற்பரோ. தத்ஸத்ருசம் ஸமர்த்தம் — அவர்க்கு அநுரூபமானவற்றைச் செய்து போகக்கடவ நாம், நம்முடைய ஆற்றாமை பரிஹரிக்கைக்காக அவர்க்கு நிறக்கேடானவற்றைச் செய்யவோ. ‘ராமமஹிஷியை ஒரு ராக்ஷஸன் பிரிக்க, அவள் ஶபித்துப் போனாள்’ என்னுதல், ‘ஒரு குரங்கு மீட்டது’ என்னுதல் செய்கையாகிறவிது, அவர் வில்வலிக்கு வசையாம் காண்; அவர் வம்ஶத்துக்குக் கொத்தையாம் காண். அவர் விஷயத்தில் ராவணன் செய்தத்தை நாமும் செய்யவோ. ராமத (ய) நத்தை ‘அன்னது’ என்றாரோடு ஒப்பர்களிறே அவருடைய ரக்ஷணத்தைத் தந்தலையிலே ஏறிட்டுக் கொள்ளுமவர்கள்.

அரும் — இனி = விஶ்வரூபத்தைக் காட்டியபிறகு. ‘காகுத்ஸ்த:’ என்றத்தைப் பற்றி சாடு — அவர் வம்ஶத்துக் கித்யாதி. வம்ஶம் மூங்கிலாய், தனுஸ்ஸைச் சொல்லுகிறது.

45. यथा तं पुरुषव्याघ्रं गात्रैः शोकाभिकर्शितैः ।
संस्पृशेयं सकामाहं तथा कुरु दयां मयि ॥ 40. 3.

யதா தம் புருஷவ்யாக்ரம் காத்ரை: ஶோகாபிகர்ஶிதை: । ஸம்ஸ்ப்ருஶேயம் ஸகாமாஹம் ததா குரு தயாம் மயி ॥

ப — ரை. ஸகாமா = ஆசையுள்ள, அஹம் = நான், புருஷவ்யாக்ரம் = புருஷ ஶ்ரேஷ்டரான, தம் = அந்த ராமனை, ஶோகாபிகர்ஶிதை: = துக்கத்தால் இளைத்த, காத்ரை: = (எனது) அவயவங்களாலே, யதா = எப்படி, ஸம்ஸ்ப்ருஶேயம் = தொடுவேனோ, ததா = அப்படி, மயி = என்னிடத்தில், தயாம் — கருணையை, குரு = பண்ணு.

பெ — வ்யா. ( திருவிருத்தம். 54 ) யதா தம் புருஷவ்யாக்ரம் — பருவம் கழிந்ததிறே, இனி இவர்க்குச் சொல்லித்தான் செய்வதென்னென்று இருக்கவேண்டா; நினைத்தபோதே நினைத்ததெல்லாம் செய்து தலைக்கட்டவல்ல ஆண் புலி. கா

டெத்ரு:—கண்டாயிறே ஒரு நீர்ச்சாவியாய் இவை உருவிக்கிடக்கிறபடி. சிலர் பட்டினிவிடச் சிலர் ஜீவித்தவோபாதி விடாய்த்த இக்கரணங்களைக் கொண்டு முடிந்துபோய், வேறொரு ஶரீரபரிக்ரஹம்பண்ணி இவரை அநுபவிக்க விருக்கையன்றிக்கே, விடாய்த்த இவற்றைக்கொண்டே ஸ்பர்ஶிக்கும்படி பண்ணவேணும். ஸகாமோऽஹம்— அவரைப் போலே ‘வரில் பொகடேன், கெடில் தேடேன்’ என்றிருக்குமளவல்லேன் நான். ததா க்ருதம் ஹ்யயம் மயி— அவருடைய ஶக்தியால் குறையின்றிக் கேயிருக்கச் செய்தே, இவ்வளவில் கார்யகரமாகக் கண்டிலோம். உன் க்ருபையாலே அதுவும் பலிக்கும்படி பண்ணித்தரவேணும்.

அரும்— பருவம்=காலம். காலம் போயிற்று, ஶத்ரு மிகுத்ததென்றிருக்க வேண்டாவென்றபடி. வரிலித்யாதி. ஸங்கமாத்ரத்தை யுடையவரிருந்தாற்போலே யிருக்குமளவல்லேன் நானென்றபடி.

46. कार्ये कर्मणि निर्दिष्टे यो बहून्यपि साधयेत् ।
पूर्वकार्याविरोधेन स कार्यं कर्तुमर्हति ॥ 41. 5.

கார்யே கர்மணி நிர்தி3ஷ்டே யோ ப3ஹூந்யபி ஸாத4யேத் । பூர்வகார்யாவிரோதே4ந ஸ கார்யம் கர்துமர்ஹதி ॥

ப—ரை. ய: = எவன், கார்யே = காரியம், நிர்தி3ஷ்டே (ஸதி) = குறிப்பிடப் பட்டபொழுது, பூர்வகார்யாவிரோதே4ந = முன் காரியத்துக்கு விரோதமில்லாமல், ப3ஹூநி அபி = வெகு காரியங்களையும், ஸாத4யேத் = செய்து முடிப்பனோ; ஸ: = அவன், கார்யம் = காரியத்தை, கர்தும் = செய்ய, அர்ஹதி = தகுதியுள்ளவன்.

பெ—வ்யா. (திருப்பல்லாண்டு. 9) ஸ்வாமி ஏவின கார்யத்தைக் குறையச் செய்யுமவன் அத(ய)மன்; அத்தைக் குறையாமல் தலைக்கட்டுமவன் மத்யமன்; அதுக்கு மேலே, அதுக்கு அவிருத்தமான காரியங்களையும் விசாரித்துச் செய்து தலைக்கட்டுமவ

ன் உத்தமன். 'காயேந் கநீயஸீ—' என்கிற திருவடியிறே அவ்வாகிறான். 'பிராட்டியிருந்த இடம் அறிந்து வா' என்றுவிட, இருந்தவிடமுமறிந்து, 'அவன் பலமிருந்தபடி என்' என்று பெருமாள் கேட்டருளினால் 'அறிந்திலேன் என்னவொண்ணாது' என்று அத்தலையில் பல(ப3ல) பரீக்ஷையும் பண்ணி, ஊரில் அரணையும் தலையழித்து மூலையடியே போம்படி பண்ணி வந்தானிறே.

அரும்— தலையழித்து=நன்றாக அழித்து. மூலையடியே போம்படி—சுட்டும் பொகட்டால் குட்டிச் சுவராமே. அப்போது மூலையாகப் போகலாமே. அத்தைப் பற்றச் சொல்லுகிறது.

ஸுந்தரகாண்டம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

# யுத்தகாண்டம்.

1. अहं च रघुवंशश्च लक्ष्मणश्च महाबलः ।
वैदेह्या दर्शनेनाद्य धर्मतः परिरक्षिताः ॥ 1. 12.

அஹம் ச ரகு4வம்ஶஶ்ச லக்ஷ்மணஶ்ச மஹாப3ல: ।
வைதே3ஹ்யா த3ர்ஶநேநாத்3ய த4ர்மத: பரிரக்ஷிதா:॥

ப—ரை. அஹம் ச= நானும், ரகு4வம்ஶ: ச= ரகுகுலமும், மஹாப3ல:= பலம் மிகுந்த, லக்ஷ்மண: ச= லக்ஷ்மணனும், வைதே3ஹ்யா:= ஸீதையை, த3ர்ஶநேந= கண்டதினால், அத்3ய= இன்று, த4ர்மத:—தர்மத்தால், பரிரக்ஷிதா:—காப்பாற்றப்பட்டோம்.

ஈடு. (தி—வாய். 6. 8. 1.) அஹம் ச ரகு4வம்ஶஶ்சேத்யாதி—'ந ஜீவேயம் க்ஷணமபி' என்றிருக்கிற நானும், என்னை ஒழிய ஜீவியாதபடியிருக்கிற பிள்ளை பரதனும், இருவர்க்கும் உஜ்ஜீவநஹேதுவான பிள்ளையும். வைதே3ஹ்யா:—இவையெல்லாம் தருமென்கைக்காக. த4ர்மத: பரிரக்ஷிதா:— நீ செய்ததுக்கு ஒரு ப்ரத்யுபகாரம் பண்ணலாமோ. வெறும் அறவனுகையாலே

செய்தாயத்தனை. 'உனக்கென் செய்கேன்' என்று காலதத்வமுள்ளதனையும் உழைக்கும்படியிறே நீ செய்தது.

அநும்— 'ரகுவம்ஶஸ்ய' என்றது பரதாழ்வானை. அறவன்=தார்மிகன். உழைக்கும்படி=தடுமாறும்படி.

2. एष सर्वस्वभूतस्तु परिष्वङ्गो हनूमतः ।
मया कालमिमं प्राप्य दत्तस्तस्य महात्मनः ॥ 1. 14.

ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமத: ।
மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ்தஸ்ய மஹாத்மந: ॥

ப-ரை. மயா= என்னால், இமம்= இந்த, காலம்= காலத்தை, ப்ராப்ய= அடைந்து, மஹாத்மந:= பெருந்தன்மையுடைய, தஸ்ய= அந்த, ஹநூமத:= ஹநுமானுக்கு, ஸர்வஸ்வபூத:= (எனது) கைமுதலான, ஏஷ:= இந்த, பரிஷ்வங்க: து= ஆலிங்கனமே, தத்த:= கொடுக்கப்பட்டது.

பெ-வ்யா(பெரியதிருமொழி 5-8-2.) ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து— ஒரு கலத்திலே உண்பாரைப்போலே ஶேஷிஶேஷிகளிருவர்க்கும் அநுபாவ்யமிறே திருமேனி. ஸர்வஸ்வபூத:— ஸ்வரூபரூபகுணங்களிலும் பிராட்டிமாரிலும் அபிமதமாயிருக்கையாலே; அதாவது— ருசிஜநகமாயிருக்கையாலும், தானே ஸாதநமுமாயிருக்கையாலும், ஸதா(ஆ)தர்ஶநவிஷயமாயிருக்கையாலும், ரக்ஷகனுக்கு ரக்ஷணத்துக்கு ப்ரதாநபரிகரம் திருமேனியிறே. அவ்வுடம்போடே அணைந்த உடம்பென்றிறே தன்னுடம்பையும் அவன் விடமாட்டாதேயிருக்கிறது.

ஈடு. (தி-வாய் 4. 1. 5) ஏஷ:— தான் அநுபவித்து, தனக்கு ரஸித்தது என்று பிறர்க்குக் கொடுப்பாரைப்போலே; 'உபாஸ்யதாமிதி தாஸோऽஹம்' என்னக்கடவதிறே. இச்சாக்ருஹீதமென்கையாலே, கர்மநிபந்தனமல்லவென்று தோற்றுகிறது. அபிமதமென்கையாலே, தனக்கும் போக்யமென்று தோற்றுகிறது. ஸர்வஸ்வபூத:— இதொழிய மற்றொன்றைக் கொடு

த்தாலும் இது கொடாதத்தால் வரும் குறை கிடக்குமே. திருமேனியைக் கொடுக்கவே எல்லாம் கொடுத்ததாமிறே. ஸர்வாபாஶ்ரயமாயிறே திருமேனிதானிருப்பது. மற்றுக்கொடுக்குமதிலும் இதுக்குண்டான வ்யாவ்ருத்தி தோற்றியிருக்கிறது. வரிஷ்டோ ஜ்ஞாநவ்ருத்3த:— அம்ருதாஶிக்குப் புல்லையிடவொண்ணாதே. 'ஸ்நேஹோ மே பரம:' என்று இவ்வுடம்பை விரும்பினவனுக்கு இத்தையே கொடுக்கவேணுமே. மயா கார்யமித3ம் ப்ராவ்ருத்த:— 'இவன் ஒன்றுகொள்வானொருவனல்லன்; நாம் இவனுக்கு ஒன்று கொடுக்கப்பெறுவது காண்' என்று குறைப்பட்டிருந்தவர், இவன் விலக்காததொரு ஸமயம் பெற்று இப்படிக் கொடுத்து கொண்டு நின்றார். தஸ்ய மஹாத்மந:— ஒருபடி கொடுத்தாராய் ஒன்று செய்தவித்தனைபோக்கி, இரண்டுடம்பு கொடுத்தவனுக்கு ஒருடம்பு தரமன்றிறே. வேண்யுத்க்ரதன (வேண்யுத்3க்3ரத2ந) த்திலே பிராட்டி ஒருப்பட்டவன்று அவளை உளளாக்கினான். 'சுக்3ரீவம் ஶரணம் க3த:' என்ற பெருமாளைமீட்டு அவரை உளராக்கி இப்படி இவர்க்கு இரண்டுடம்பு கொடுத்தானிறே அவன். அவன் பலபடி உபகரிக்கையாலே இவர் ஒருபடி உபகரித்தார்.

அரும்— துஶப்தார்த்தம்—மற்றித்யாதி. கொள்வானொருவனல்லன்- விரக்தனுகையாலே என்றபடி. விலக்காததித்யாதி. 'உத்கூலமான ப்ரீதியாலே கொடுத்தது கொள்ளாதபோது ப்ரீதிக்கு அழிவுவருமிறே' என்று கருதி விலக்கான் என்று தாத்பர்யம். 'மஹாத்மந:' என்றதுக்கு பாவம்--ஒருபடியித்யாதி. படி = திருமேனி, ப்ரகாரமும். 'அஹம் ச ரகுவம்ஶ்ச' 'மயி ஜீவிதமாயத்தம்' இத்யாதியை உட்கொண்டு தாத்பர்யாந்தரம்—அவன் பல படியித்யாதி.

3. न मे दुःखं प्रिया दूरे न मे दुःखं हृतेति वा ।
एतदेवानुशोचामि वयोऽस्या ह्यतिवर्तते ॥ 5. 5.

ந மே து3:க2ம் ப்ரியா தூ3ரே ந மே து3:க2ம் ஹ்ருதேதி வா।
ஏததே3வாநுஶோசாமி வயோऽஸ்யா ஹ்யதிவர்த்ததே॥

ப-ரை. ப்ரியா = பிரியையான ஸீதை, தூ3ரே = தூரத்தில் (இருக்கிறாள் என்கிற) து3:க2ம் = துக்கம், மே = எனக்கு, ந =

இல்லை; ஹ்ருதா = அபஹரிக்கப்பட்டாள், இதி வா = என்பதினாலாவது, மே = எனக்கு, து:க்கம் = துக்கம், ந = இல்லை; அஸ்யா: = இந்த ஸீதைக்கு, வய: ஹி = பிராயமன்றோ; அதிவர்த்ததே = செல்லுகின்றது, (என்கிற) ஏதத் ஏவ = இதைப்பற்றித்தான், அநுஶோசாமி = வருந்துகிறேன்.

பெ—வ்யா. (பெரியதிருமொழி 9-3.4) மைதிலி நம்மைப் பிரிந்து தூரத்திலே வர்த்தியாநின்றாள், என்றதுக்கு வெறுக்கிறேனுமல்லேன். இனி வலிய ரக்ஷஸ்ஸாலே பிரிவு பிறந்தது; இனி எங்ஙனே நாம் ஸாதிக்கும்படி' என்றதுக்கு வெறுக்கிறேனுமல்லேன். அதாகிறது— கடக்கவிருந்தாளாகில் கடலை அணைசெய்து நாலுபயணம் உள்ளே எடுத்துவிட்டுத்தீருகிறது. இனி பிரிவுக்கு ஹேதுபூதனை பைபலைக் கிழங்கு கொடுத்துப் பொகடத் தீருகிறது. அக்காரியம். நான் இழிந்த அல்லாதவற்றுக்கு வெறேன். இது ஒன்றுக்குமே நான் மோஹிப்பது. அது ஏதென்னில்— வயோஸ்யா ஹ்யதிவர்த்ததே— இவைபோலே காலம் என்னும்பால் மீளவிடலாவதொன்றன்றே. அணைக்குக் கிழக்குப்பட்ட நீரை மீட்கப்போகாதிறே.

(ஈடு 2-1-10.ஆம் இப்படியே)

4. वाहि वात यतः कान्ता तां स्पृष्ट्वा मामपि स्पृश ।
त्वयि मे गात्रसंस्पर्शश्चन्द्रे दृष्टिसमागमः ॥ 5. 6.

வாஹி வாத யத: காந்தா தாம் ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருஶ ।
த்வயி மே காத்ரஸம்ஸ்பர்ஶஶ்சந்த்ரே த்ருஷ்டிஸமாகம: ॥

ப—ரை. வாத = ஏ, காற்றே; யத: = எங்கு, காந்தா = ப்ரியையான ஸீதை இருக்கிறாளோ, (அங்குசென்று) தாம் = அந்த ஸீதையை, ஸ்ப்ருஷ்ட்வா = தொட்டுவிட்டு, மாமபி = என்னையும், ஸ்ப்ருஶ = தொடு. மே = எனக்கு, த்வயி = உன்னிடத்தில், காத்ர ஸம்ஸ்பர்ஶ: = சரீரத்தோடுள்ள சேர்க்கை சந்த்ரே = சந்திரனிடத்தில், த்ருஷ்டிஸமாகம: = பார்வையோடுள்ள சேர்க்கை.

ஈடு. (தி-வாய், 6-8-3) வாஹி வாத — சாக்ஷுஷமல்லாமையாலே நீ பெற்ற பேறு என், த்வயி மே கா³த்ரஸம்ஸ்பர்ஶ꞉— நம்முடைய கரணங்களுக்கு ஸ்பர்ஶம் உன்பக்கலிலேயாயிற்றே. நமக்குத் தொட்டாயிற்றே. சந்த்³ரே த்³ருஷ்டிஸமாக³ம꞉— ஸ்பர்ஶத்தோடொத்ததிறே தர்ஶநமும்.

அரும்— 'வாத' என்றதுக்கு பாவம்— சாக்ஷுஷமித்யாதி. பிராட்டியை ஸாக்ஷாத் அநுபவிக்கப் பெறாமையால் வந்த இழவு தோற்றுகிறதென்கிறார்— நம்முடையவித்யாதி வாக்ய த்வயத்தாலே. ஸ்பர்ஶத்தோடித்யாதி. அவளோட்டை ஸ்பர்ஶம் உன் பக்கலிலே ஸத்³வா (த்³வா) ரகமானாப்போலே, தர்ஶநமுமெனக்கு ஸத்வாரகமாயிற்றென்று வாயுவை த்ருஷ்டாந்தீகரிக்கிறது.

5. उत्पपात गदापाणिश्चतुर्भिः सह राक्षसैः ॥ 16. 17.

உத்பபாத க³தா³பாணிஶ்சதுர்பி⁴꞉ ஸஹ ராக்ஷஸை꞉ ।

ப—ரை. (விபீஷணன்) க³தா³பாணி꞉= கையில் கதையுள்ளவனாய், சதுர்பி⁴꞉= நான்கு, ராக்ஷஸை꞉ ஸஹ= ராக்ஷஸர்களோடு கூட, உத்பபாத= உயரக்கிளம்பினான்.

ஈடு (தி-வாய் 4-9. ப்ரவேஶம்) உத்பபாத— ராவணனோடு பொருந்தாமை பிறந்தபின்பு, நெருப்புப்பட்ட தரையில் கால்பாவாதாப்போலே அவ்விடம் அடிகொதித்துப்போந்தானாயிற்று. க³தா³பாணி꞉— அங்குள்ளாரில் 'ந நமேயம்' என்னுமது தடியொன்றுமே ஆயிற்று. சதுர்பி⁴꞉— அதுவுமெடுத்துத்தோளிலே வைக்கவேணுமே. அதுவும் வேண்டாதார் நால்வருமேயாயிற்று.

அரும்— 'உத்' என்ற உபஸர்க்கார்த்தம்— ராவணனோடித்யாதி. 'ந நமேயம்' என்னுமை அசேதநமாகையாலே.

6. दीप्तपावकसंकाशैः शितैः काञ्चनभूषणैः ।
न त्वामिच्छाम्यहं द्रष्टुं रामेण निहतं शरैः ॥ 16. 24.

தீ³ப்தபாவகஸங்காஶை꞉ ஶிதை꞉ காஞ்சநபூ⁴ஷணை꞉ ।
ந த்வாமிச்சா²ம்யஹம் த்³ரஷ்டும் ராமேண நிஹதம் ஶரை꞉ ॥

ப—ரை. தீப்தபாவகஸங்காஶை꞉ = எரியும் நெருப்புக்கொப்பானவைகளும், ஶிதை꞉ = கூர்மையுள்ளவைகளும், காஞ்சநபூஷணை꞉ = ஸுவர்ணாலங்காரமுள்ளவைகளுமான, ஶரை꞉ = பாணங்களால், ராமேண = ராமனால், நிஹதம் = கொல்லப்பட்டவனாக, த்வாம் = உன்னை, த்ரஷ்டும் = காண, அஹம் = நான், ந உத்ஸஹே = விரும்புகிறேனில்லை.

பெ—வ்யா. (பெரியதிருமொழி 2-8- 3.) தீப்தபாவகஸங்காஶை꞉—கையிலிருக்கும்போது இருக்குமாபோலன்று கிடாய் விட்டாலிருக்கும்படி; எரித்துக்கொண்டாயிற்று வருவது. ஶிதை꞉— அல்லாத அம்புகளோபாதியாக நினைத்திராதே; பட்டால் எரித்தல் பொறுக்கவொண்ணாதபடியாய்க் கிடாயிருப்பது. காஞ்சநபூஷணை꞉— அநுகூலரான என்போல்வாரையும் தோற்பிக்கும் துறையுண்டு கிடாய். ந த்வாமுத்ஸஹே த்ரஷ்டும் — ஸௌப்ராத்ரம் (ஸௌஹார்த) பின்னாட்டுகையாலே சொல்லுகிறேன். ராமேண நிஹதம் ஶரை꞉— புக்கு முடிகைக்கும் விடாய் தீருகைக்கும் உடலாயிருக்குமிறே மடு. அதுபோலேயிருக்கிற இவ்வழகை அநுபவிக்குமதொழிய அவ்வம்புக்கு இலக்காய் நீ முடிந்து போக நான் இச்சிக்கிறிலேன்.

அரும்— த்வாம் ப்ராதாவான உன்னை என்றதின் கருத்தருளிச் செய்கிறார்— ஸௌப்ராத்ரமித்யாதி. இவன் கெட்டவனாகையாலே ஸௌப்ராத்ரம் தமக்கற்றது என்று கருத்து. 'ராமேண' என்று ஸௌந்தர்யத்தைச் சொன்னதுக்குக் கருத்து— புக்கித்யாதி.

ஈடு. (தி-வாய். 6. 10- 4.) தீப்தபாவகஸங்காஶை꞉—படும்போதிருக்கும்படி. ஶிதை꞉— பட்டமை தெரியாதே தொளையுருவி அவ்வருகே விழக்காணுமித்தனை. காஞ்சநபூஷணை꞉. இவற்றுக்கு ஆகாரத்வயமுண்டாயிருக்கிறபடி. 'சரங்களாண்ட தண்டாமரைக் கண்ணனுக்கன்றியென் மனந் தாழ்ந்து நில்லாது' என்கிறபடியே அநுகூலர்க்கு அகப்படுகைக்கும் அதுதானேயாயிருக்கிறபடி. ந த்வாமீத்ருஶாதி — இவ்வழகுக்கு இலக்காய் வாழ்ந்து போகலாயிருக்க, எதிரிட்டு முடிந்து போக நானிச்சிக்

கிறிலேன். நீ எண்ணியிருக்கிறது நான் அறிகிறிலேனிறே. இருத்திப் பிடித்த வில்லும், தெரித்துப் பிடித்த பகழியுமாய்க் கொண்டு நிற்கும்போது அபிராமராயிறே இருப்பது. அவ்வழகைக் கண்டநுபவிக்க மாட்டாதே, தண்ணீர் குடிக்கக் கல்லின ஏரியிலே தலைகீழதாக விழுந்து முடிவாரைப் போலே, தயாதன் பெற்ற மாகத மணித்தடத்தை எதிரிட்டு முடிந்துபோக நான் காண மாட்டுகிறிலேன்.

அநும்— ஆகாரத்வயமாவது— 'ஶரைः' என்பதாலே ஆயுதத்வமும், 'காஞ்சந பூஷணை:' என்பதாலே போக்யத்வமும், 'ராமேண' என்றதுக்கு அர்த்தம்— இருத்தியித்யாதி. தெரித்து= அ[illegible]து. பகழி= அம்பு.

7 मित्रभावेन संप्राप्तं न त्यजेयं कथंचन ॥ 18. 3.

மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந ॥

ப—ரை மித்ரபாவேந= மித்திரன் என்கிற எண்ணத்துடன், ஸம்ப்ராப்தம்= வந்தவனை. கதஞ்சந= எவ்விதத்திலும், ந த்யஜேயம்= கைவிடமாட்டேன்.

வ்யா. (திருவிருத்தம். 42.) மித்ரபாவேந— அவன் பக்கல் (ஸாவ) பாவமே அமையும். அவனை விடில் என்னை இழக்குமத்தனை என்றானிறே. அவன் பக்கல் கிடையாததொன்றை வேணுமென்றால் தாராத (உதாரனாய) ருமித்தனையிறே. இவன் பக்கல் பெற்றது கொள்ளுமித்தனையிறே. இவனால் செய்யமுடியாததொன்றைச் சொல்லுகையாவது கைவிட நினைத்துச் சொல்லிற்றுமித்தனையிறே.

ஈடு. (தி-வாய். 5-1-1) 'மித்ரபாவேந— என்கிற ஶ்லோகத்திலே எம்பார், 'ஸர்வஜ்ஞனுக்கொரு அஜ்ஞானமும் விஸ்ம்ருதியும் ஸர்வஶக்திக்கு ஒரு அஶக்தியுமுண்டு' என்றருளிச்செய்வர். ஒருவன் தன்னை ஆஶ்ரயித்தால் முன்பு புத்திபூர்வம் பண்ணின குற்றத்திலே விஸ்ம்ருதி பண்ணி, ஜ்ஞாநம் பிறந்தால் ப்ராமாதி(கி)கமாய் வருமவற்றில் அஜ்ஞாநம், அவனை விடவேண்டிவருமளவிலே அஶக்தி. இப்படியிருக்கைக்கு அடி ஸ்வாபாவிகமான ஶுடற்றோடக்கு.

அநும். 'தோஷோ யத்யபி' என்கையாலே அஜ்ஞாநமும், விஸ்ம்ருதியும், 'கதஞ்சந த்யஜேயம்' என்கையாலே---அசக்தியும் தோற்றுகிறது. ஆச்ரயித்தால் = அஹ்ருதயமாக ஆச்ரயித்தால்.

8. सुहृदो वा भवद्विधाः । 18. 15.
ஸுஹ்ருதோ வா பவத்விதா: ।

பா-ரை. ஸுஹ்ருத: வா = நண்பர்கள் தாமாகட்டும், பவத்விதா: = உம்மைப்போன்றவர்களாய், ந பவந்தி = ஆகமாட்டார்கள்.

பெ—வ்யா. ( திருவிருத்தம், 56 ) ஸுஹ்ருதோ வா பவத்விதா:—நம்மைக் கண்டகாக்ஷியிலே ஜ்யேஷ்டனை எதிரியாக்கி அவனிலும் நம்மை அந்தரங்கராக்கிக் கார்யங்கொள்ளுந்தனை ஸௌஹார்த்த(உ-டு)முள்ளது உமக்கே காணுமென்கிறார்.

9. पिशाचान् दानवान् यक्षान् पृथिव्यां चैव राक्षसान् ।
अंगुल्यग्रेण तान्हन्यामिच्छन् हरिगणेश्वर ॥ 18. 23.
பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாம் சைவ ராக்ஷஸாந் । அங்குல்யக்ரேண தாந் ஹந்யாமிச்சந் ஹரிகணேச்வர ॥

பா-ரை. ஹரிகணேச்வர = வாநரராஜனாகிய ஸுக்ரீவா, பிசாசாந் = பிசாசங்களாயும், தாநவாந் = அஸுரர்களாயும், யக்ஷாந் = யக்ஷர்களாயும், ப்ருதிவ்யாம் = பூமியில், ராக்ஷஸாந் ச ஏவ = ராக்ஷஸர்களாயுமிருக்கின்ற, தாந் = அவர்களை, அங்குல்யக்ரேண = விரல்நுனியாலே, இச்சந் = விரும்பினவனாய் ( நான் இஷ்டப்பட்டால்) ஹந்யாம் = கொல்லுவேன்.

பெ—வ்யா. (திருப்பல்லாண்டு, [illegible]) பிசாசாந் தாநவாந் யக்ஷாந்—கள்ளர், பள்ளிகள், வலையர் என்னுமாபோலே ஹிம்ஸகருடைய அவாந்தரபேதை ( [illegible] ) இருக்கிறபடி. 'ப்ருதிவ்யாம் சைவ ராக்ஷஸாந்—லங்கையிலுள்ள ராக்ஷஸரளவன்றிக்கே, பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையான பூமியிலுள்ள ராக்ஷஸரெல்லாரும் எதிரிகளானாலும், அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம்—ஆக

ஶத்ருவர்க்கங்களெல்லாம் ஒரு கலத்திலே உண்டு எதிரிட்டாலும் இவற்றினுடைய நிரஸநத்திற்கு அஸ்த்ரஶஸ்த்ரங்கள் வேணுமோ. க்ஷுத்ர(ஜ)க்ரிமிகளை நிரஸிக்குமோபாதி அங்குல்யக்ரத்தாலே நிரஸிக்கவல்லோம் காணுமென்றார். ஆனால், நம்மை நலிந்த ப்ரதிபக்ஷம் நசியாதே கிடக்கிறதென்னென்னில், 'அழிப்போம்' என்னுமிச்சையில்லாமை. இச்சை உண்டானால் அழிக்கையில் அருமையில்லை. அதுதனக்கு அடி என்னென்னில், 'உயிரோடே தலை சாய்க்குமானால் அழிக்கிறதென்' என்னும் இரக்கத்தாலே. இவ்வார்த்தை ராமபாக்யத்தாலே மஹாராஜர் நெஞ்சில்பட்டு பயநிவ்ருத்திக்கு உடலாய்த்து.

அரும்— 'தாம்' என்கிற தச்சப்த பஹுவசநத்தாலே எல்லாரையும் கூட்டினதுக்கு பாவம்—ஆகவித்யாதி. அது தனக்கு—இச்சையில்லாமைக்கு. 'யதி வா ராவண: ஸ்வயம்' என்பதைப்பற்ற—உயிரோடேயித்யாதி. ராமபாக்யத்தாலே— மஹாராஜருக்குப் பெருமாளிடத்தில் ப்ரேமாதிக்யத்தாலே இவ்வார்த்தை நெஞ்சில் படாதே பயஹேதுவாகச் செய்தேயும் விபீஷணு பயஹேதுவான ராம பாக்யத்தாலே யென்றபடி.

10. किंपुनर्मद्विधो जनः । 18. 25.
கிம் புநர்மத்விதோ ஜந: ।

ப—ரை மத்விதஃ= என்னைப் போன்ற, ஜநஃ= மனிதன், கிம் புநஃ= ஶரணாகதனைக் கைக்கொள்ள வேணுமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ.

ஈடு (தி-வாய். 6-8-6) கிம் புநர்மத்விதோ ஜந:— என்ற விடத்துக்குச் சொல்லுவதொரு வார்த்தை யுண்டிறே — அருளாளப்பெருமாள் எம்பெருமானாருடைய அந்திம தஶையிலே 'திருவுள்ளத்தில் ஓடுகிறது என்' என்ன, 'ஒரு பக்ஷி பெருமானுடைய திருவுள்ளத்தைப் புண்படுத்தினபடி என் என்று கிடந்தேன்' என்றார் என்று. இதுக்குக் கருத்தாகப் பிள்ளை அருளிச்செய்யும் வார்த்தை— 'நாம் பண்ணின ஶரணாகதியாகையாலே பல(ஸ)த்தோடு அவ்யபி(சி) சாரியாகமாட்டாது. இனி ஶரண்ய

ன் நீர்மையினேற்றத்தாலே நமக்கு ஒரு குறையில்லை என்கிறது" என்று, (பெருமாளைப் புண்படுத்துகையாவது— ஸ்ரீவிபீஷணாழ்வானை ஶரணாகத்யநந்தரத்திலே கைக்கொள்ளாமல் 'வத்யதாம்' என்று அல்பம் தாமஸம் பிறக்கையாலே 'கபோதத்தோபாதி நாம் ரக்ஷிக்கப் பெற்றிலோம்' என்றிருக்கை.)

அநும்— புண்படுத்தினபடி யென்றது— ஒரு திர்யக்கு தன்னை அழியமாறி இப்படி ரக்ஷித்தால், நாம் 'ப்ராணாந் பரித்யஜ்ய' என்னுமதொழிய, சேதனனை வர்சிக்கேற்றமாக ஒன்று செய்யப் பெற்றிலோமென்று புண்படுத்தினபடி என்றபடி. நாமித்யாதி— ஶரணாகதாநுகூல்யாதிகளாலன்றிக்கே ஶரண்யமான கபோத குணாதிக்யத்தாலே பலஸித்தியானாப் போலே, நம்முடைய ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளாலன்றிக்கே ஶரண்ய குணாதிக்யத்தாலே பலிக்குமென்று கருத்து. அவ்யபிசாரியாகமாட்டாது=பலத்தோடே கூட்டுவிக்க மாட்டாதென்றபடி.

11. आर्तो वा यदि वा दृप्तः परेषां शरणागतः ।
अरिः प्राणान् परित्यज्य रक्षितव्यः कृतात्मना ॥ 18. 28.

ஆர்த்தோ வா யதிவா த்ருப்த: பரேஷாம் ஶரணாகத: ।
அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா ॥

ப—ரை. ஆர்த்த: வா = வருந்துகிறவனாயிருந்தாலும், த்ருப்த: வா = கர்வமுள்ளவனாயிருந்தாலும், பரேஷாம் = பிறரை, ஶரணாகத: = ஶரணமாக அடைந்த, அரி: = ஶத்ருவும், க்ருதாத்மநா = மனத்திருத்தமுள்ளவனால், ப்ராணாந் = உயிரை, பரித்யஜ்ய = விட்டு, ரக்ஷிதவ்ய: = காப்பாற்றப் படவேண்டியவன், பரேஷாம் = அந்நியர்களுக்குள், ஶரணாகத: = ஶரணமடைந்தவன், என்றும் சொல்வதுண்டு.

டி—வ்யா. (திருவிருத்தம்-42.) ஆர்த்தோ வா யதி வா த்ருப்த:—'ராகவம் ஶரணம் கத:' என்ற உக்தி திருச்செவிபட்ட போதே இவன் நெஞ்சில் தளர்த்தியைத் திருவுள்ளம்பற்றினார் பெருமாள். 'உக்தியே இவன் பக்கலுள்ளது, நினைவு வேறொருபடி' என்றறிந்த முதலிகள் ராமபக்தியாலே 'நினைவொன்றாய்ச் செ

யிலொன்றாயிருக்கிறவன் வத்ய(வ்ய:)ம்' என்றே இருந்தார்கள். ஆர்த்தனாகையாவது—இத்தலையைப் பெறில் ஜீவித்தும், பெறுவிடில் முடியும்படியுமாயிருக்கை. த்ரு(த்ரு)ப்தனாகையாவது—நெஞ்சின்றிக்கேயிருக்கச்செய்தே, நம்முடைய அநுகூலபாஷணங்களைப் பிறர் அநுகரிக்குமாபோலே நெஞ்சிலின்றிக்கேயிருக்கச் செருக்காலே சொல்லுகை. ஆர்த்தனாகவுமாம், த்ருப்தனாகவுமாம். ஆர்த்தியோபாதி த்ருப்திக்கும் பலைக்யமுண்டாம்படி எங்ஙனே என்னில்—இவனைப்பார்க்குமன்றிது விசாரிக்கவேணுமே. ஶரண்யனுக்கு வேண்டுவது சொல்லுகிறதிறே இதில். ஆர்த்தியோபாதி த்ருப்தியும் இதுக்குப் பரிகரமாம்படி எங்ஙனே என்னில்—ஆர்த்தி பரிகரமானவிடத்திலே, இதுவும் பலவ்யாப்தமாகக் கண்டுபோருகிறது. ஆகையாலே ஆகிஞ்சந்யமேயாயிற்று அதுக்குப் பரிகரம். த்ருப்தனுக்கு இதுக்குப் பரிகரமான ஆர்த்தியுங்கூடவில்லையாயிருந்தது. இனி நாமேயாகாதேயுளோம் என்று அதுக்கும் அவனிரங்குமென்று பரிகரமாகத் தட்டில்லை. ஶரோஷாம் ஶரணாகத: ஶரி:—ஶத்ருக்களிலே வைத்துக்கொண்டு ஶரணாகதனை ஶத்ரு. அதாவது—உக்திமாத்ரமேயாய் கார்யத்தில் ஶாத்ரவமே முடிய நடவாநிற்கை. அன்றிக்கே, 'கொன்றேன் அன்றேவந்தடைந்தேன்' என்னுமாபோலே கொன்றகரை கழுவாதே வந்து புகுருகை. ப்ராணாநுபரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:—அவர்கள் பக்கலிலே வாசி உண்டானாலும் ரக்ஷிக்குமிடத்தில் இருவரையும் ஒக்க ப்ராணன்களை அழியமாறி ரக்ஷிக்கப்படும். 'ப்ராணாநபி பரித்யஜ்ய' என்னாதொழிந்தது—அவன் செய்ததுக்கு ப்ராணனை அழியமாறி ரக்ஷிக்குமதுவும் போராதென்று நினைத்திருந்தபடியாலே. க்ருதாத்மநா—இவனுடைய ரக்ஷணத்துக்காகச் செய்ததொன்றன்று, தன்னுடைய ஸ்வரூபஸித்திக்காக. ஒருவனோடே ஒன்றை அப்யஸித்து ஶிக்ஷிதமனவாயிருக்குமவனுக்கு இத்தனை செய்யவேண்டிவரும்.

அநும். விகல்பத்துக்குக் கருத்து—ராகவமித்யாதி. பெருமாள் அபிப்ராயத்தாலே ஆர்த்தன், முதலிகள் அபிப்ராயத்தாலே த்ருப்தன் என்ற

படி. நம்முடைய இத்யாதி—நாம் திருநாமங்களைச் சொன்னால், 'அவற்றைச் சிலர் ஆக்ஷேபித்துச் சொல்லுமாபோலே என்றபடி. இவனையித்யாதி—இந்த ப்ரபத்திகளை இச்சேதநன் ஸாதநமாகப் பண்ணுமன்று பலத்திலே வைஷம்யம் சொல்லலாமித்தனை. ஸித்தோபாயத்துக்கு வேண்டும் அதிகாரிவிசேஷணங்களைச் சொல்லவந்ததாகையாலே பலம் துல்யமாகலாம் என்று கருத்து. இதுக்குப்பரிகாரம்—பலத்துக்கு ஸாதநம். இரங்கும் பரிகாரமான உக்தியை த்ருப்தியாகச் சொல்லுகையாலே இதுக்கு எதிர்த்தட்டான ஆகிஞ்சந்யத்தை ஆர்த்திசப்தத்தாலே சொல்லுகிறதென்று கண்டுகொள்வது. பரேஷாம் மத்யே சரணாகதனை சத்ருவென்னுதல்; 'பரேஷாம் அரி: சரணாகத:' என்றதாய் பிறரை ஹிம்ஸித்துக் கொண்டே சரணாகதனை வென்னுதல். க்ருதமாய்— திருத்தப்பட்டதான, ஆத்மாவை மனஸ்ஸை உடையவனாலே என்று சப்தார்த்தத்தை விவக்ஷித்து— இவனுடைய இத்யாதி.

எடு. ( தி-வாய், 6. 2. ப்ரவேசம். ) ஆர்த்தோ வா யதிவா த்ருப்த:— ஆர்த்தனாய் சரணம் புகவுமாம். அன்றிக்கே, நாம் திருநாமங்களைச் சொன்னால் சேவகர் நம்மை ஆக்ஷேபித்துச்சொல்லுமாபோலே செருக்காலே சொல்லவுமாம். இங்ஙன் விகல்பிப்பான் என்? ஆர்த்தனுக்கன்றோ பலப்ராப்தியுள்ளது, மற்றையவனுக்கு உண்டாகச் சொல்லுகிறவிடம் ப்ரஸித்தமன்றே என்னில்—இஸ்ஸ்லோகத்தால் சரணாகத லக்ஷணம் சொல்லுகிறதல்ல; சரண்ய லக்ஷணம் சொல்லுகிறது. இவனுடைய ஆர்த்திதானும் உபாயத்தில் அந்வயியாதிறே. ஆன பின்பு அவனோடு இவனோடு வாசியில்லை. "தன் தசையை அறிந்து நமக்கொரு கைம்முதல் இல்லையாயிருந்தது' என்று தன் குறையை அறிவிக்கவும் மாட்டாதபடியாயிருந்தான். ஆனபின்பு, இவனுக்கு நாமே ஆகாதே யுளோம்" என்று திருவுள்ளம் இவன் பக்கல் ஊன்றியிருக்கும். பரேஷாம் சரணாகத: ஸரி:— சத்ருக்களில் வைத்துக் கொண்டு சரணாகதனை சத்ருவாயிற்றிவன். அதெங்ஙனென்னில்— 'சரணம்' என்கிற உக்தியைச் சொல்லுகையாலே சரணாகதன் என்னவுமாய் அநுகூல்யமில்லாமையாலே சத்ருவென்னவுமாயிருக்கை. அன்றிக்கே, பூர்வ வ்ருத்தத்துக்கு அநுதாபமில்லாமையா

ஆம் இப்போது 'ஶரணம்' என்கிற ஶப்தத்தைச் சொல்லுகை யாலும் இரண்டும் சொல்லலாயிருக்கை, 'கொன்றேன் அன்றே வந்தடைந்தேன்' என்னுமாபோலே. ப்ராணாந் ஸந்த்யஜ்ய—ப்ராணங்களை ஒரு தலையாக விட்டு. 'ப்ராணாநபி' என்ன வேண்டாவோ என்னில்—அவன் சொன்ன சொலவுக்கு இதொன்றும் போராமையாலே அது வேண்டாவாயிற்று. ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா—பரிக்ஷிதமனவாயிருக்குமவனால் இத்தனையும் செய்யப்படும். அறிவுடையார்க்கு இத்தனையும் செய்தல்லது நிற்கவொண்ணாது.

அநும்— த்ருப்தனுவான்— ஸம்ஸாரதோஷ பகவத் வைலக்ஷண்ய ஜ்ஞாநயுக்தனுய் ஸதாசார்ய ஸமாஶ்ரயண பூர்வமாக ஈஶ்வரனே உபாயோபேயம் என்று அத்யவஸித்து தேஹாந்தரம் ஸஹியாமல் ஏதத் தேஹாவஸாநத்தளவும் ஆறியிருக்குமவனுயிருக்க, 'சேவகர் நம்மை ஆக்ஷேபித்துச் சொல்லுமாபோலே' என்று லக்ஷ(லவலு) கரிப்பானென் என்று கேட்க, ஶரண்ய வைபவ ப்ரகரணமாகையாலே நஹிநிந்தாந்யாயேந லக்ஷகரிக்கிறுர் என்று அருளிச்செய்வர். அன்றிக்கே த்ருப்தி (த்ருப்தி) யின் சரமாவதியான அஹ்ருதயோக்தியாகச் சொல்லுகிற அதிகாரியைச் சொல்லுகிறதென்னுதல். 'ப்ரஸித்தமன்றிறே' என்கையாலே அபுத்தி பூர்வகமாக ஏககரணத்தாலே ப்ரபத்தி பண்ணுகிற சரமாவதி த்ருப்தன் விவக்ஷிதனென்று கருத்து. ஶரண்ய லக்ஷணம் சொல்லுகிறதுகொண்டு ஆர்த்தனையும் த்ருப்தனையும் ஒக்கச்சொல்லலாமோ என்ன— இவனுடைய வித்யாதி. 'ஆர்த்தோ வா யதிவா த்ருப்த:' என்று ஆர்த்தனையும் ப்ரதிஜ்ஞை பண்ணி, 'பரேஷாம் மத்யே ஶரணாகத: அரி:' என்று கொண்டு த்ருப்தன்படியைச் சொல்லுகிறது, இஶ்ஶ்லோகம் ஶரண்யன் படியைச் சொல்லுகிறதாகையாலே. லோகபரிபாடியாலே கீழருளிச்செய்து ஶாஸ்த்ர பரிபாடியாலே பரிஹாராந்தரம்— அன்றிக்கேயித்யாதி. மூன்றும் பரிஹாரம்—கொன்றேனித்யாதி. அதாவது— 'பரேஷாம் அரி: ஸம்ஶரணாகத:' என்றந்வயித்து பிறர்க்கும் ஶத்ருவாய்க் கொண்டு ப்ராயஶ்சித்தாதிகள் பண்ணுதே, ஶரணாகதனுனவனென்றபடி. ஒரு தலையாக=தனக்கே பரமாக.

12. यदि वा रावणः स्वयम् । 18. 34.

யதி வா ராவண: ஸ்வயம் ।

ப—ரை: யதி வா = அல்லது, ராவண: ஸ்வயம் = ராவணன் தானுகவே (இருந்தாலும் இவனை அழைத்து வாரும்.)

ஈடு. (தி-வாய். 10-2-2.) யதி வா ராவணஸ் ஸ்வயம்— என்னுமவனிறே. விபீஷணனென்று போராய், ராவணனுயிருந்தானென்று மீளாதே கிடர். அது என்? அங்கு நின்றும் வந்தானொருவனைக் கைக்கொண்டதாக அமையாதோ வென்ன வேண்டா, குறைவாளர்க்கிறே நம்மால் அபேக்ஷையுள்ளது, அதுள்ளது ராவணனுக்கிறே. 'விபீஷணஸ்ய யத்ரூதா' என்று தனக்கென்ன ஒரு ஸம்முதலு முண்டாகையாலே நாளை வரவுமாம். அவரை க்ஷணம் இட்டாகில் நாசமாயிருக்கிறது அவனுக்கேயன்றோ. ஆன பின்பு அவனையன்றோ முற்படக் கைக்கொள்ள வேண்டுவது இவிந்தானிவனைக் கைக்கொண்டால், இவனும் இவன் தன்னோடே நால்வருமாய்ப் போம். ராவணனைக் கைக்கொண்டால் அதுப்புக் கூடாகக் கைக்கொண்டதாகலாம். மஹாராஜரொருவரையுமங்கீகரிக்க வாநரஜாதி ஆக வாழ்ந்து போனப் போலே.

13. राघवेणाभये दत्ते संनतो रावणानुजः । 19. 1.

ராகவேணாபயே தத்தே ஸம்நதோ ராவணாநுஜ: ।

ப—ரை. ராகவேண = ராமனால், அபயே = அபயம், தத்தே (ஸதி) = கொடுக்கப் பட்டபோது, ராவணாநுஜ: = ராவணன் தம்பியான விபீஷணன், ஸம்நத: = வணங்கினான்.

ஈடு. (தி-வாய்-8-7-1) ராகவேணாபயே தத்தே ஸந்நதோ ராவணாநுஜ:— என்று ராவணன் பின் பிறந்த நாம் ரகுகுலத்திலுள்ளார்க்கு ஆளாகப் புகாநின்றோமோ என்றிருந்தவன், பெருமாள் பாடுநின்றும் அருளப்பாடிட்டு வந்தவாறே, 'என்னையே இப்படி கைக்கொண்டருளுவது. அவன் பின் பிறந்த தண்மைஎங்கே போயிற்று' என்று வேரற்ற மரம்போலே, கூடவந்த நால்வரோடும் திருவடிகளிலே விழுந்து தறைப்பட்டாப்போலவும்.

14. समुद्रं राघवो राजा शरणं गन्तुमर्हति । 19. 31.

ஸமுத்ரம் ராகவோ ராஜா ஶரணம் கந்துமர்ஹதி ।

ப—ரை. ராஜா = அரசராகிய, ராகவஃ = ராமன், ஸமுத்ரம் = கடலை, ஶரணம் = ஶரணமாக, கதஃ = அடைய, ஸமஹாமதி = சக்தியுடையவர்.

பெ—வ்யா. (திருவிருத்தப்-42) 'இதொருகடல் இடைச்சுவராய்க் கிடவாநின்றது. இத்தைக் கடந்து அவ்வருகு பட்டோமாம் விரகென்' என்று பெருமாள் முதலிகளையடையக் கேட்க, ஸ்ரீவிபீஷணாழ்வான் தான் அணித்தாகக் கைக்கண்ட உபாயமாகையாலும், ஸர்வஹிதங்களுக்கும் ஸாதநம் ஶரணாகதி என்று அத்ய (ய) வஸித்திருக்கையாலும், பல(ஸ)வ்யாப்தியுள்ளது இதுக்கேயாகையாலும், பெருமாளுக்கு இந்தக் கடலைச் சரணம் புக அடுக்கும் என்றான். ஸமுத்ரம் — பெரியவர்களை வஶீகரிக்குமுபாயம் இது வல்லதில்லை. ராகவோ ராஜா — ஒருகுடிப்பிறப்புமின்றிக்கே அளவுடையாருமன்றிக்கே இருப்பார்க்கும் இது பலிக்குமாகில், இவையுடையார்க்குச் சொல்லவேணுமோ? ஶரணம் கதோ மஹாமதி — வஸிஷ்டஶிஷ்யர்கள்பக்கலிலே இது பலிக்கக்கண்டபடியாலே அறிவில்லாத கடலின் பக்கலிலேயும் இது பலிக்குமென்றிருக்கிறான். 'ஸா ஹி தேவைருதீர்ணஸ்ய தாத்ரே' எருது கெடுத்தார்க்கும் ஏழே கடுக்காய் என்று.

அநு— ஸமுத்ரம் அறிவில்லாததன்றோ. அங்கே பலிக்குமோ என்ன, ஶரணாகதி மாஹாத்ம்யத்தாலே பலிக்குமென்றிருக்கிறானென்கிறார்— வஸிஷ்டேத்யாதி. ஶிஷ்யர் என்றது ஶரணாகதி தர்மஜ்ஞரென்றபடி. ஆனால் அது பலியாமல் போவானென்னென்ன, விஷய தோஷத்தாலே என்று விவக்ஷித்து, இதுக்கு விஷயம் ஸ்ரீமந்நாராயணனென்றத்தைக் காட்டுகிறார்— ஸாதேவே இதி. ஆனால் விஷய நியமம் வேணுமென்று அறியாதே ஸ்ரீவிபீஷணாழ்வான் உபதேஶிப்பான் என்னென்ன— எருதித்யாதி. பலித்தாலாகாதோ என்று உபதேஶித்தானித்தனையென்கை. அதாவது— எருது கெடுத்தவன் 'அது காண்கைக்கு உபாயமேது' என்று ஒருவனைக் கேட்க, அவன் பரிஹாஸத்துக்கு 'ஏழு கடுக்காயைத் தின்று' என்ன, அவனும் மெய்யென்று அத்தைத் தின்று குளக்கரையிலே இருக்க, அங்கே யாத்ருச்சிகமாக எருதும் வர அத்தை ஓட்டிக் கொண்டு க்ருஹத்திலே வந்தவளவிலே, ஒரு மடைடி எனக்கும் பரிஹாரம் சொல் என்ன, நான் அறியேன், எனக்குச் சொன்னவனைக் கேள் என்ன, அவளும் அங்கேபோய்க் கேட்க

அவனும் எருது கண்டபடியாலே, 'ஈனுப் பெண்டிர்க்கும் ஏழே கடுக்காய்', என்ன, அவளும் அப்படியே செய்ய அவள் வயிற்றிலவை யெல்லாம் போய் கர்ப்பம் உண்டாயிற்றென்கை. [?]

15. ततः सागरवेलायां दर्भानास्तीर्य राघवः ।
अञ्जलि प्राङ्मुखः कृत्वा प्रतिशिश्ये महोदधेः ॥
बाहुं भुजगभोगाभमुपधायारिसूदनः ॥ 21. 1.

𑌤𑌤𑌃 𑌸𑌾𑌗𑌰𑌵𑍇𑌲𑌾𑌯𑌾𑌂 𑌦𑌰𑍍𑌭𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌯 𑌰𑌾𑌘𑌵𑌃 ।
𑌅𑌞𑍍𑌜𑌲𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌙𑍍𑌮𑍁𑌖𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌶𑌿𑌶𑍍𑌯𑍇 𑌮𑌹𑍋𑌦𑌧𑍇𑌃 ।
𑌬𑌾𑌹𑍁𑌂 𑌭𑍁𑌜𑌗𑌭𑍋𑌗𑌾𑌭𑌮𑍁𑌪𑌧𑌾𑌯𑌾𑌰𑌿𑌸𑍂𑌦𑌨𑌃 ।

ப—ரை, 𑌤𑌤𑌃 = பிறகு, 𑌅𑌰𑌿𑌸𑍂𑌦𑌨𑌃 = ஶத்ருக்களை அழிக்கின்ற, 𑌰𑌾𑌘𑌵𑌃 = ராமன், 𑌸𑌾𑌗𑌰𑌵𑍇𑌲𑌾𑌯𑌾𑌂 = கடற்கரையில், 𑌦𑌰𑍍𑌭𑌾𑌨𑍍 = தர்ப்பங்களை, 𑌆𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌯 = பரப்பி, 𑌭𑍁𑌜𑌗𑌭𑍋𑌗𑌾𑌭𑌂 = ஸர்ப்பத்தின் உடல்போன்ற, 𑌬𑌾𑌹𑍁𑌂 = கையை, 𑌉𑌪𑌧𑌾𑌯 = தலையணையாகவைத்துக்கொண்டு, 𑌅𑌞𑍍𑌜𑌲𑌿𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 = கைகூப்பிக்கொண்டு, 𑌪𑍍𑌰𑌾𑌙𑍍𑌮𑍁𑌖𑌃 = கிழக்குமுகமாக, 𑌪𑍍𑌰𑌤𑌿𑌶𑌿𑌶𑍍𑌯𑍇 = படுத்தார்.

ஈடு. (தி-வாய்-2-8-7-) 𑌬𑌾𑌹𑍁𑌂 𑌭𑍁𑌜𑌗𑌭𑍋𑌗𑌾𑌭𑌂— திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தாற்போலேயாயிற்று திருக்கையை மடித்துச் சாய்ந்திருக்குப்படி. 𑌅𑌰𑌿𑌸𑍂𑌦𑌨𑌃—கிடந்தகிடையிலே லங்கை குடிவாங்கவேண்டும்படியிருக்கை. 𑌪𑍍𑌰𑌤𑌿𑌶𑌿𑌶𑍍𑌯𑍇 𑌮𑌹𑍋𑌦𑌧𑍇𑌃— ஒருகடலோடே ஒருகடல் ஸ்பர்த்தி (𑌶𑌯𑌿𑌤𑍍)த்துச்சாய்ந்தாற்போலேயிருக்கை.

ஈடு, (தி-வாய்-6-9-3-) ப்ரதிஶிஶ்யே என்கிறதாயிற்று— கடல் தன்னைப் போர அளவுடைத்தாக நினைத்திருக்குமாயிற்று, அதுக்காக ஒருகடல் ஒருகடலோடே ஸ்பர்த்தித்துக் கிடந்தாற் போலேயிருக்கை, 'கருணைக்கடல் கருங்கடலை நோக்கிக் கிடந்தது' என்னும்படியிறே,

அரும். 'ப்ரதி' என்றதுக்கு பாவம்— கடல் தன்னையித்யாதி. 'ப்ரதி' என்றது ப்ரதிநிதி (யி) என்றபடி. பொர அளவுடைத்தாகவென்றது 'மஹோததே:' என்றத்தைப்பற்ற. இவர் கடலோ என்ன, கம்பன் பாசுரம்— கருணைக்கடலித்யாதி.

16. क्षमया हि समायुक्तं मामयं मकरालयः ।
असमर्थं विजानाति धिक्क्षमामीदृशे जने ॥ 21. 21.

க்ஷமயா ஹி ஸமாயுக்தம் மாமயம் மகராலய: ।
அஸமர்த்தம் விஜாநாதி திக் க்ஷமாமீத்ருசே ஜநே ॥

ப-ரை, அயம் = இந்த, மகராலய: = கடல், க்ஷமயா = பொறுமையோடு, ஸமாயுக்தம் = கூடிய, மாம் = என்னை, அஸமர்த்தம் = சக்தியில்லாதவனாகவன்றோ, விஜாநாதி = நினைக்கிறது. ஈத்ருசே = இவ்விதமுள்ள, ஜநே = மனுஷ்யனிடத்தில், க்ஷமாம் = பொறுமையை, திக் = நிந்திக்கவேண்டும். (பொறுமை காட்டக்கூடாது)

ஈடு. (தி-வாய் 6. 10. ப்ரவேசம்) க்ஷமயா ஹி ஸமாயுக்தம்— 'ஒரு பெண்பெண்டாட்டி எனக்கு என்றத்தை ஸ்வீகரிக்கையாவது என் என்று ராஜ்யத்தைப் பொகட்டுப் பொறுத்துப் போந்தார்; இங்கே வருணனை வழி வேண்டி அவன் முகங் காட்டிற்றிலனென்று, சீறிக் காலைக் கையைக் கட்டாநின்றார். இதிருந்தபடி என்?' என்றுப் போலேயிருந்தார்கள் முதலிகள். (க்ஷமைக்கு விஷயமுண்டு. சத்ருஜநத்தில் க்ஷமையொண்ணாதென்கிறார்,) 'இவன் வந்திலன்' என்று நாம் சீறவொண்ணாதபடி, வாலி புறப்படுகிறபோது தாரை வந்து கால்கட்டினவோபாதி க்ஷமை வந்து நம்மைக் கால்கட்டாநின்றதென்றார். மாம்— 'ஸாந்த்வப்ரதாநம் ஸாவஜ்ஞாநம் த்ருஷ்ட்வா (ஸாவஜ்ஞாநம் த்ருஷ்ட்வா) என்று கோபம் விளைந்தவநந்தரம் ஜந்மத்தை யுணர்ந்தார். 'பிறர்கை பார்த்திருக்கும் குடிப்பிறப்பன்று' என்றிருக்கிறதில்லை, நம்மை 'ஐயர் மகன்' என்றறிகிறதில்லை. (ஸாத்வோத்த்ராதி— தந்தாம் ஸ்வபாவத்தை மறைத்து வர்த்தித்தவர்கள், ஸ்வப்நாதிதசையிலே ஸ்வஸ்

ஸபாவர்நகுணம் பா(ஹா)ஸிப்பர்களிறே. அப்படி இவரும் க்ஷத்ரி
யத்வத்தை உணர்ந்தார்) -ட்டு—மஹோததி(ஷயி) என்கிற பெரு
மையை நினைத்திராநின்றது. தன்னைச் சிறாங்கித்திருக்கிற நம்மை
அறிகிறதில்லை. ஏகோஸாஸய:— ஒரு அயோத்யாதிபதி கோஸலாதி
பதிக்கேனோடொக்கக் காணும் தன்னை நினைத்திருக்கிறது. தன்னை
மீன்படு குட்டமாக அறிகிறதில்லை. ஸமயே ஜூ விஜாநாதி— செ
வ்வை கெடப் பரிமாறினாரையுமொக்கவிட்டுக் காரியங்கொள்ளவ
ல்லோமென்றறிகிறதில்லை. இவ்வளவில் செய்யவேப்பது என்னெ
ன்னில், யிக்ஷேபு— இப்போது க்ஷமையை வேண்டோம்.
விநியோகமுள்ளவிடத்தேயன்றோ கார்யங்கொள்வது. கோபத்
தோபாதி கார்யகாலத்தே அழைத்துக் கார்யங்கொள்ளப் பார்த்
தோம். அது என்? இக்ஷ்வாகுவம்ஶ்யராயிருப்பார்க்கு க்ஷமை
கொண்டு கார்யங்கொள்ளவேண்டாவோ என்னில், ஶே
ஜநே— அத்தால் பெற்றதென், அதிங்கு ஜீவிக்கிறதில்லை. இது
க்கு இங்குள்ளாருடைய ஸம்பந்தமே ப(ஷ)லியாநின்றதே.

அதும்—'திக்(யிக்ஷ)ஷமாம்' என்றதிலே நோக்காக அவதாரிகை—பெ
ண்ணித்யாதி. இவ்வாக்யத்துக்கு தாத்பர்யம்—பரிபவித்தது இருவர்க்கும் ஒ
த்திருக்கச் செய்தே அவளிடத்திலே க்ஷமை பண்ணினது என், இங்கு க்ஷ
மை பண்ணவேண்டாம் என்கிறதென், அங்கு க்ஷமை பண்ணினால் இங்கு
ம் க்ஷமை பண்ணவேண்டாவோ என்று. காலைக் கையைக்கட்டுகையாவது—
விற்காலைப் பிடிக்கையும், விற்சரட்டைக் கட்டுகையுமென்றபடி. கால்—வி
ற்கால். கை = விற்சரடு. 'கை புடை கோதை கைக்கட்டியாகும்' என்று
நிகண்டு. கைக்கட்டி = விற்சரடு. சாடுவுக்கு ஸ்புடம். 'முதலிகள்' என்
றவனந்தரம், முதலிகளுடைய ஶங்கைக்கு பரிஹாரம்—கைகேயி அபலை
யாகையாலே ராஜ்யத்தை ஆசைப்பட்டாளித்தனை. ஸமுத்ரம்போல அஸ
மர்த்தனாக நினைக்கவில்லை. ஆகையாலே அங்கு க்ஷமை கொண்டோம்.
இங்கு க்ஷமை வேண்டோம் என்று கண்டுகொள்வது. ஆனால் மூன்றா
ள் கண்வளர்ந்தருளி சரணம்புகவேணுமோ என்ன—இலனித்யாதி. இது
க்கு ப்ரத(ய)மபதத்திலே நோக்கு. 'க்ஷமயா ஸமாயுக்தம்' என்பது ஹேது
கர்ப்பவிசேஷணம். 'மாம்' என்று உறுத்திச்சொன்னதுக்கு பாவம்—ஸ
ப்ரேதத்யாதி. ஐயர்மகன் = சம்பராந்தகன்மகன். 'ஶத்ருஸைந்யப்ரதாபின:'
என்றதிலே நோக்கு. செவ்வைகெடப்பரிமாறினார் = அநீதியிலேநடந்தவர்
கள். ஒக்கவிட்டு—'த[ஷ்]மோ ரீசு ஸமுபைதி மார்த்தவம்' என்கிறபடியே

ப்ரஹாரத்தாலே ஶிக்ஷித்து அநுகூலராக்கியென்றபடி. இங்குள்ளாருடைய வென்றது ஸமுத்ரஸ்த ராவணாதிராக்ஷஸருடைய என்னுதல், ஸமுத்ரஸ்த துஷ்டஜந்துக்களுடைய என்னுதல்.

17. रामलक्ष्मणगुप्ता सा सुग्रीवेण च वाहिनी ।
बभूव दुर्धर्षतरा सर्वैरपि सुरासुरैः ॥ 25. 32.

ராமலக்ஷ்மணகு³ப்தா ஸா ஸுக்³ரீவேண ச வாஹிநீ । ப³
பூ⁴வ து³ர்த⁴ர்ஷதரா ஸர்வைரபி ஸுராஸுரை: ॥

ப—ரை ராமலக்ஷ்மணகு³ப்தா = ராமனாலும் லக்ஷ்மணனாலும் ரக்ஷிக்கப் பட்ட, ஸுக்³ரீவேண ச = ஸுக்ரீவனாலும், (ரக்ஷிக்கப்பட்ட) ஸா = அந்த, வாஹிநீ = ஸேனை, ஸர்வை: = எல்லா, ஸுராஸுரைரபி = தேவர்களாலும் அஸுரர்களாலும், து³ர்த⁴ர்ஷதரா = ஆக்ரமிக்கமுடியாததாக, ப³பூ⁴வ = இருந்தது.

ஈடு. (தி-வாய்-6-9-2) கடற்கரையிலே விட்டபோது பெருமாளை நோக்குகைக்கு, தம்பியார் மஹாராஜர் மைந்தத்விவிதர்களுள்ளிட்ட முதலிகளெல்லாரும் லங்கையிலே இட்ட, ஆகாசமெல்லாம் வெளிக்காவலைடைத்து, நிதி நோக்குவாரைப்போலே பெருமாளை நோக்கிக்கொண்டு கிடக்க, இவர்களித்தனைவரும் கண் சோர்ந்தவளவிலே, பெருமாள் தாம் கையும் வில்லுமாய்க்கொண்டு இவர்களுக்குப் புறம்பே நின்றுலாவினரிறே. அவன் நோக்குகைக்கு இத்தலைக் கண் செம்பளிக்குமத்தனையிறே வேண்டுவது. நாம் அவனுக்கு ரக்ஷகராக நினைத்திருக்குமது ப்ரம(ஞ, 8) மிறே. உணர்ந்து பார்த்தால் ரக்ஷகனாகவல்லான் அவனேயிறே.

அரும்— 'ஸுக்ரீவேண ச ஸஹிதா வாஹிநீ ராமலக்ஷ்மண குப்தா... பபூவ' என்று அந்வயம். ஸுரப்தம் அநுக்தர்களான மைந்தாதிகளையும் ஸமுச்சயிக்கிறது. கண் சோர்ந்தவளவிலே—கண்ணசைந்தவளவிலே. லக்ஷ்மண ஶப்தார்த்தம்— கையும் வில்லுமித்யாதி. 'ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:' என்றதிறே. கண் சோர்ந்தவாறே உலாவினரென்கையாலே, இவன் ஸ்வயத்நத்தைக் கைவிடுகையே அவன் ரக்ஷிக்கைக்குடலென்கிறார்— அவனித்யாதி. கண் செம்பளிக்கை— கண் மூடுகை. அதாவது— ஸ்வயத்நத்தில் நிவ்ருத்த

ருளை. பரிவாரான மஹாராஜரை ஸ்வயத்ந பரகோடியிலே கூட்டலாமோ, என்ன — நாமித்யாதி. நாம் கூட்டினதல்ல, வஸ்துகத்யா பர்யவஸிக்குமென்றபடி. ப்ரமமிறே—பக்திபாரவஶ்யமடியாக வந்த ப்ராந்தியிறே.

18. श्रीमता राजराजेन लङ्कायामभिषेचितः । 28. 2 .

ஶ்ரீமதா ராஜராஜேந லங்காயாமபிஷேசித: ।

ப—ரை. ஶ்ரீமதா = ஸ்ரீமானாகிய, ராஜராஜேந = ராஜாதிராஜனான ராமனால், (விபீஷணன்) லங்காயாம் = லங்காராஜ்யத்தில், அபிஷேசித: = அபிஷேகஞ்செய்யப்பட்டான்.

பெ—வ்யா. (பெரியதிருமொழி-4-6-3) 'ஶ்ரீமதா ராஜராஜேந லங்காயாமபிஷேசித:' என்றார்களிறே அவன்றன் பரிகரமான ஶுகஸாரணர்கள் தாங்களே. ஶ்ரீமதா — உனக்கு முடிதந்த ப்ரஹ்மாதிகளுடைய ஐஶ்வர்யம்போலன்றிக்கே, ஸுஸ்தூரூத ஸம்பத்துடையவனாலே காண் அவன் முடிபெற்றது. ராஜராஜேந — உனக்கு முடிதந்தவர்களுக்கு முடிகொடுக்கப் பிறந்தவனாலே காண். லங்காயாமபிஷேசித: — இனி உனக்கு ஒரு குடியிருப்புத் தேடிக்கொள்ளாய். அவன் பரிகரமாயிருந்து வைத்து அவன் மிடுக்கையும் ஐஶ்வர்யத்தையும் காணாநிற்கச் செய்தே இப்படி சொல்லுகைக்கு அடி — அவர் கையும் வில்லும் கண்டு போந்த நாளுண்மையாலே 'இக்கொசுகு நம்மை என் செய்யப் புகாநின்றதோ' என்று இவன் மதிப்பற நினைத்திருந்தபடியாலே.

19. अथ हरिवरनाथः प्राप्य संग्रामकीर्तिं
निशिचरपतिमाजौ योजयित्वा श्रमेण ।
गगनमतिविशालं लङ्घयित्वार्कसूनु-
र्हरिवरगणमध्ये रामपार्श्वं जगाम ॥ 40. 29.

அத ஹரிவரநாத: ப்ராப்ய ஸங்க்ராமகீர்த்திம் நிஶிசரபதிமாஜௌ யோஜயித்வா ஶ்ரமேண । ககநமதிவிஶாலம் லங்கயித்வார்க்கஸூநுர் ஹரிவரகணமத்யே ராமபார்ஶ்வம் ஜகாம ॥

ப—உரை. ததஃ = பிறகு, ஹரிவரநாதஃ = வாநரசிரேஷ்டர்களுக்கு நாதனை, ரவிஸுதஃ = ஸூர்யபுத்ரனாகிய ஸுக்ரீவன், ஸம்க்ராமகீர்த்திம் = யுத்தப் புகழை, அவாப்ய = அடைந்து, நிசிசரபதிம் = ராக்ஷஸராஜனாகிய ராவணனை, ஸங்க்யே = யுத்தத்தில், ஸ்ரமேண = சிரமத்தோடு, யோஜயித்வா = சேர்த்துவிட்டு, அதிவிபுலம் = மிகவும் பரந்ததான, கநகம் = ஆகாசத்தை, லங்கயித்வா = தாண்டி, ஹரிவரகணமத்யே = வாநரசிரேஷ்டர்களுடைய கூட்டத்தின் நடுவில், ராகவபார்ச்வம் = ராமன் பக்கத்தை, ஜகாம = அடைந்தான்.

ஈடு (திவாய் 7-4-1) பரிகரம் நிற்க மஹாராஜர் ராவணன் மேலே பாய்ந்தாப்போலே. ‘பையல் முடியும் தானுமாய்ப் பெருமாள் திருமுன்பே நிற்பதே. ராசாயிற்றே’ என்று பொறுமையாலே மேல் விழுந்தாரிறே. ததஃ ஹரிவரநாதஃ— தம்மோடொக்க வினைசெய்யவல்லபேர் தனித்தனியே அநேகரிறே. அவாப்ய ஸம்க்ராமகீர்த்திம்— இவர்களோடு கூடி நின்று ஒத்தபோராகவொண்ணாது. அசித்தலையிலே ஓரேற்றம் செய்து தாம் பெறவேணுமென்றிருந்தார். பூசல் தலையிலே பெருமாளுக்குண்டான கீர்த்தியையும் தந்தலையிலே ஏறிட்டுக்கொண்டார். நிசிசரபதிம்— அத்தலையிலும் அவனோடொக்க வினைசெய்யவல்லார் அநேகரிறே. ‘அவன் கீழ்த்திரியுமவர்கள் தரம் போரார்’ என்று அவன் றன்னோடே பொருதபடி. ஸங்க்யே— அவர்களைப்போலே வழியல்லாவழியே இளைப்பிக்கையன்றிக்கே, செவ்வைப்பூசல் செய்து இளைப்பித்தபடி. யோஜயித்வா ஸ்ரமேண— இதுக்கு முன்பு கூடாததொன்றோடே கூட்டினார். கநகமதிவிபுலம் லங்கயித்வா— பரப்பையுடைத்தான ஆகாசத்தைத் திறலாலே வருத்தமறக் கடந்தார். ரவிஸுதஃ— மீட்சியில் தம் வரவு தெரியாதபடி மீண்டார். பிறப்புக்கீடாகச் செய்தார். தன்னிலமிறே. ஆதித்யன் ஓரிடத்தினின்றும் ஓரிடத்தேறப் போம்போது தெரியாதிறே. ஹரிவரகணமத்யே— ‘இவர்களில் ஒரு வ்யாவ்ருத்தி தோற்றவொண்ணாது’ என்று இவர்கள் நடுவே நின்றார். ராகவபார்ச்வம் ஜகாம— அசித்தலையிலே மதி

க்க ஒரு வினை செய்தாரன்றே முன்னிற்கப்பெறுவார் என்று பெருமாள் பார்ஶ்வத்திலே வந்து நின்றார்.

அரும்—'ஹரிவர' என்று வரஶப்தப்ரயோகத்துக்கு பாவம்—தம்மோடித்யாதி. ஒத்தபோர்=ஸமாநயுத்தம், தூசித்தலை=யுத்தமுகம். செவ்வைப்பூசல்=தர்மயுத்தம். திறல்=மிடுக்கு. 'மத்யே' என்றதுக்கு பாவம்—இவர் வினிவித்யாதி, மதிக்க=பெருக்க, எல்லாரும் ஸந்தோஷப்படவென்றுமாம்.

ஏடு. (தி-வாய்-10-6-8) ஹரிவர நாயக:— ஒரு முதின் குடை நிழலிலே பையல் பெருமாளுக்கெதிராக வந்து தோன்றினவாறே, பொறுக்கமாட்டாமை மேல்விழுந்து, நெடும்போது பொருது இளைப்பித்து, அவன் மாயாப்ரயோகத்திலே கைவைக்குமளவானவாறே, 'இனி நமக்கும் அது வேண்டிவரும். அது நமக்கீடல்ல, பெருமாள் பண்ணின ப்ரதிஜ்ஞையை நாம் அழிக்கவொண்ணாது' என்று மீண்டார். ராமேண ஹி வ்ரதிஜ்ஞாதம்— ஸத்யஸங்கல்பரான பெருமாள் ப்ரதிஜ்ஞை பண்ணுகிறார். ஸர்வ ஸைந்யஸமக்ஷம்— வீரர்கள் திரள் நடுவே ப்ரதிஜ்ஞை பண்ணுகிறது. ஆனபின்பு இவர்க்கு நிர்விஷயமாக்கவொண்ணாதென்று பார்த்தார். ஹரிவர நாயக:— தாம் செய்த இக்கார்யம் தம் பரிகரத்தில் செய்வாரில்லாமல் செய்தாரல்லர், பொறுமையாலே செய்தாரித்தனை. வ்ராவ்ய ஸம்ஹ்ராஷ்டம்— பூசல்பாக்யமென்று தனியே ஒன்று உண்டிறே, அத்தால் வந்த புகழைத் தாம் படைத்தார். நிஶிவரவ்ய— களவு பூசல் செய்வார்க்கு ஒதுங்க நிழலான பையலை. ராஜபுத்ரர்களை அகற்றித் தனியிடத்திலே பிராட்டியைப் பிரித்த பையலிறே. ருஜௌ— அவர்களுக்கு அபூர்வமான செவ்வைப்பூசலிலே. யோஜயித்வா ஶரேண— அவனை இளைப்போடே கூட்டினார், தாம் புகழோடே கூடினார். மமந்தே விவிஶாலம் ஆஜயித்வா— நடுவிடைவெளி பெருத்திருக்கிற ஆகாசத்தை வருத்தமறக் கடந்தார். ஸூர்யஸூநு:— அதுசெய்தபடி ஆதித்யபுத்ரனென்று தோற்றும்படியாயிருந்தது. உதயகிரியிலே தோற்றினால் பின்பு அஸ்தமித்து நிற்கக் காணுமித்தனையிறே. ராமேஷாஸ்யம் ஜமாதே— பெருமாளைப் பிரிந்தபடியாலே வந்து கிட்டின

தும் செய்தோம் என்று தோற்றும்படி மதிக்கவொன்று செய்து வாராமையாலே, நேர்கொடு நேர் முன் நிற்கமாட்டாதே பெருமாளருகே போய் நின்றார். பையல் தலையைப் பிடுங்கிக் கொண்டுவந்து திருவடிகளிலேயிடப் பெறாத நாம் என் சொல்லி முன்னே நிற்பதென்று பெருமாளருகே வந்து நின்றார்.

அரும்— நமக்குமித்யாதி. நாமும் மாயா ப்ரயோகம் கைக்கொண்டால், அவனுக்குக் கொலை தப்பாது. கொன்றால் பெருமாளுடைய ப்ரதிஜ்ஞைக்கு பங்கம் வருமென்றபடி. 'ராமேண ஹி' இத்யாதி. 'உத்ஸாதகமமித்ராணும் ஸீதா யை: பரிவஞ்சிதா' என்று ராவணனிடம் மாருதி சொல். பூசல் பாக்யம்—வீரஸ்ரீ. வந்து கிட்டுவதும் செய்தோமென்று தோற்றும்படி— வந்து கிட்டுமிடத்தில் இன்னது செய்தோமென்று தோற்றும்படி என்று கூட்டுவது.

२०. त्वयि किञ्चित्समापन्ने किं कार्यं सीतया मम । 41. 4.

தவயி கிஞ்சித்ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம।

ப—ரை. த்வயி = நீ, கிஞ்சித்ஸமாபந்நே (ஸதி) கொஞ்சமாவது ஆபத்தை அடையும்போது (அடைவதாயிருந்தால்) மம = எனக்கு, ஸீதயா கிம் கார்யம் = ஸீதையால் ஆகவேண்டியது என்ன?

ஈடு (தி-வாய். 1. 2. 6.) 'த்வயி கிஞ்சித்ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம' என்றுமாப்போலே. இன்று ஆஶ்ரயித்ததொரு திர்யக்குக்கு ஒரு வாட்டம் வரில் நித்யாஶ்ரிதையான பிராட்டியாலும் கார்யமில்லை, அன்றீன்றகன்றின்பக்கல் வாத்ஸல்யத்தாலே முன்னணைக்கன்றையும் கொம்பிலே கொள்ளுமாப்போலே.

அரும்— த்வயீத்யாதி. 'பரதேந மஹாபாஹோ லக்ஷ்மணேந யவீயஸா। ஶத்ருக்நேந ச ஶத்ருக்ந ஸ்வஶரீரேண வா புந:' என்பது மேலிலுள்ள ஶ்லோகம். இங்கு 'ஸ்வஶரீரேண' என்றால் ஸ்வேஷாம் ஶரீரேண என்று விக்ரஹஞ் செய்து ஸ்வகீயரான பிராட்டி முதலானோருக்கெல்லாம் ஜீவநமாயிருக்கிற திருமேனி என்று அர்த்தம் கொள்ளவேண்டும். ஸ்வரூபத்தம் தம்மை சொல்லுகிறதல்ல. தம்முடைய திருமேனி என்ற அர்த்தம் 'ஶரீரேண' என்றபோதே ஸித்தமிறே.

ஏடு (தி--வாய். 4-5-8) ஜயி கிஞ்சித்ஸாவதோ கிம்காயம் வீதயா இஇ— பெருமாள் எழுந்தருளி நிற்கச்செய்தே ராவணன் கோபுரசிகரத்திலே வந்து தோற்றினவாறே, 'ராஜேந்த்ரோ (ஜெ ர) ஷியான பையல் திருமுன்பே நிற்கையாவதென்' என்று மஹாராஜர் அவன்மேலே எழப்பாய்ந்து வென்றுவந்தபோது பெருமாள் அருளிச்செய்கிறார்— ஸஹஸா ஸாஹஸயுக்தாநி ந க்ஷுவந்தி ஜநேஸ்வராः— சிலர் மேல் விழவேண்டினால், பரிகரபூதர் நிற்க ப்ரதாநரோ மேல் விழுவார். லோகநாயக வராஸ ஹஸ்தஸ்வா ஸுக்ரீவம் நாயஜிஷ்டி—கிடைப்பது கிடையாதொழிவது, இச்சியாநின்றார். ஸுக்ரீவம் ஶரணம் கதः—'ஸ்ரீவிபீஷணாழ்வானைப் புகுரவொட்டேன்' என்கிறார் மஹாராஜர். 'இவன் புகுராவிடில் நாம் உளோமாகோம்' என்கிறார் பெருமாள், இப்படி இருவரும் விப்ரதிபத்தி பண்ணினவிதுக்குக் கருத்தென்' என்று ஜீயர் கேட்க, இருவரும் ஶரணாகதரானவர்களை விடோம் என்று விப்ரதிபத்தி பண்ணுகிறார்கள் காணும் என்று பட்டர் அருளிச் செய்தவார்த்தை. 'ஸுக்ரீவம் ஶரணம் கதः' என்றத்தை நடத்தப் பார்த்தார் மஹாராஜர். 'ராகவம் ஶரணம் கதः' என்றத்தை நடத்தப்பார்த்தார் பெருமாள். ஆகையிறே 'ஆநய' என்று அவரை விடுவித்து அழைத்துக்கொள்ளவேண்டிற்று. ஜயி கிஞ்சித்ஸாவதோ— நீர் மஹாராஜரான தாம் குலைப அவன் ஒரு வார்த்தை சொல்லுமாகில், நீர்தேடிப்போகிற சரக்குத்தான் நமக்கு என் செய்ய என்றாரிறே.

அரும்— இதுக்குக் கீழில் ஶ்லோகத்திலே ஓரர்த்த விஶேஷமுண்டாகையாலே அத்தை எடுத்தருளிச் செய்கிறார்— ஏவமித்யாதி. பையல்—க்ஷுத்ர(ன்)ன். எழப்பாய்ந்து—கிளம்பிக்குதித்து. வென்று—ஜயித்து. சிலரித்யாதி. பரிகரபூதனான என்னை ஏவி கார்யமாகாவிடிலன்றோ நீர் மேல் விழவேண்டுவதென்று கருத்து. தம்மைப் பரிகரமாக நினைத்திருப்பதுக்கு ப்ரமாணம்— லோகநாத இத்யாதி. க்த்வா ப்ரத்யயம் அங்கத்வ விதாயகம். 'இச்சதி' என்றதுக்கு பாவம்—கிடைப்பதித்யாதி. ப்ரஸங்காத் ஹ்ருதயம்— ஸ்ரீவிபீஷணனை யித்யாதி. விப்ரதிபத்தி= விருத்த ப்ரதிபத்தி. பரிஹாரம்— இருவருமித்யாதி. பரிவாலே என்றபடி. இதெல்லாம் ரஸோக்தி அன்றி தத்வ ஸ்திதியில் மஹாராஜரை ஶரண்யரென்னப் போகாதிறே. பட்டர் பெருமாளுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தைப் பற்ற ரஸோக்தியாலே

பரிஹரித்தாரேயாகிலும், ஶேஷபூதரான மஹாராஜர் ஶேஷியான பெருமாளிடம் பரிவாலே இப்படிப் பேசினரென்று பட்டருக்கு ஹார்த (ஹ்ருத்) பாவம். ஆகையிறே யித்யாதி— மஹாராஜர்க்கு ஶேஷமாகத் தம்மை நினைத்திருக்கையாலேயிறே 'ஆநயைநம்' என்று மஹாராஜர் முன்னிலையாக அங்கீகரிக்க வேண்டிற்றென்றபடி. ஒரு வார்த்தையாவது— ஜாதி நிரூபணம் பண்ணுகை. தரம் = அதிஶயம். தேடிப்போகிறசரக்கு = பிராட்டி.

21. शाखामृगा रावणसायकार्ता जग्मुः शरण्यं शरणं स्म रामम्। 59.46

ஶாகா²ம்ருகா³ ராவணஸாயகார்தா ஜக்³முஃ ஶரண்யம் ஶரணம் ஸ்ம ராமம் ।

ப—ரை. ஶாகா²ம்ருகா³ஃ = வானரர்கள், ராவணஸாயகார்தாஃ = ராவணனுடைய அம்புகளால் பீடிக்கப்பட்டவர்களாய், ஶரண்யம் = ரக்ஷகனுன, ராமம் ஸ்ம = ராமனையே, ஶரணம் = ஶரணமாக, ஜக்³முஃ = அடைந்தார்கள்.

ஈடு. ( தி-வாய். 7. 1. ப்ரவேஶம்) ஶாகா²ம்ருகா³ஃ— பூசலிலே புக்கு அங்குண்டான வாஸனையின்றிக்கேயிருக்கை. பனையோடு பனை தத்தித்திரியுமவையிறே. ராவணஸாயகார்தாஃ— இக்பாலர்களையுங்கூட அச்சமுறுத்தி வளர்ந்தவன் கையிலம்புகள். ஜக்³முஃ ஶரண்யம் ஶரணம் ஸ்ம ராமம்— தங்களுடைய ஆபத்தை அறிந்து பரிஹரிக்க வல்லவனையும் பார்த்துப் பற்றினர்கள்.

22. शत्रूणामप्रकम्प्योऽपि लघुत्वमगमत्कपेः ॥ 59. 118.

ஶத்ரூணாமப்ரகம்ப்யோபி லகு⁴த்வமக³மத்கபேஃ ।

ப—ரை. (லக்ஷ்மணன்) ஶத்ரூணாம் = ஶத்ருக்களுக்கு, அப்ரகம்ப்யோபி = அசைக்கமுடியாதவனுயிருந்தும், கபேஃ = ஹநுமானுக்கு, லகு⁴த்வம் = லகுவாயிருப்பதை, அக³மத் அடைந்தான்.

ஈடு. (தி-வாய் 1-3-1) ராவணன் ஸபரிகரனைக்கொண்டு எடுக்கப் புக்கவிடத்தில் நெஞ்சில் ஶாத்ரவத்தாலே எடுக்கமாட்டிற்றிலன். திருவடி தனியனுயிருக்கச் செய்தேயும் நெஞ்சில் செவ்வையாலே கருமுகைமாலைபோலே எடுத்தேறிட்டுக்கொண்டு போ

ளுன். இங்ஙனன்றாகில், ராவணனுக்குக் கனக்கவேணும் என்றும், திருவடிக்கு நொய்தாகவேணும் என்றுமன்று. வஸ்துஸ்வபாவமிருக்கும்படியாயிற்று இது.

23. स्मरन् राघवबाणानां विव्यथे राक्षसेश्वरः । 60. 3.

ஸ்மரந் ராகவபா³ணாநாம் விவ்யதே² ராக்ஷஸேஶ்வர: ॥

ப-ரை. ராக்ஷஸேஶ்வர: = ராவணன், ராகவபா³ணாநாம் = ராமபாணங்களை, ஸ்மரந் (ஸ்மரன்) = நினைத்துக்கொண்டு, விவ்யதே² = வருத்தப்பட்டான்.

பெ-வ்யா. (பெரியதிருமொழி 8-1-1.) ஸ்மரந் ராகவபா³ணாநாம் — பெருமாள் திருநாமத்தால் எழுத்துவெட்டின அக்ஷரங்களையும், திருச்சரங்களுடைய ஸந்நிவேஶத்தையும் ஸ்மரியாநின்றுகொண்டு. விவ்யதே² — அவர் ஒருகால் முன்னே நின்றுபோகச் செய்தேயும், எப்போதும் ஒக்க முன்னே நிற்கக்கண்டாற்போலே வ்யதி (ழி) த்தான். ராக்ஷஸேஶ்வர: விவ்யதே² — இவன் ஆண்ட பரிகரமடங்கலும் வினைக்கு உடலாயிற்றதில்லை. எடுத்தெடுத்துக் குலைக்கிறபோது சுளிப்பிடாமிட்டு அழுக்குறுகைக்கு உடலாமித்தனை.

அரும்— ஸ்மரண மாத்ரத்தாலே வ்யதை வரக்கூடுமோ. கண்டாலன்றோ வ்யதை வருவது என்ன, ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமான ஸ்மரணம் அது என்றருளிச் செய்கிறார்— அவரொருகாலித்யாதி. சுளிப்பிடாம்—கம்பளி.

24. शत्रोः प्रख्यातवीर्यस्य रञ्जनीयस्य विक्रमैः ।
पश्यतो युद्धलुब्धोऽहं कृतः कापुरुषस्त्वया ॥ 106. 6.

ஶத்ரோ: ப்ரக்²யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை: ।
பஶ்யதோ யுத்³த⁴லுப்³தோ⁴ऽஹம் க்ருத: காபுருஷஸ்த்வயா ॥

ப-ரை. ப்ரக்²யாதவீர்யஸ்ய = ப்ரஸித்தமான வீரத்தன்மையையுடையவனும், விக்ரமை: = பராக்ரமங்களாலே, ரஞ்ஜநீயஸ்ய = மகிழ்விக்கத்தக்கவனுமான, ஶத்ரோ: = ஶத்ருவானவன், பஶ்யத: (ஸத:) = பார்த்துக்கொண்டிருக்கும்போது, யுத்³த⁴

ப்ரியஃ = யுத்தத்தில் ஆசைகொண்ட, அஹம் = நான், த்வயா = உன்னால், அவரூடஃ = தாழ்ந்தமனிதனாக, க்ருதஃ = செய்யப்பட்டேன்.

பெ—வ்யா. (பெரியதிருமொழி, 2-8-2-) ஶத்ரோஃ— கெடுவாய், என்னுடைய ஶத்ருவை ஆரென்று நினைத்துத் தேரை மீட்டுக்கொடு போந்தாய். ப்ரவ்ராஜீயபலஸ்ய = எதிரிகளான நம் படைவீட்டிலும் ப்ரஸித்தமாயன்றோ அவருடைய ஆண்பிள்ளைத் தனமிருப்பது, நீ கேட்டறியாயோ, அது எறிப்பாயாத மேடில்லை காண். ரணநீபஸ்ய விக்ரமைஃ—கண்டு பராக்ரமிக்கவொண்ணாத படி அளவற எதிரி முடுகினால் அது நிலமாக்கிக்கொண்டு பராக்ரமிக்கும்படியைப் பார்த்தால், காந்தனைவிரும்புமாபோலே எதிரிகளுக்கு விரும்பவேண்டும்படி காண் அவர் ஆண்பிள்ளைத்தனமிருப்பது.

அரும்— ஶ்லோகத்துக்குத் தொகுத்ததாத்பர்யம்— கெடுவாயித்யாதி. நம்மாலே ஜயிக்கத் தக்கவனென்றோ, நாலு பேர்க்கும் 'ஜயித்து வந்தான்' என்று தோற்றும்படியோ நீ மீட்டுக்கொண்டு வந்தாயென்று தாத்பர்யம். ப்ரோபலர்க்கார்த்தம்— எதிரிகளித்யாதி. முடுகினால்—மேலிட்டால்.

25. उत्तिष्ठोत्तिष्ठ किं शेषे प्राप्ते परिभवे नवे ।
अद्य वै निर्भया लङ्कां प्रविष्टाः सूर्यरश्मयः ॥ 114. 82.

உத்திஷ்டோத்திஷ்ட கிம் ஶேஷே ப்ராப்தே பரிபவே நவே ।
அத்ய வை நிர்பயா லங்காம் ப்ரவிஷ்டாஃ ஸூர்யரஶ்மயஃ ॥

ப—ரை. உத்திஷ்ட உத்திஷ்ட = எழுந்திரு எழுந்திரு. நவே = புதிய, பரிபவே = அவமானம், ப்ராப்தே(ஸதி) = வந்திருக்கும்பொழுது, கிம் ஶேஷே = நீ தூங்கலாமா. அத்யைவ = இப்பொழுதோ, ஸூர்யரஶ்மயஃ = சூரியகிரணங்கள், நிர்பயாஃ = பயமற்றவைகளாய், லங்காம் = லங்கையுள், ப்ரவிஷ்டாஃ = நுழைந்தன.

பெ—வ்யா. (பெரியதிருமொழி–1-2-2) ராவணன் பட்டுக்கிடக்க அவன் பார்யை 'ஆதித்ய கிரணங்கள் இங்குப் புகுந்து ஸஞ்சரியாநின்றன கிடாய்' என்றாளிறே, அப்பரிபவம் பொறுமை யிணமெழுந்திருக்குமென்று, ப்ராப்தே பரிபவே நவே । அத்யைவ நிர்பயா லங்காம்— இதுக்கு முன்பில்லாததொன்று இப்போது உண்டாயிற்று கிடாய். முன்பு நெல்லுலர்த்த வேண்டுவது

ஸஞ்சரித்துப் போமித்தனையாயிற்று ராவணபயத்தாலே. இப்போ து நிர்ப்பயமாய்க்கொண்டு உலாவாநின்றன,

26. मरणान्तानि वैराणि निर्वृत्तं नः प्रयोजनम् ।
क्रियतामस्य संस्कारो ममाप्येष यथा तव ॥ 114. 101.

மரணாந்தாநி வைராணி நிவ்ருத்தம் நஃ ப்ரயோஜநம் ।
க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ ॥

ப—ரை. வைராணி = பகைமைகள், மரணாந்தாநி = சாவோடு முடிவுபெறுகின்றன. நஃ = நமது, ப்ரயோஜநம் = பயன், நிவ்ருத்தம் = நிறைவேறியது. அஸ்ய = இந்த ராவணனுக்கு, ஸம்ஸ்காரஃ = சரமச்சடங்கு க்ரியதாம் = செய்யப்படட்டும். ஏஷஃ = இவன், தவ = உமக்கு, யதா = எப்படியோ, மமாபி = எனக்கும், ததா = அப்படியே.

ஈடு. (தி—வாய. 2-7- ப்ரவேசம்) மரணாந்தாநி வைராணி— ரிஷிகள் குடியிருப்பை அழித்து, மைதிலியைப் பிரித்து, நம்மு யிர்நிலையிலே நலிந்தாற்போலே ஸ்ரீஜடாயு மஹாராஜரை நலிந்து, இவையெல்லாம் செய்யமாட்டானே இவன் இனி. நிவ்ருத்தம் நஃ ப்ரயோஜநம்— இவன் ஜீவிக்கிற நாளிலே 'நாம் செய்யும் நன் மை இவன் விலக்காதொழிவது காண்' என்றிருந்தோம், அது அந்நாளில் பெற்றிலோம்; நாம் தேடியிருந்தது முந்தற முன்னம் ஸித்திக்கப்பெற்றோமிறே. க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரஃ— இவன் நாம் செய்யும் நன்மை விலக்காதானனவளவு பிறந்தவின்றும் இழக்கவேணுமோ. வேண்டுவன செய்யப்பாரும். மமாப்யேஷ யதா தவ— நீர் இருய்த்திருந்தீராகில், குடற்றொடக்குடையாரி லே ஒருவன் செய்யுமத்தனையன்றோ; நாம் இவனுக்கு வேண்டு வன செய்ய, நீர் பின்னைக் கடக்க நில்லீரென்றாரிறே. ஸ்ரீவிபீஷ ணாழ்வான்பக்கல் ஓரம் ராவணனளவுஞ் சென்றதிறே.

அநும்— ராவண விஷயத்தில் நம்முடைய வைரங்கள் ராவணன் மரணாந்தங்களென்று அர்த்தமன்று. கிந்து, நம்முடைய விஷயத்தில் ராவண ன் பண்ணின வைரங்கள் ராவணன் மரணாந்தங்களென்று வ்யாக்யாநம் ப

ண்ணுகிறார்— ரிஷிகளித்யாதி. இப்படி வ்யாக்யாநம் பண்ணுவது— 'ஸம்ஜாதபாஷ்ப:' என்னும்படியான குணாதிக்யத்தைப் பற்ற. ப்ரயோஜநம் ஸீதாவாப்தியல்ல என்று, வேறுவிதமாக வ்யாக்யாநிக்கிறார்— இவனித்யாதி. இவ்வாறு வ்யாக்யானிப்பது 'யதி வா ராவண: ஸ்வயம்' என்பதைக் கடாக்ஷித்து. நாம் தேடியிருந்தது— அப்ரதிஷேதம். விலக்காதொழிவது காண்— விலக்காதொழிவதொன்றே. 'ராக்ஷஸாநாம் பலாபலம்' என்று இவனை ப்ராதாவாகச் சொல்லுகையாலே, குடற்றொடக் குடையாரிலே என்றபடி. ஓரம்—பக்ஷபாதம்.

27. निभृतः प्रणतः प्रह्वः । 116. 4.

𑌨𑌿𑌭𑍃𑌤𑌃 𑌪𑍍𑌰𑌣𑌤𑌃 𑌪𑍍𑌰𑌹𑍍𑌵𑌃 ।

ஈடு. (தி-வாய். 3-7-2) 𑌨𑌿𑌭𑍃𑌤𑌃— ஒரு அவயவத்திலே எல்லா அவயவங்களும் ஒடுங்கும்படியாயிருக்கை. 𑌪𑍍𑌰𑌣𑌤𑌃— வேறே சிலர் எடுக்கவேண்டும்படி சிதில (ஶிதில) னாய் விழுந்து கிடக்கை. 𑌪𑍍𑌰𑌹𑍍𑌵𑌃— 'இப்படி கிடந்தோம்' என்னுமது நெஞ்சில் நடையாடா திருக்கை.

28. दासीनां रावणस्याहं मर्षयामीह दुर्बला । 116. 41.

𑌦𑌾𑌸𑍀𑌨𑌾𑌂 𑌰𑌾𑌵𑌣𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌮𑌰𑍍𑌷𑌯𑌾𑌮𑍀𑌹 𑌦𑍁𑌰𑍍𑌬𑌲𑌾 ।

ப—ரை. 𑌦𑍁𑌰𑍍𑌬𑌲𑌾 = பலமில்லாத, 𑌅𑌹𑌂 = நான், 𑌇𑌹 இங்கு, 𑌰𑌾𑌵𑌣𑌸𑍍𑌯 = ராவணனுடைய, 𑌦𑌾𑌸𑍀𑌨𑌾𑌂 = வேலைக்காரிகளுடைய (குற்றத்தை) 𑌮𑌰𑍍𑌷𑌯𑌾𑌮𑌿 = பொறுக்கின்றேன்.

ஈடு. (தி-வாய்- 5-4-5) 𑌦𑌾𑌸𑍀𑌨𑌾𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌿— திருவடிசென்று ராக்ஷஸிகளை நலியப்புக, இவர்கள் ராவணன் சோறுண்டு அவனுக்குப் பரதந்த்ரைகளாகையாலே என்னை நலிந்தார்களாகில், தங்களாலே வந்ததொன்றன்றாகில், அது தனக்கு நாமும் 'பொறுத்தோம்' என்று நேர்த்தரவு கொடுத்த பின்பு இனி 'இவற்றை நலிகிறதென்னென்ன, 'ராவணனும் பட்டானாகில் நம்மை நெடுநாள் நலிந்து போந்த இப்பெண் பயல்களை இப்போது பொறுக்கவேண்டுகிறதென்' என்ன, 𑌦𑍁𑌰𑍍𑌬𑌲𑌾— 'சிலர் நம்மை நலிந்தார்கள் என்று நாமவர்களை நலியப்புக்கால், அப்போதே அவர்கள் கண்

குழிவு காணமாட்டாதார் பின்பு செய்வதென் பொருமல். ராவண னும்பட்டு பெருமாளும் விஜயிகளான பின்பு இனி இதொழிய வேறொரு (ஔஷதம்) மில்லையிறே.

அரும்— நேர்த்தரவு= செல்லுச் சீட்டு. கண் குழிவு= தைந்யம்.

ஈடு. (தி-வாய். 6- 10- 10.) ராக்ஷஸிநாசித்ரிஷ்— திருவடி 'ராக்ஷஸிகளை என்கையிலே காட்டித்தரவேணும்' என்ன, பிறர் கண்குழிவு காணமாட்டாத துர்ப்பலை காண் என்றாளிறே. ராவ ணன் பட்டானாகில், பெருமாள் விஜயத்தோடே நின்றாராகில், வே றொரு தௌர்ப்பல்யமில்லையிறே. இனி தௌர்பல்யமாவது- பிறர் நோவு காணமாட்டாமையிறே.

29. पापानां वा शुभानां वा वधार्हाणां प्लवंगम ।
कार्यं करुणमार्येण न कश्चिन्नापराध्यति ॥ 116. 45.

பாபாநாம்வா ஶுபாநாம்வா வதார்ஹாணாம் ப்லவங்கம ।
கார்யம் கருணமார்யேண ந கஶ்சிந்நாபராத்யதி ॥

ப—ரை. ப்லவங்கம= ஹநுமானே, பாபாநாம்வா= பாபி களாயினும், ஶுபாநாம்வா = நல்லவர்களாயினும், வதார்ஹா ணாம்= கொல்லத்தகுந்தவர்களுடைய(விஷயத்தில்) கருணம்= தயையுள்ள கார்யமே, ஆர்யேண= நல்லவனால், கார்யம்= செய் யத்தக்கது, கஶ்சித்= எவனும், ந அபராத்யதி(இதி)ந= குற்ற மற்றவனல்லன்,

ஈடு. (தி–வாய்-6-10-10) பாபாநாம் வா— பிராட்டியுடைய அபயப்ரதானஶ்லோகம். 'ராவணனும் பட்டு, பெருமாளும் விஜயி களானார்' என்று பெரிய ப்ரியத்தைப் பிராட்டிக்குத் திருவடி விண் ணப்பம் செய்ய, பிராட்டியும் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே விம்மல் பொ ருமலாய் ஸ்தப்தையாயிருக்க, இவனும் விக்கலுக்கு வெம்மாற்றம் போலே 'கிம் த்வம் விஜயஸே தேவி கிம் த்வம் மாம் நாபிபாஷ ஸே' என்று பெரிய ப்ரியத்தை வந்து விண்ணப்பஞ்செய்த என க்கொரு மறுமாற்றம் சொல்லாதே தேவரீரெழுந்தருளியிருக்கிற இருப்பு என்றான் என்று திருவடி விண்ணப்பம் செய்ய, பிராட்டி

யும் ‘உனக்கொரு ஸத்ருஶமாகத் தரலாவதொன்று இல்லாமை காண் நான் பேசாதிருந்தது’ என்ன, இவனும் ‘இவ்வளவிலே நம்மபேக்ஷிதத்தை விண்ணப்பம் செய்துகொள்ளவேணும்’ என்று பார்த்து, ‘தேவரைச்சுற்றும் முற்றும் நலிந்த ராக்ஷஸிகளாகிறார் க்ரூரைகளாய் தத(க்ஷ)நுகுணபா(ஹா)வைகளாயிற்று, ராவணனுக்கு முன்பே கொல்லவேண்டுவது இப்பெண்பிள்ளைகளையாயிற்று, அவனும் இவர்களோபாதி கேடனல்லன், இவர்கள் இப்போது பாம்புபடம் அடங்கினாப்போலே இருக்கிறார்களித்தனையாயிற்று, இவர்களை பஹுப்ரகாரமாக ஹிம்ஸிக்கப்பாராநின்றேன், ‘முஷ்டிபி: பாணிபிஶ்சைவ’ என்று கையாலேகுத்தியும் காலாலே துகைத்தும் நகங்களாலே சாடித்தும் பற்களாலே கடித்தும் துண்டித்தும் ‘ஹிநம் ஹிநம் ஶரீரோத்யூஹ்ய’ என்று பெருமாள் திருச்சரங்கள் செய்ததெல்லாம் நானே பண்ணப்பாராநின்றேன், பகவதபசாரிகளையும்பாகவதாபசாரிகளையும்தண்டிக்கும்க்ரமத்திலேதண்டிக்கக்கோலாநின்றேன், முன்பு வந்தபோது இடமில்லாமை விட்டுப்போனேனித்தனை, இப்போது எனக்கு எல்லா ப்ரத்யுபகாரங்களும் பண்ணியருளிற்றாகலாம், இதித்தனையும் திருவுள்ளம் ஆகவேணும் என்றான் என்ன, ‘பாபாநாம் வா’ என்றருளிச் செய்கிறாள். பாபாநாம் வா ஶுபாநாம் வா — இவர்கள் நீ நினைத்திருக்கிறபடியே பாபைகளாகவுமாம், நான் நினைத்திருக்கிறபடியே ஶுபைகளாகவுமாம். அது தானேயன்றோ உத்தேஶ்யம். ‘தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்’ என்றாப்போலே அழுக்குடையவனன்றோ குளிக்க ப்ராப்தியுடையான். அவர்கள் பாபைகளாகிலன்றோ நாம் முகம் கொடுக்கவேண்டுவது, ஶுபைகளாகில் உன் வால் வேணுமோ, அவர்கள் புண்யங்களே அவர்களுக்குக் கை கொடுக்குமே, கைம்முதலில்லாதார்க்கன்றோ நாம் கைம்முதலாகவேண்டுவது என்றாள். வதார்ஹாணாம் — தண்ட்யரைத் தண்டிக்கவும் அல்லாதாரைத் தவிரவும் சொல்லுகிற தர்மஶாஸ்த்ரம் தேவரைத்தோற்றிக் கிழித்துப் பொகட்டக்கடவதோ என்ன, ஆரேனுமாக ஶரணாகதரை ரக்ஷிக்கக்கடவதென்கிற விஶேஷஶாஸ்த்ரம் உன்

னைத் தோற்றுக் கிழித்துப் போகடக் கடவதோ என்கிருள், 'ஶரணம்' என்று வந்த விபீஷணுழ்வான் தோஷவானேயாகிலும் ‹ந த்யஜேயம்' என்று பெருமாள் கடற்கரையிற்சொன்ன வார்த்தை கட்லோசையாகக் கடவதோ என்கிருள். ப்லவங்கம— பின்னையும் இவன் புத்தி திரியவிடாமையினுலே ஹரிஹரி என்கிருள். ப்லவங்கம என்கிருள். நச்சினத்தை நச்சும் ஜாதியானமை கண்டோமே என்கிருள். வஸிஷ்ட்டாதிகள் மந்த்ரிக்கும் குடியான இக்ஷ்வாகுவம்ஶத்தில் பிறந்தாயல்லே, யோகிகளான ஜநககுலத்தில் பிறந்தாயல்லே, காட்டிலே பணேயோடு பணே தத்தித் திரிகிற ஜாதியிலேயிறே பிறந்தது. அங்ஙனுத்தார்க்கு ஶரணுகதியோட்டை தெரியாதிறே என்கிருள். ‹வாநரோத்தம' என்றவள், ஹரிஹரி என்கிருள், தானேயிறே ப்லவங்கம என்கிருள். ராஜாக்களுமாய் மூலேயடியே நடக்கவுரியருமாயிருக்கிற பெருமாளும் எங்கள் முன் இத்தனை கோபித்தரியார், நீ வாநரஜாதியாயிருந்து வைத்து இங்ஙன் கோபிக்கக்கடவையோ. காயம் கருணம்— இவர்கள் புண்யபாபம் கிடக்க, இப்போதோடுகிற தயநீயதசையைப் பாராய், உன் கையிலே அகப்பட்டு நாமென்படக்கடவோம் என்று தியங்குகிறபடி பாராய். இவர்களுக்கு வேறு ரக்ஷகரில்லையே, இப்போது இவ்வளவில் நாம் இரங்கவேணும் காண். ஆர்யேண— இவையெல்லாம் இப்போது நான் கற்பிக்கவேண்டும்படியாவதே உனக்கு. ஆர்யேண—ஐந்த்ரவ்யாகரணபண்டிதனென்கிறது பொய்யோ. அவையுமெல்லாம் கற்றுக் கேட்டிருக்கச் செய்தேயும், இப்போது ராமகோஷ்ட்டியில் பரிசயம் பின்னாட்டினபடியாகாதே, அக்கோஷ்டியிற் பழக்கமிறே நீ இங்ஙன் சொல்லவல்லேயாயிற்று. நான் போந்த பின்பு அக்கோஷ்ட்டி இங்ஙனே நீரற்றதாகாதே என்று கருத்து. ந கஶ்சிந்நாபராத்யதி— ஸம்ஸாரத்தில் குற்றமில்லாதார் யார் திரை நீக்கிக் கடலாடப் போமோ. நற் குதிரையாகப் பாவித்திருக்கிற பெருமாள்தான் குற்றவாளரல்லரோ, நான்தான் குற்றவாட்டியல்லேனோ, நீதான் குற்றவாளனல்லையோ. பெருமாள் குற்றவாளரானபடி எங்ஙனே என்னில்,

தாம் காடேறப் போந்தார். அவர்பின்னே மடலூருவாரைப்போலே இளையபெருமாளும் போந்தார். தம்மோடே ஏகாந்தபோகம் பண்ணக் கடவதாக விலையகலப் படுத்துக்கொண்டு நானும் போந்தேன். என்னைப் பிரிந்து பத்து மாஸமிருந்தார். தாம் வாராவிட்டால் தம்மதோர் அப்பு செங்கமாட்டாமையில்லையிறே இவ்வழி. இத்தனை நாள் பிரிந்திருக்க வல்லரானபோதே பெருமாள் பக்கலிலேயன்றோ குற்றம். பாரதந்த்ர்யத்துக்கு அநுகுணமாகப் பேசாதிராதே, அது தன்னைச்சொன்ன என்பக்கலதன்றோ குற்றம். இனி, நாயகன் சொன்ன கார்யம் செய்த அடியாரை தண்டிக்கப்பார்த்தவன்று, பெருமாளருளிச்செய்த கார்யம் செய்யப் போந்த உன்னை முற்பட தண்டித்துககொண்டன்றோ ராவணன் சொன்ன கார்யம் செய்த இவர்களை தண்டிப்பது. ஆகையால் நீயல்லவோ குற்றவாளன். எல்லாப்படியாலும் பெருமாள் ஒருவிஷயத்தை முனிந்தவன்று ஆறவிடுகைக்கு நானுண்டு. நானும் அவர் வழி போகவேண்டியிருந்தவன்றைக்கு நீ உண்டு என்றிருந்தேன். நீயும் இங்ஙனேயானால் அபராதம் செய்தார்க்குப் புகுவாசலுண்டோ என்கிறாள்.

அநும்— விம்மல்பொருமலாய்= அத்யுன்மஸ்தகமாய். இது 'ப்ரஹர்ஷேணவருத்தா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந' என்றத்தைப் பற்ற. வெம்மாற்றம் = வெவ்விய வார்த்தை. உன் வால் வேணுமோயித்யாதி— வைதரணி கடக்கிறவன் கோவின் வாலைப் பிடித்துக்கொண்டு போகக்கடவனிறே. அப்படியே உன்னை அபேக்ஷிக்கவேணுமோ என்றபடி. திருவடி தான் இப்படித் தண்டிக்கவேணுமென்று சொல்வது 'பவேயம் ஶரணம் ஹி வ:' என்கிறது நிலைநிற்கிறதா என்று ஶோதி(யி)க்கைக்காக என்று அருளிச் செய்வர். 'ரக்ஷணம் கார்யம்' என்னாதே 'கருணம் கார்யம்' என்றதுக்கு பாவம் — இவர்கள்புண்யபாபமித்யாதி. தியங்குகிறபடி=மயங்குகிறபடி. நற்குதிரையாக=ஒத்தாரில்லாதவராக. நற்குதிரை—ஒத்தாரில்லாமையும், இறுமாந்திருக்கையும். இசங்குகை = நகருகை.

30. दीपो नेत्रातुरस्येव प्रतिकूलासि मे दृढम् । 118. 17.

தீபோ நேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்ருடம்॥

ப-ரை. நேத்ராதுரஸ்ய = கண் நோவுள்ளவனுக்கு, தீபஃ இவ = விளக்குபோலே, மே = எனக்கு, ப்ரதிகூலா = வருத்தத்தைத் தருகிறவளாக, அஸி = இருக்கிறாய் த்ருடம் = (இது) உறுதியானது.

ஈடு. (தி-வாய் 7-3-7-) இதுக்கு ஆளவந்தார் அருளிச்செய்யும்படி,— நேத்ரதோஷத்தால் வந்தது போக்கி, தீபதோஷத்தால் வந்ததன்று என்று.

31. संगत्या भरतः श्रीमान् राज्यार्थी चेत्स्वयं भवेत् ।
प्रशास्तु वसुधां कृत्स्नामखिलां रघुनन्दनः ॥ 128. 16.

ஸங்கத்யா பரதஃ ஸ்ரீமாந் ராஜ்யார்த்தீ சேத்ஸ்வயம் பவேத்।
ப்ரசாஸ்து வஸுதாம் க்ருத்ஸ்நாமகிலாம் ரகுநந்தநஃ॥

ப-ரை. ஸ்ரீமாந் = சீமானாகிய, பரதஃ = பரதன், ஸங்கத்யா = நமது சேர்க்கையால், ஸ்வயம் = தான், ராஜ்யார்த்தீ = ராஜ்யத்தை விரும்புகிறவனாக, பவேத் சேத் = ஆவானேயாகில், ரகுநந்தநஃ = ரகுகுலப்பிள்ளையாகிய பரதன், க்ருத்ஸ்நாம் வஸுதாம் = பூமிமுழுவதையும், அகிலாம் = கொஞ்சங்கூடவிடாமல், ப்ரசாஸ்து = காப்பாற்றட்டும்.

பெ—வ்யா. (திருவிருத்தம் 51) ஸம்ப்ரேத்யாதி— ஐயர் நியமிக்க ஆச்சியுடைய வரவ்யாஜத்தாலே நாம் ராஜ்யத்தைத் தனக்கே கொடுத்துப் போரச்செய்தேயும் நம்மைப் பின் தொடர்ந்து வந்து, 'சொன்ன நாள் எல்லை கழிந்தாற் பின்னை ஒருக்ஷணம் நான் தாழ்க்கில் தன்னைக் கிடையாது' என்னும்படி நம் நெஞ்சிலே படுத்திப்போனான். இன்று நாம் சென்று கிட்டினால் பதினாலாண்டு பிரிந்து கண்ட ஹர்ஷத்தாலே 'நீ முடிசூடு' என்றால் 'அல்லேன்', என்னாதே அத்தை இசையப்பெறுவது காண். ஐயர் நம்மை முடிசூட்டப் பாரித்துப் பெறாதே யொழிந்த இழவு நாம் பிள்ளையை முடிசூட்டிக்கண்டு தீரப்பெறுவது காண். 'ஸம்ப்ரஹ்ருஷ்டமநா ஸ

வெக்ஷ:’ என்கிறத்தை ‘ஸாவெக்ஷ:’ என்று திருத்தி, கீழ்விழியாலே பார்த்துப் போனாரென்று பொருள் சொன்னபடியை பட்டர் கேட்டருளி ‘அது வேண்டா காண். கிடந்த பாடந் தனக்கே பொருள் சொல்லலாம் காண்’ என்று, ‘இவ்வுபகாரணங்களைக் கொண்டு நாம் பிள்ளையை முடிசூட்டிக் காணப் பெற்றிலோம் என்னுமபேக்ஷையோடே போனாரென்கிறதுகாண்’என்றருளிச்செய்தார்.

அநும்— ‘ராஜ்யேந ஸங்கத்யா’ என்று சேர்த்து, பரதனனவன் ராஜ்யத்தோட்டை ஸங்கத்தாலே ராஜ்யத்தை அபேக்ஷித்திருப்பரோ? அறிந்து வாரும். அபேக்ஷித்தாராகில் நாம் இங்கே யிருக்கிறோமென்று பெருமாளுக்குக் கருத்தாக நாட்டார் சொல்லுமர்த்தம். அன்றிக்கே ‘ராஜ்யேந’ என்கிற த்ருதீயை த்விதீயார்த்தத் திலேயாய், நம்மோட்டை ஸங்கத்தாலே நாம் அவரை ராஜ்யத்திலே வைத்தால், அர்த்தீ பவேத்— அர்த்திப்பரோ-- இரப்பரோ? அறிந்து வாரும் என்று நம்மாசார்யர்கள் அருளிச் செய்யுமர்த்தம். இத்தை அருளிச் செய்கிறார்— ஐயரித்யாதி. இஸ்ஸ்லோகத்துக்கு இப்படி அர்த்தம் கொள்வது முன்புள்ள ஸ்லோகத்தைப் பற்ற என்றருளிச்செய்கிறார்— ஸைநிரித்யாதி. ‘த்ருஷ்டிம் தத்ராவிசாலயந்’ என்று அபிஷேகோபகரணங்களை நன்றாகப் பாராமல் ‘ஸாவேக்ஷ:’என்று சற்றே கடாக்ஷித்துக் கொண்டு போனார் என்று நாட்டாரர்த்தம். தத்ர ஆ விசாலயந் என்று அபிஷேகோபகரணங்களை நன்றாகப் பார்த்து எழுந்தருளினார். ஆகையாலே ஸாபேக்ஷ: என்று இருந்தபடியாக வேணுமென்று பட்டர். அபிப்ராயம் அறிய வரவிட்டாராகில் மீண்டுவருந்தனையும் அங்கே தானேயிருக்க வேண்டியிருக்க, பெருமாள் தாமே எழுந்தருளக் கூடுமோ’ என்னில், திருவடி இங்கிதஜ்ஞராகையாலே அபிப்ராயம் அறிந்து வாராதே இருந்தாரென்று பா[வா]வஜ்ஞராகையாலே தாமே எழுந்தருளினார் என்று கண்டு கொள்வது.

32. न हि ते राजपुत्रं तं काषायाम्बरधारिणम् ।
परिभोक्तुं व्यवस्यन्ति पौरा वै धर्मवत्सलम् ॥ 128. 33.

ந ஹி தெ ராஜவுத்ரம் தம் காஷாயாம்பரயாரிணம் ।
வரிஜொக்தும் வ்யவஸ்யந்தி வௌரா வெ யமவத்ஸலம் ॥

ப—ரை. காஷாயாம்பரயாரிணம் = காஷாயவஸ்த்ரம் தரித்தவனும், யமவத்ஸலம் = தர்மத்தில் ப்ரியமுள்ளவனும், ராஜவுத்ரம் = ராஜகுமாரனுமான, தம் = அந்த பரதனை, வரிஜொ

த்ரஷ்டும் = அநுபவிக்க, தே = அந்த, பௌரா: = பட்டணத்துஜனங்கள், நஹி வ்யவஸ்யந்தி வை = முயலவேயில்லை.

ஈடு. (தி.வாய் 9-2-2) நஹி த்ருப்தி— அருகேயிருக்கச் செய்தேயும் இவனைச் சூழவிருக்கிற பௌரரானவர்கள், இவனை அநுபவிக்கையில் நசையற்றார்கள். அதுக்கடி என்னென்னில், ராஜவ்ருத்தம்— பெருமாள் பேரநின்றவநந்தரம் முடிந்தவன் மகனன்றோ, இவனே தான் நமக்குத் தொங்கப் புகுகிறான் என்றிருந்தார்கள். தர்மவத்ஸலம்— இதுக்குமவனோடு ஒக்கும். தர்மத்துக்காகத் தன்னை அழியமாறினனிறே அவன்.

அரும்— நசை=மேலாசை. தொங்குகை=இருக்கை. அவனோடு=சக்ரவர்த்தியோடு. தர்மத்துக்குக்காக விதி. இவனும் 'தமயனிருக்கத் தம்பி முடி சூடக்கடவனல்ல' என்கிற தர்மத்திலே வத்ஸலனென்றபடி.

33. ततो हर्षसमुद्भूतो निस्वनो दिवमस्पृशत् ।
स्त्रीबालयुववृद्धानां रामोऽयमिति कीर्तिते ॥ 130. 31.

ததோ ஹர்ஷஸமுத்பூதோ நிஸ்வநோ திவமஸ்ப்ருசத்।
ஸ்த்ரீபாலயுவவ்ருத்தாநாம் ராமோऽயமிதி கீர்த்திதே ॥

ப—ரை, தத: = பிறகு, அயம் ராம: = இவர் ராமன் (இதோ ராமன்) இதி = என்று, கீர்த்திதே (ஸதி) = சொல்லப்பட்டபொழுது, ஸ்த்ரீபாலயுவவ்ருத்தாநாம் = பெண்பிள்ளைகளுக்கும் சிறுபிள்ளைகளுக்கும் யுவர்களுக்கும் கிழவர்களுக்கும், ஹர்ஷஸமுத்பூத: = ஸந்தோஷத்தாலுண்டான, நிஸ்வந: = கூச்சல், திவம் = ஸ்வர்க்கத்தை, அஸ்ப்ருசத் = தொட்டது.

ஈடு. (தி-வாய். 3. 7. 3.) 'தந்தாம் கற்பழியும் வார்த்தை சொன்னால்' என்றிருக்கும் ஸ்த்ரீகள், முதலிலே வார்த்தை சொல்ல அறியாத பாலர்கள், வாய்விட்டொன்றும் சொல்லாத யுவாக்கள், கரணபாடவமில்லாத வ்ருத்தர்கள், இவர்களித்தனைபேரும் வாய்விட்டேத்தும்படியாயிற்றுப் பெருமானழகு.

34. प्रदेहि सुभगे हारं यस्य तुष्टासि भामिनि । 131. 80.

ப்ரதேஹி ஸுபகே ஹாரம் யஸ்ய துஷ்டாஸி பாமினி ।

பதவுரை. ஸுபகே = ஸௌபாக்கியம்பொருந்திய, பாமினி = அழகுள்ள ஸீதாய், யஸ்ய = எவனிடம், துஷ்டா அஸி = ஸந்தோஷமுள்ளவளாக இருக்கின்றாயோ; (அவனுக்கு) ஹாரம் = முத்துமாலையை, ப்ரதேஹி = கொடு,

பெ—வ்யா. (திருப்பல்லாண்டு-8) ப்ரதேஹீத்யாதி— இந்த்ரன் வரக்காட்டின ஹாரத்தைப்பெருமாள் வாங்கிப் பார்த்தருளிப் பிராட்டிக்குக் கொடுக்கிறபோது, அத்தை வாங்குகிறவள் பெருமாளை ஒரு திருக்கண்ணாலும் திருவடியை ஒரு திருக்கண்ணாலும் பார்த்து வாங்கினாள் 'வேக்ஷிதஜ்ஞாஸ்து கோஸலா:' என்று, பார்வையிற்கருத்தறியுமவராகையாலே, அவனுக்குக்கொடுக்கலாகாதோ என்றருளினார். ஸுபகே—அடியார் ஏற்றமறிந்து கொண்டாடுகைக்கீடான ஸௌபாக்யமுள்ளது உனக்கேயன்றோவென்ன, உம்முடைய திருவுள்ளத்தாலேயன்றோ நான் கொடுக்கிறதென்று பிராட்டியருளிச்செய்ய, நான் முற்பாடனைப் பெருமையாலே உன்னுடைய உகப்பின் கார்யத்தைக் கொடுக்கலாகாதோ என்றார்.

35. रामो रामो राम इति प्रजानामभवन्कथाः ।
रामभूतं जगदभूत् रामे राज्यं प्रशासति ॥ 131. 101.

ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந்கதா: ।
ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி ॥

ப—ரை. ப்ரஜாநாம் = ஜனங்களுக்கு, ராம: ராம: ராம: இதி = 'ராமன் ராமன் ராமன் என்று, கதா: = பேச்சுக்கள், அபவந் = நிகழ்ந்தன. ராமே = ஸ்ரீராமன், ராஜ்யம் = ராஜ்யத்தை, ப்ரஶாஸதி (ஸதி) = ரக்ஷிக்கும்பொழுது, ஜகத் = உலகம், ராமபூதம் = ராமமயமாகவே, அபூத் = இருந்தது.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் வ்யாக்யாநம். (அமலனாதிபிரான் 2) ராமோ ராமோ ராம இதி— யாதும் தக்கு கட்டுகையாலே மீளுகிறதித்தனை என்றிறே நிர்வ

ப்பது. இத்த்ரைவித்ய(ஜெ வியு)த்துக்குப்பொருள்— ரூபௌ தார்யகுணங்களெல்லாவற்றையும் வடிவழகும், (ரூபௌதார்யகுணை: என்கிறபடி?) அத்தை அநுபவிக்கக் கொடுக்கையும், கொடாதின்றால் இருமாப்பற்றிருக்கையும். 'வாக்ஸாமர்த்யம்' என்று (?) ஸ்த்ரீ பும் விபாகமற ப்ரவணராமாகாரமுண்டாயிருக்கையாலே வீதராக(ம)ரைச் சொல்லுகிறது. ப்ராப்தவிஷய ப்ராவண்யமிறே ஜிதேந்திரியத்வமாகிறது. ஜநா:— மாதாபிதாக்களுக்கன்று, வஸிஷ்ட்டாதிகளுக்கன்று, ஜநிதர்மாக்களுக்கு. கதா:— லோக யாத்ரைக்கு உறுப்பாம் வார்த்தைகளும் பெருமாளைப்பற்றியல்லதிராது, ராமபூதம் ஜகதபூத்— ஜகத்தடைய ராமாத்வை(தெ)தமாய்த்து. 'வேதாத்மிகம் ஸர்வம்' என்கிறபொது வல்ல, ராமபூதம் என்று ராமாத்வைதமாய்த்து, ப்ரஹ்மாத்வைதத்தை வ்யாவர்த்திக்கிறது. பெருமாள் சுண்டுவிரல்கொண்டு லீலாரஸமநுபவிக்கிற காலத்திலேயோ என்னில், ராமே ராஜ்யம் ப்ரசாஸதி— த(ஓ)ஹ பச என்கிற காலத்திலே (?)

ஈடு.(திருவாய். 7. 3. 1.) ராமோ ராமோ ராமஇதி—சோறு சோறு சோறு என்பாரைப்போலே. ஜநாநாமேவகதா:—ஜநிதர்மாக்களுக்கெல்லாம் பாசுரமிதுவே. ராமபூதம் ஜகதபூத்— நாட்டங்க ராமாத்வைதமானபடி. நித்யவிபூதியிலே பரிமாறக்கடவது இங்கே பரிமாறுகைக்கு ஹேது என்னென்னில், ராமே ராஜ்யம் ப்ரசாஸதி— நாட்டங்களும் தந்தாமுடைய கர்மபலம் புஜிக்கப் பெற்றார்களில்லை, ராமபாக்யமே அநுபவித்துவிட்டது.

யுத்தகாண்டம் முற்றிற்று



# உத்தரகாண்டம்.

1. स्नेहो मे परमो राजन् त्वयि नित्यं प्रतिष्ठितः ।
भक्तिश्च नियता वीर भावो नान्यत्र गच्छति ॥

ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:
பக்திஶ்ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி ॥

ப-ரை. ராஜந் = அரசரே, த்வயி = தேவரீரிடத்தில், மே = எனக்கு, பரம: = மேலான, ஸ்நேஹ: = அன்பு, நித்யம் = எப்போதும், ப்ரதிஷ்டித: = உறைத்திருக்கிறது. வீர = வீரரே, பக்தி: ச = பக்தியும், நியதா = உறுதியுள்ளது. பாவ: = மனம், அந்யத்ர = வேறிடத்தில், ந கச்சதி = செல்லுகிறதில்லை (திஷ்டதா நித்யஹா, நாந்யத்ர கச்சதா என்று கோஶங்களில் காணப்படுகிறது)

பெ-வ்யா. (அமலனுதிபிரான் ப்ரவேஶம்) ஸ்நேஹோ மே பரம:— என்றனளவன்றால் யானுடையவன்பு. ராஜந் த்வயி— இதுதானும் என்னால் வந்ததன்று; அதுவுமவனதின்னருளே. நித்யம் ப்ரதிஷ்டித:— இன்றன்றாகில் மற்றொருபோது கொடும்பாகிறேமென்ன, அங்ஙன்செய்யுமதன்று, தர்மியைப் பற்றிவருகையாலே. ‹நின்னலாலிலேன் காண்› என்னுமாபோலே. பக்திஶ்ச நியதா— ஸ்நேஹமாவதென், பக்திபாவதென்னென்னில்— பெருமாளையொழியச்செல்லாமை பிறந்து வ்யதிரேகத்தில் முடிந்த சக்ரவர்த்திநிலை ஸ்நேஹம். ‘பக்தியாவது— ‹நில்› என்ன, ‹குருஷ்வ› என்னும்படியாய் முறையறிந்து பற்றின இளையபெருமாள்நிலை வீர— தன்னைத் தோற்பித்த துறை. உம்முடைய வீரங்கொண்டு புறம்பே வென்றீரென்ன இங்கு வெல்ல முடியாது. தானும் வீரனுகையாலே தோற்பித்த துறையைப் பிடித்துப் பேசுகிறான். பாவோ நாந்யத்ர கச்சதி— என்னை மீட்டாராகிலும் என்னுடைய நெஞ்சை மீட்கப் போகாது. ‘அந்யத்ர‘ என்கிறது ‘மற்றாரானுமுண்டென்பார்‘ என்னுமாபோலே கொடுபோக நினைத்த தேசத்தின் பேரும் கூடத் தனக்கு அஸஹ்யமாயிருக்கிறபடி. (ரு. 7-5-1. லும் இவ்வாறேஇருக்கிறது)

முற்றிற்று.

* न मन्थराया न च मातुरस्या दोषो न राज्ञो न च राघवस्य ।
वनप्रवेशे रघुनन्दनस्य मत्पापमेवात्र निमित्तमासीत् ॥

𑌨 𑌮𑌨𑍍𑌥𑌰𑌾𑌯𑌾 𑌨 𑌚 𑌮𑌾𑌤𑍁𑌰𑌸𑍍𑌯𑌾 𑌦𑍋𑌷𑍋 𑌨 𑌰𑌾𑌜𑍍𑌞𑍋
𑌨 𑌚 𑌰𑌾𑌘𑌵𑌸𑍍𑌯 । 𑌵𑌨𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑍇 𑌰𑌘𑍁𑌨𑌨𑍍𑌦𑌨𑌸𑍍𑌯
𑌮𑌤𑍍𑌪𑌾𑌪𑌮𑍇𑌵𑌾𑌤𑍍𑌰 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌮𑌾𑌸𑍀𑌤𑍍 ॥

ப—ரை. 𑌰𑌘𑍁𑌨𑌨𑍍𑌦𑌨𑌸𑍍𑌯 = ராமனுடைய, (ராமன்) 𑌵𑌨𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑍇 = காடு புகுந்து வஸிப்பதில், 𑌮𑌨𑍍𑌥𑌰𑌾𑌯𑌾: = மந்தரையினுடைய, 𑌦𑍋𑌷: = குற்றம், 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨 = காரணமல்ல; 𑌅𑌸𑍍𑌯𑌾: 𑌮𑌾𑌤𑍁: = இந்த (என்) தாயினுடைய, 𑌦𑍋𑌷: 𑌚 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨 = குற்றமும் காரணமன்று; 𑌰𑌾𑌜𑍍𑌞: = தசரதனுடைய, 𑌦𑍋𑌷: 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨 = குற்றமும் ஹேதுவல்ல; 𑌰𑌾𑌘𑌵𑌸𑍍𑌯 = ராமனுடைய, 𑌦𑍋𑌷: 𑌚 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨 = குற்றமும் காரணமன்று; 𑌅𑌤𑍍𑌰 = இந்த விஷயத்தில், 𑌮𑌤𑍍𑌪𑌾𑌪𑌮𑍍 𑌏𑌵 = எனது பாபமே, 𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌮𑍍 = காரணமாக, 𑌆𑌸𑍀𑌤𑍍 = இருந்தது.

பெ—வ்யா. (திருநெடுந்தாண்டகம். 12-) 𑌨 𑌮𑌨𑍍𑌥𑌰𑌾𑌯𑌾:— இவ்வனர்த்தத்துக்கெல்லாம் ஹேதுபூதை மந்தரை என்றுநினையா, அவளுடைய தோஷமன்று. அவள் வார்த்தை கேட்ட கைகேயி தோஷமென்று நினைத்தான்; 𑌨 𑌚 𑌮𑌾𑌤𑍁𑌰𑌸𑍍𑌯𑌾:— இவளுடைய தோஷமுமன்று. இவள் வார்த்தை கேட்ட சக்ரவர்த்திதோஷமென்று நினைத்தான்; 𑌦𑍋𑌷𑍋 𑌨 𑌰𑌾𑌜𑍍𑌞:— ராஜாவுக்கு ஒரு தோஷமுமில்லை. அவன் வார்த்தையைக் கேட்டுத் தமக்கு வகுத்த அபிஷேகத்தைப் போகட்டுக் காட்டிலே போன அவர் குற்றமித்தனை; 𑌨 𑌚 𑌰𑌾𑌘𑌵𑌸𑍍𑌯— அவர்க்குத் தான் குற்றமென்? அவர் அபி(ஷி)ஷிக்தநாயிருந்தால் அநுகூலவ்ருத்தி பண்ணக் கடவனாயிருக்க, அதுக்கல்லாத என் பாபமே இவ்வனர்த்தத்துக்கெல்லாம் ஹேதுபூதம். 𑌵𑌨𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑍇 𑌰𑌘𑍁𑌨𑌨𑍍𑌦𑌨𑌸𑍍𑌯— இக்குடி வாழப் பிறந்த செல்வப்பிள்ளை வநவாஸம் பண்ணுகைக்கு நிமித்தம் என் பாபமேயாமித்தனை.

கூனி சொன்னது கைகேயிக்குக் கேட்கவேண்டா. அவள் சொன்னது சக்ரவர்த்திக்குக் கேட்கவேண்டா. அவன் சொன்னது பெருமாளுக்குக் கேட்கவேண்டா. கூனி சொன்னது கேட்கவேண்டாதொழிகிறது— அடியாட்டியாகையாலே. கைகேயிசொன்னது சக்ரவர்த்திக்குக் கேட்கவேண்டாதொழிகிறதென்னென்னில், ஸ்த்ரீ புத்ர வாத்ஸல்யத்தாலே சொன்ன வார்த்தையை ப்ர்த்தாவுக்குக் கேட்கவேணுமோ? சக்ரவர்த்தி சொன்னது பெருமாளுக்குக் கேட்கவேண்டாவோ என்னில், தர்மாபா(ஸா)ஸத்தை ஆலம்பநமாகக் கொண்டு ஸ்த்ரீ பாரதந்த்ர்யத்தாலே ப்ரமித்துச் சொன்ன வார்த்தையைப் பெருமாளுக்குக் கேட்கவேணுமோ? தம்முடைய அந்வயவ்யதிரேகங்களில் நான் படும்பாடு அறிவர், தாம் ராஜ்யப்ராப்தரென்னுமிடம் அறிவர், ஆனபின்பு அவனைக் கட்டி இட்டுவைத்து ராஜ்யத்தை ஆளத் தட்டென்? அவன் சொன்ன வசநத்தை அநாதரித்து ராஜ்யத்தை ஆண்டாராகில் தம்முடைய வ்யதிரேகத்தில் நான் முடியாதபடி ரக்ஷித்தாராகலயிற்றதே. ஆகையால் என்பாபமே இதுக்கு நிமித்தமென்றானிறே ஸ்ரீபரதாழ்வான்.

* இந்த ஶ்லோகம் ராமாயணத்தில் இப்போது காணவில்லை.

---